உ

செந்திலாண்டவன் துணை



# திருச்செந்திற் பிரபந்தங்கள்

(பதினுறில் பதின்மூன்று)

ஆசிரியர்

மகான், வண்ணச்சரபம்

திருப்புகழ்ச் சுவாமிகள், முருகதாச சுவாமிகள்

என வழங்கும்

அருள்மிகு தண்டபாணி சுவாமிகள்.

வெளியீடு:

ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி தேவஸ்தானம்

திருச்செந்தூர்.

உ

திருச்செந்திலாண்டவன் துணை

# பதிப்புரை

"திருச்செந்திற் பிரபந்தம்" என்னும் இந்நூலைத் திருச்செந்தூர்த் தேவத்தான சார்பில் வெளியிட வாய்ப்புக் கிடைத்தது பற்றி உளம் மகிழ்கிறோம். இதனை வெளியிட ஊக்கிய கோவை சிரவணபுரம் கௌமார மடத்துத் தலைவர் அருள்திரு சுந்தர அடிகளார் அவர்களுக்கு எங்கள் நன்றியுரியதாகுக.

இதனை வெளியிடத் திருவுளங்கொண்டு முன்னாள் அறங்காவலர் குழுத் தலைவராயிருந்த இலஞ்சி வள்ளல் திரு. I. A. சிதம்பரம் பிள்ளையவர்கள் எல்லா முன்னேற்பாடுகளையும் செய்து வைத்திருந்தார்கள். ஆனால் அவர்களிருந்து வெளியிட திருவருள் கூட்டவில்லை. அவர்களுக்குத் தேவத்தானத்தார் நன்றி என்றும் உரியது.

இப்பிரபந்தங்கள் நன்கு வெளிவர நூற்களைத் தந்தும் சில கடினச் சந்திப் புணர்ச்சியுள்ள நூற்களுக்கு உரையெழுதியும் பல்லாற்றானும் உதவிய திருவாமாத்தூர் கௌமார மடத்துத் தலைவர் திரு. தி. செ. முருகதாச ஐயா அவர்களுக்கும் அதற்குறுதுணையா யிருந்த கோவை நாகராஜய்யர், கிருஷ்ணையர் ஆகியோர்களுக்கும், அச்சுப்படிகளைத் திருத்தியுதவிய நெல்லைத் தமிழாசிரியர் திரு. தி. சு. ஆறுமுகனார் அவர்களுக்கும், இப்பிரபந்தங்களை நன்முறையில் அச்சிட்டுத் தந்த திருநெல்வேலி, உமா அச்சக அதிபர் திரு. டி. கே. கணபதிப் பிள்ளை அவர்களுக்கும் எங்கள் நன்றி உரியதாகுக.

இவ்வெளியீட்டுக்குச் சிறந்த முன்னுரையொன்றினைத் தக்க காலத்துத் தந்துதவிய சென்னைப் பச்சையப்பன் கல்லூரிப் பள்ளித் தலைமைத் தமிழாசிரியர் வித்துவான் அம்பை இரா. சங்கரனார் அவர்கட்கும் எங்கள் நன்றியறிதலைத் தெரிவித்துக்கொள்தலோடு மேற்கூறிய பெருமக்கள் யாவருக்கும் திருச்செந்திலாண்டவன் திருவருள் மேன்மேலும் சுரக்க அவனருளையே வணங்கி வேண்டுகின்றோம்.

இப்பிரபந்தங்களை யாவரும் வாங்கிப் படித்து அலைவாய் மேவிய அம்மானின் அருள் வாரிதியிற் படிந்து இன்பமார்ந்திருக்க வேண்டுகின்றோம்.

இன்னணம்,

சிவ. ராம. அ. நடராஜ முதலியார்
*அறங்காவலர் குழுத் தலைவர்,*

எஸ். கணேச நாடார், பி. ஏ.
எஸ். கே. இராமச்சந்திரத் தேவர்
ஆ. நல்லகண்ணு
ஏ. சின்ன அழகிரிசாமி நாயுடு
*அறங்காவலர்கள்*

திருச்செந்தூர்
14—1—69

வி. சௌ. கோதண்டபாணி
பி. எஸ்ஸி., பி. எல்.
*நிர்வாக அலுவலர்.*



திருச்செந்தூர் முருகன்

உ

திருச்செந்திலாண்டவன் துணை

# முன்னுரை

அமிழ்தினுமினிய நம் தமிழ்மொழியதனில் மிகச் சிறந்த பக்தி இலக்கியங்கள் காலநிலைக்கேற்றவாறு அவ்வக்காலத்துச் சிறந்து வாழ்ந்த அடியார் பெருமக்களால் இயற்றப்பட்டுள்ளன. அந்நிலையில் பத்தொன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்து சிறந்த, முருகனடியாராம் வண்ணச்சரபம் தண்டபாணி அடிகள் நம் செந்தில் மேய வள்ளிமணாளனைப் பாடிப் பரவித் திருச்செந்திற் பிரபந்தங்கள் என்னும் பெயரில் 16 நூல்களை இயற்றியுள்ளார்கள்.

அம்முனிபுங்கவர் திக்கெலாம் புகழும் திருநெல்வேலியில் வாழ்ந்துவந்த செந்திநயகம் பிள்ளை என்பவருக்கும் பேய்ச்சிமுத்தம்மையாருக்கும் விகாரி யாண்டு கார்த்திகை 6-ஆம் நாளில் (1839) அருமை மகவாக வாய்க்கப் பெற்றவர். அடிகளாருக்குப் பெற்றோர் சூட்டிய இளமைப் பெயர் சங்கரலிங்கம் என்பதாகும். அடிகளின் ஆறுவதாண்டில் திரு. செந்தில்நாயகம் பிள்ளையவர்கள் மறையவே, சீதாராம நாயக்கர் என்பவரால் அடிகளார் ஆட்கொள்ளப்பெற்று, இறைவழிபாட்டுக்குரிய சில செயல் முறைகளையும் அவர் தெரிந்துகொண்டார். அன்று முதல் ஆற்றிவருவதே வேல் வழிபாடாகும்.

இவர்தம் எட்டரையாண்டில் இறைவன் திருவருள் கைவரப்பெற்று சுரண்டை என்னும் ஊரில் செய்யுள் பாடத் தொடங்கினர். இவர் எப்பொழுதும் ஏடும் கையுமாக விருப்பார். திருவருள் தூண்டவே பல கவிகளை எழுத முற்படுவார். அவ்வாறு பல்லாயிரக் கணக்கான

நன்னெறியில் செலுத்துதற்கும் பல நூல்கள் இயற்றி யுள்ளார். சில சமயங்களில் பாக்கள் எழுதத் தடை ஏற் படும்போது திருவருள் செலுத்தவில்லை என்பதறிந்து அப்பாக்களைக் கிழித்தெறிந்து விடுவாராம். அவ்வாறு எறியப்பட்டனபோக தற்போது கிடைப்பனவே ஏறக் குறைய ஐம்பதாயிரம் பாக்கள் எனக் கூறுகின்றனர். ஒருசமயம் வள்ளியூர் மலைக்குச் சென்று முருகனை வணங்கிக் கல்லாடை புனைந்து துறவுக்கோலம் பூண் டார்.

ஓரமயம் திருச்செந்திலாண்டவனே தம் கனவில் தோன்றி நூல் பாடுமாறருள்பாலிக்க அதன்படி இப்பிர பந்தங்கள் பதினுறினையும் அடிகள் பாடினதாக அவர் வரலாறு கூறுகின்றது. இப்பதினுறு நூல்களையும் பாடிய பின்னர் திருச்செந்திற் பதியிலேயே அரங்கேற் றம் செய்ததாகவும் பல்லாயிரக் கணக்கான அன்பர்கள் கேட்டுப் பக்திப் பரவசமுற்றனர் என்றும் தெரிகிறது. அதற்குப் பின்னர் பெருமான் திருவருள் அப்பாக்களைப் பலரும் அறிந்து படித்துப் பாடியுய்ய இப்பொழுதுதான் வாய்ப்பருளியதுபோலும்.

பாண்டி நாட்டிலுள்ள திருமலையில் முருகன் காட்சி தராமை கண்டு அம்மலை மீதிருந்துருண்டு கீழே வீழ்ந் தும் அவனருள் அவரைத் தாங்கிப் பிழைக்கச் செய்தது. பல புலவர்களிடமும் வாதிட்டு தண்டபாணி அடிகள் வெற்றிபெற்றுள்ளார். இறைவன் பெயரால் நிகழும் உயிர்ப்பலியாதிய கொடிய செயல்களை யெல்லாம் கண் டித்தார். உருக்கமாகப் பல பாக்களும் பாடி அம்மக்களை விழிப்புணர்ச்சி பெறச்செய்து நன்னிலையில் நிறுத்தினர். பழநித் திருவாயிரம், தில்லைத் திருவாயிரம், போன்ற ஏழாயிரப் பிரபந்தங்களும் புலவர் புராணம், அருணகிரி நாத சுவாமிகள் புராணம், திருவாமாத்தூர்த்தல புரா ணம் முதலிய புராண நூல்களும் வண்ணச் சந்த இலக் கண நூல்கள் பலவும் பாடியுள்ளர்.

இவ்வடிகள் வடலூர் இராமலிங்க சுவாமிகள், யாழ்ப் பாணம் ஆறுமுகநாவலர் காலத்தவர். அவர்களுடன்

நெருங்கிப் பழகியதாகவும் தெரிகிறது. மேலும் அந்தாதி, கலம்பகம், நிரோட்டகம் முதலிய சிறு பிரபந்த வகைகளிலும் பல நூல்கள் பாடியுள்ளார். இறுதியாக நடுநாட்டில் உள்ள திருவாமாத்தூரில் விளம்பி ஆண்டு ஆனி 23–ஆம் நாள் (1898) முருகன் திருவருளில் தோய்ந்தின்புற்றனர்.

இவர் முருகனையே வழிபடு கடவுளாகக் கொண்டவர் ஆதலின் முருகதாச சுவாமிகள் எனவும், அருணகிரிநாத சுவாமிகளிடத்து ஒப்பற்ற அன்பு பூண்டொழுகி அவரியற்றிய திருப்புகழ்ப் பாடல்களையே பாடிக்கொண்டிருத்தலின் திருப்புகழ்ச் சுவாமிகள் எனவும் கையில் தண்டேந்தி கௌபீனதாரியாய் மெய்யெலாம் நீறுபூசி விளங்கிய பெருமானாதலின் தண்டபாணி சுவாமிகள் எனவும் மக்களால் அழைக்கப்பெற்றார்.

இவர் சைவ சமயத்தின் உட்பிரிவாகிய கௌமார சமயத்தை மேற்கொண்டு முருகனையே தனிப் பரம்பொருளெனக்கொண்டு வாழ்ந்தவர். அதனால் அச்சமயப் பெருமை குறிக்கும் நூல்களும் பல எழுதியுள்ளார். தமிழ் அலங்காரம் முதலிய நூல்கள் தமிழ்மொழி குறித்து இவர் ஆற்றிய தொண்டிற்கறிகுறியாகத் திகழ்கின்றன. இவ்வடிகள் தமிழிற்கும் சமயத்திற்கும் செய்த தொண்டுகள் அளப்பில. அவற்றுள் இத்திருச் செந்திற் பிரபந்தங்கள் தலையிடத்தைப் பெற்றுள்ளன. (இச்சுவாமிகள் வரலாற்று விரிவு தனிநூலில் காண்க.)

இப்பதினாறு நூல்களையும் படிப்போர் முருகனுடைய ஒப்பற்ற சிறப்பியல்புகளைப் பல்வேறு கோணத்திலறிந்து அவனடியாராவது திண்ணம்.

அதனாற்றான் அப்பிரபந்தங்களைத் திருச்செந்தூர் தேவத்தானத்தார் மக்கள் படித்துய்யும் வண்ணம் தேவத்தான வெளியீடாக வெளியிட முனைந்துள்ளனர். அவர்கள் முயற்சி மிகவும் பாராட்டுக்குரியதாகும். இப்பிரபந்

தங்கள் திருவாமாத்தூர் கௌமார மடத்தில் குடத்துள் இட்ட விளக்கென மக்கள் படித்துணர வாய்ப்பற்ற நிலையில் இருந்தன. அவற்றினை வெளிக்கொண்டுவர முயன்ற யாவரும் போற்றற்குரியோராவர். மேலும் இப்பிரபந்தங்களுள் சிலேடையந்தாதி, திரிபந்தாதி, யமகவந்தாதி என்னும் மூன்று நூல்களும் உரையிலையேல் கருத்து விளக்கமுருவாதலின் அவற்றிற்குத் திருவாமாத்தூர் கௌமார மடத்துத் தலைவர் திரு. தி. செ. முருகதாச ஐயா உரையும் எழுதி யுதவியுள்ளார்கள். அவர்கள் இப்பதிப்பு வெளிவர எடுத்துக் கொண்ட முயற்சி மிகப் பாராட்டத் தக்கதாகும். அவர்களுக்குத் திருச்செந்திலாண்டவன் திருவருள் சுரந்து அவர்கள் திருமரபு நீடூழி தழைக்க அருள் புரிவாஞக.

இந்நூல் பல ஆண்டுகளுக்கு முன்னரே வெளியிடப்பெற்றிருக்க வேண்டும். இதனை வெளியிடுவதற்காக இத்தேவத்தான முன்னுள் அறங்காவலர் குழுத் தலைவர், உயர்திருவிஞர் I. A. சிதம்பரம்பிள்ளை அவர்கள் முயன்றிருக்கின்ருர்கள். இருப்பினும் ''அடுத்து முயன்ருலும் ஆகுநாளன்றி எடுத்த கருமங்களாகா'' வாதலின் எம்பெருமான் திருவருட்குறிப்பு இந்நாளில்தான் வெளியிட இருந்தது போலும்.

அப்பெரியார் விட்டுச்சென்ற பணியை நிறைவேற்ற வேண்டிய பொறுப்பு தற்போதைய அறங்காவலர் குழுத் தலைவர் திரு. சிவ. ராம. அ. நடருஜ முதலியார் அவர்களைச் சாரும் வண்ணம் திருச்செந்திலாண்டவன் திருவருள் துணை செய்தது.

அவரோடு திரு S. கணேச நாடார் B. A. அவர்களும் திரு S. K. இராமச்சந்திரத் தேவர் அவர்களும் திரு A. நல்லகண்ணு அவர்களும் திரு A. சின்ன அழகிரிசாமி நாயுடு அவர்களும் ஒத்த உளத்தினராயிருந்து தேவத்தானப் பணிகள் சிறந்திலங்க உதவி வருவது மிகவும் போற்றற் பாலதாம்.

நிர்வாக அலுவலர் திரு. கோதண்டபாணி நாயுடு அவர்கள் அமைதியே யுருவானவர். ஆய்ந்து தெளிந்து செயலாற்றும் உத்தமர். அவரும் இத்தேவத்தானத்துப் பணியாற்ற வாய்ப்பேற்பட்டது ஒரு நல்ல சூழ்நிலையே யாகும். அவன் திருத்தொண்டுக்குத் தக்க சூழ்நிலையை அமைத்துத் தருவதும் அவன் திருவருட் குறிப்புத் தானே! ஆகவே, இந்நற்சூழ்நிலையில் இத்திருச்செந் திற் பிரபந்தங்கள் வெளிவருகின்றன.

திருச்செந்திற் பிரபந்தங்கள் என்னும் வரிசையில் உள்ள பதினாறு நூல்கள் வருமாறு: 1) திருச்செந்தில் வெண்பா அந்தாதி 2) திருச்செந்தூர்ச் சிலேடை வெண்பா 3) திருச்செந்தில் திரிபந்தாதி 4) யமக அந்தாதி 5) திருச்செந்தில் பதிற்றுப் பத்தந்தாதி 6) செந்திநாயக சதகம் 7) திருச்செந்திலுலா 8) திருச் செந்தில் சந்தமாலிகைத் திருப்புகழ் 9) திருச்செந்தில் நவரச மஞ்சரி 10) திருச்செந்தில் தசாங்க வகுப்பு 11) திருச்செந்தில் குஞ்சரிமாலை 12) வீரவாகு வாளலங் காரம் 13) வீரவாகு வண்ணப்பதிகம் 14) திருச்செந் தில் அகப்பொருட்கோவை 15) கௌமார விஜயம் 16) திருச்செந்தூர் வள்ளிநாயகி பிள்ளைத்தமிழ்.

இவற்றுள் ஏற்கனவே அகப்பொருட்கோவை, கௌமார விஜயம், வள்ளிநாயகி பிள்ளைத்தமிழ் என்னும் மூன்று நூல்களும் தனியாக அச்சிடப் பட்டுள்ளதால் ஏனைய பதின்மூன்று நூல்கள் மாத்திரம் இவ் வெளி யீட்டிலிடம் பெற்றுள்ளன. உரையுடன் கூடிய சிலேடை வெண்பா, திரிபந்தாதி, யமக வந்தாதி ஆகியன இரண்டாம் பகுதியில் இடம் பெற்றுள்ளன.

மேலும் தண்டபாணி சுவாமிகள் திருச்செந்தூரைப் பற்றி இயற்றியருளிய (1) பன்னிரு பாமாலை-12 பாக்கள் (2) திரிலோக சுதந்தரர் பதிகம்-12 பாக்கள் (3) திருச் செந்தூர்த் திருப்புகழ்ப் பதிகம்-12 பாக்கள். ஆக இம்

முப்பத்தாறு பாடல்களையும் பிற்சேர்க்கையாக இந்நூலுட னேயே சேர்த்து வெளியிட்டுள்ளோம்.

இதனை அடக்க விலைப் பதிப்பாகவே தேவத்தானத் தார் வெளியிடுகின்றனராதலின் யாவரும் வாங்கிப் படித்துப் பயன்பெறுவார்களாக.

இப்பதிப்பில் ஏதாவது குற்றங்களிருக்கின் எடுத்துக் காட்டின் அடுத்த பதிப்பில் திருத்தி அவை வெளியிட வாய்ப்பாயிருக்கும் என்பதையும் தேவத்தானத்தார் சார் பில் கேட்டுக்கொள்கின்றேன்.

அடியேனது வழிபடு கடவுளாம் திருச்செந்திலாண் டவன் திருவருள் யாண்டும் சுரந்து மக்களை நன்னிலையி லிருத்தி ஆட்கொள்ள அவன் செம்மைசால் புகழ்மிக்க திருவடியிணைகளை வாழ்த்தி வணங்குகின்றேன்.

வாழ்க உலகெலாம்.

இன்னணம்

சென்னை—1
14—1—'69

இரா. சங்கரன்,
தலைமைத் தமிழாசிரியர்,
பச்சையப்பன் கல்லூரிப் பள்ளி.



திருப்புகழ்ச் சுவாமிகள், முருகதாச சுவாமிகள்

**அருள்மிகு தண்டபாணி சுவாமிகள்**

தோற்றம்: 28—11—1839 திருவருட்பேறு: 5—7—1898

உ

செந்திலாண்டவன் துணை

உள்ளுறை

# திருச்செந்திற் பிரபந்தங்கள்

## முதற் பகுதி


| | பக்கம் |
|---|---|
| வெண்பா அந்தாதி | 1 |
| பதிற்றுப்பத்தந்தாதி | 19 |
| செந்தினாயக சதகம் | 49 |
| உலா | 84 |
| சந்தமாலிகைத் திருப்புகழ் | 93 |
| நவரசமஞ்சரி | 189 |
| தசாங்க வகுப்பு | 213 |
| குஞ்சரிமாலை | 236 |
| வாளலங்காரம் | 269 |
| வண்ணப்பதிகம் | 303 |


## இரண்டாம் பகுதி
(உரையுடன்)


| | |
|---|---|
| சிலேடை வெண்பா | 1 |
| திரிபந்தாதி | 71 |
| யமக அந்தாதி | 145 |


## பிற்சேர்க்கை


புன்னிருபாமாலை

திரிலோக சுதந்தரர் பதிகம்

திருச்செந்தூர்த் திருப்புகழ்ப் பதிகம்

உ

முருகக் கடவுள் துணை

# திருச்செந்திற் பிரபந்தம் பதினுறில் 1-வது வெண்பா அந்தாதி

## அணிந்துரை

(நேரிசை வெண்பா)

செந்திற் பதிக்குமரன் செப்பியவா றிவ்வெண்பா
அந்தாதி தன்னை யகங்கனிந்து - தந்தவன்சீர்த்
தண்டபா ணிப்பேர்த் தமிழ்முனிவன் தென்பாண்டி
மண்டலத்து நெல்லைப்பூ மான்

திருச்செந்திலாண்டவன் மீது, பகழிக்கூத்தர், குமரகுருபரர், அருணகிரிநாதர், சிவப்பிரகாசர் போன்ற அருளாளர் பலர், பலவகையான துதிப்பனுவல்களைப் பாடியுள்ளனர். இன்றைக்கு நூற்றிருபத்து ஒன்பதாண்டு கட்கு முன் (28-11-1839-ல்) திருநெல்வேலியிற் சைவ வேளாள மரபினரான செந்திநாயகம் பிள்ளையென்பாரது தவப்புதல்வராய்த் தோன்றியவர், வண்ணச்சரபம் அருள்மிகு தண்டபாணி சுவாமிகள். தமது இளமை முதல் திருச்செந்தூரில் நீண்ட தொடர்பும் பற்று முடையராய் விளங்கினர். திரிலோகசுதந்தர வேதியர் களிடத்தும் முருகப்பெருமான் ஆணைப்படி பெருமதிப் புடன் வாழ்ந்தனர். ஓர்நாள் செந்திலாதிபன் நனவில் ஒரு பெரியார்மீது ஆவேசித்துக்கூறிய அருளுரைப்படி பதினுறு விதப் பிரபந்தங்களைப் பாடத் தொடங்கினர். அவை முருகப் பெருமானுக்குப் பனிரண்டு, தெய்வயானை வள்ளிநாயகி இவர்களுக்கு ஒவ்வொன்று, வீரவாகுத் தேவருக்கு இரண்டு என்றமைக்குமாறு பெருமான் கட்டளையிட்டனர்.

இந்நூலாசிரியர் வரலாறு மிகை ஆயினும் முன்னுரையாக இதற்கேற்ப இச்சம்பவம் குறிக்கப்பட்டுளது. சந்தர்ப்பம்போல, பிற்பகுதிகளில் சிறிது சிறிது வெளி வரும். முதற்பா வெண்பா என்ற மரபு பற்றி முதலாவது பகுதியான இந்நூல் வெண்பா அந்தாதி என்றமைத் தனர் என்று கொள்ளலாம். இப்படி ஒவ்வொன்றும் ஒரு சிறப்புடையது.

உ

முருகக் கடவுள் துணை

# வெண்பா அந்தாதி

### கணபதி துதி - காப்பு - வெண்பா

செந்துவர்வெற் பென்றிலகு சேந்தனடி யார்தமிழ்போற்
சிந்து முழங்குதிருச் செந்தூரில் – வந்துமுதல்
வேண்டு மவரை வினையொழிக்கு மெய்வழியிற்
றூண்டுகளிற் றானை துணை.

### நூல்

சீர்மருவு செந்திநகர்ச் செவ்வேளைத் தேவர்புகழ்
பேர்மருவு வேற்கைப் பெருமானைக் – கார்மருவு
கண்டமுளான் பெற்றநுதற் கண்மணியைக் கைகுவித்துக்
கொண்டவர்க்கே தீரும் குறை. 1

குறைவனைத்து மெண்ணிக் கொதிக்கின்ற நெஞ்சில்
நிறைவமையும் வண்ணம் நினையாய் – மறையவர்கள்
ஆர்க்குமெழிற் செந்திநக ராதிபனே! ஆகமழை
நீர்க்குமிழி யாய்விடுமுன் னே. 2

---

காப்பு: செந்துவர் வெற்பு – சிவந்த பவள மலை போன்ற, சேந்தன் – முருகன், சிந்து – கடல், தூண்டுகளிற்றுஆனை – தூண்டி விநாயகர். (செந்திலாண்டவன் சந்நிதிப் பிரகாரம் இடையிலுள்ள தல விநாயகர்.

1. கார்மருவு கண்டம் உளான் – நீலகண்டனாகிய சிவபிரான், கண்மணி – கண்ணினிடம் தோன்றிய முருகன்.

2. ஆகம் – சரீரம், நீர்க்குமிழிபோல் தோன்றி உடனழியும் இயல்பினதாம்.

முன்னே யுரைத்த மொழியொன்றுந் தப்பாமல்
இன்னே அருளற் கிசைகுவாய் – மின்னேரும்
வேலாயு தம்பிடித்து மிக்கதிருச் செந்தூரிற்
கோலாக லஞ்செய் குகா. 3

குகனே! திருச்செந்தூர்க் கொற்றவனே! யீசன்
மகனே! யெனத்துதித்து வாழ்ந்தும் – இகலோருக்(கு)
அஞ்சித் தவிக்கும்வண்ணம் அம்புயன்விட் டானெனஎன்
நெஞ்சிற் கருதுகில்லே னே. 4

ஏனே னெனஅடியே னெப்போ தழைத்தாலும்
வானே வழியா வரவேண்டும் – மீனேரும்
கண்ணார் இருவர்புணர் கந்தனே செந்திநகர்
அண்ணா வடிவே லவா. 5

வேலவனைச் செந்திநகர் வித்தகனை வேடமகள்
மாலவனைப் பச்சைமயில் வாகனனைச் – சாலக்
கருதி அருட்காட்சி கண்டவரைக் கண்டு
சுருதிநலங் கொள்ளல் சுகம். 6

சுகமுனிவன் கேட்டுமகிழ் தூயபுகழ்ச் செந்தூர்க்
குகனருளே தஞ்சமெனக் கொண்டால் – இகபரமும்
சித்திக்கும், ஆனந்தச் செல்வஞ் செழிக்கும் உண்மைப்
பத்திக்கும் உண்டாம் பலன். 7

பலங்கொண்ட சூர்மாவிற் பட்டுருவத் தொட்டு
வலங்கொண்ட வேலுடையான் வாழும் – நலங்கொண்ட
செந்திற் பதியிடத்திற் சென்றவனைச் செந்தமிழால்
வந்திக்கப் பெற்றேன் வரம். 8

---

3. முன்னே உரைத்தமொழி – தனக்கு முருகன் கூறிய அருளுரை.

4. இகலோர் – பகைவர், அம்புயத்தான் – பிரமன்.

6. வேடமகள் – வள்ளிநாயகி, மாலவன் – இச்சையுடையவன்.

வரந்தந்து மாயா மயக்கடல்விட் டேறக்
கரந்தந்து காக்கக் கடன்காண் – சுரந்தந்து
தென்னவனை முன்னாண்ட செந்திநகர்த் தேசிகனே
இன்னமிரங் காதிருப்ப தேன். 9

ஏனற் புனங்காத் திருந்தாள்முன் ஏகியந்நாள்
வானத் தவளை மறந்தாயோ – ஞானமொடு
செல்வமிகு செந்திநகர்ச் செவ்வேளே செஞ்சடையில்
வில்வமணி வார்பெறும்வாழ் வே. 10

வாழைக் கனியின் மதுஆறு பாய்ந்துவளர்
தாழைப் பொழில்சூழ் தருஞ்செந்தூர் – ஊழைத்
திருத்துமென வந்தடைந்தேன் செவ்வேற் குகனே
வருத்துதொழில் ஒன்றை மற. 11

மறமகள்தன் பாற்போய் வருந்திருத்தா ளன்பே
திறமெனக்கொண் டேனுதவி செய்வாய் – அறமுயல்வார்
வாழுந் திருச்செந்தூர் வள்ளலே மற்றொன்றைத்
தாழுமோ என்றன் தலை. 12

தலையாறு கொண்டவனே சந்தவரைச் செந்தில்
நிலையாக நின்றவனே நீயன்(று) – இலையூடு
வைத்தவெண்ணீ றீந்துரைத்த வார்த்தை மறந்தனையோ
எய்த்தடியேன் வாடுகின்றே னே. 13

---

9. கரம்தந்து – கைகொடுத்து, தென்னவனை – பாண்டியனை, ஆண்ட சம்பந்தமூர்த்தியார் வந்த காலத்துச் சமண சமயத்திலிருந்து. சைவ சமயத்த வணக்கியது. முருகன் அவதாரம் சம்பந்தர் தோற்றமென்ற கருத்து.

10. ஏனற்புனம் – தினைக்கொல்லை, வானத்தவள் – தெய்வயானை யம்மை.

11 தாழை – தாழை, கடற்கரையில் வாழும் இயல்பினது, நெய்தல் நிலத்துக்குரியது. தென்னைக்கும் ஒரு பெயருண்டு. ஏற்றவாறு கொள்க. ஊழை – விதி வலிமையை – சேல்பட்டழிந்ததென்று தொடங்கும் கந்தரலங்காரப் பாட்டு - முருகன் கால்பட்டுப் பிரமன் விதிமாறிய தென்பதைக் குறிக்கொண்டது.

12. மற்றொன்றை – உனக்கு வேறாக ஒரு கடவுளை என்க.

13 வெண்ணீறு........வார்த்தை – தமது அநுபவக் குறிப்பு.

ஏதம் பலகோடி யான்புரிந்த துண்டெனினும்
நீதந்த நீறவற்றை நீக்காதோ – சூதமறக்
காய்ந்தவடி வேற்கரத்துக் கந்தனே செந்தமிழ்நூல்
ஆய்ந்தவர்கள் வாழ்செந்தி லா. 14

செந்திற் பதியானே செக்கர்வெட்குஞ் சீரானே
தந்திப் பரியூரும் சண்முகனே – மந்திக்
குரங்கனைய நெஞ்சகத்தின் கோரம் சகியேன்
இரங்கியெதிர் வந்தருள்வா யே. 15

வாயே உனக்குநல்ல வாழ்வெதென்றால் வைவேற்கைச்
சேயே திருச்செந்தூர்ச் செவ்வேளே – நீயே
துணையென்று சந்ததமுஞ் சொல்வதொன்றே கண்டாய்
இணையின் றியபுகழுண் டே. 16

உண்டேயுன் னுள்ளத் துரிமையென்றன் மீதெனவுட்
கொண்டே யுலகிற் குதிக்கின்றேன் – தண்டேந்தும்
கைம்மறலி கண்ணெதிரிற் காட்டாதே செந்திநகர்ச்
செம்மலையே வேற்கையர சே. 17

அரசாகிச் செந்திநக ராளுங் குகனே
முரசாரும் நின்கோயில் முன்பிற் – பரசாரும்
கையான் முதலாம் கடவுளரெல் லாம்வணங்கல்
பொய்யாத வண்ணம் புரி. 18

புரிசடையிற் கங்கைவைத்த புண்ணியனும் போதப்
பெரியகட லுண்டவனும் பேணித் – தெரிய
உரைத்ததனை என்றனக்கும் ஓதியருள் சந்த
வரைத்தலத்துச் செந்தின்முதல் வா. 19

14. ஏதம் – தவறு, சூதம் அற – சூரனாகிய மாமரம் அழியும்படி.

15. செக்கர்–மாலை நேரத்துச் செந்நிற ஒளி. முருகன் உருவம் செந்நிற மென்பதாம்.

17. மறலி – எமன், 18 பரசு ஆரும்கையான் – மழுவணிந்த பரமேசன்.

19. போத – ஞானவிளக்கமுடைய அகத்தியர். கடல்நீரை யுண்டன ரென்பது வரலாறு.

முதல்வனெனத் தேறுநர்க்கும் முக்கட் பரமன்
புதல்வனெனப் போற்றுநர்க்கும் பொய்தீர்த்(து) – இதமகிதம்
கண்டுதவி செய்யுமெழிற் கந்தனருட் காட்சிநலம்
உண்டுதிருச் செந்தினக ருள். 20

உள்ளந் தளர உரையுந் தடுமாற
வெள்ளங் கலுழ்ந்து விழிசோர – மெள்ளவந்துன்
சந்நிதியில் நின்றறியேன் சந்தவரைச் செந்தினகர்ச்
செந்நிறவே லாவுதவி செய். 21

செய்ய பவளத் திருவாய் திறந்தொருசொல்
ஐயமறச் சொற்றருள லாகாதோ – வையகமும்
வானகமும் போற்றுசெந்தின் மாநகரில் வாழ்குகனே
நானடிமை யன்றோ நவில். 22

நவிலுங் கலைமுழுதும் நான்முகனைக் குட்டிப்
புவிபடைத்த நின்சீர் புகன்றும் – கவிபகரென்(று)
என்னையும்நீ கேட்டவிதம் என்னோ இலங்குசெந்தூர்
தன்னையினி தாண்டருள்கந் தா. 23

கந்தா திருச்செந்தூர்க் காவலா கன்னிபெற்ற
மைந்தா எனவே வழுத்தாமல் – பந்தாய
கொங்கை மடவார் குணம்பாடிக் கொண்டாடிச்
சங்கைகற்போர்க் குண்டோ தவம். 24

---

20. **இதம்அகிதம் – நன்மைதீமை,** முருகனை முழு முதலாகவும், சிவ குமாரனாகவும் மக்கள் தம் நிலைக்கேற்ப வழிபடுவர். இருவர்க்கும் ஏற்றபடி முருகனருள்புரிவான்.

23. **செந்திலாதிபன் தன்னிடம் தமிழ்த் துதி நூல் பாட ஆணையிட்ட செய்தி. அதன் மூலம்** ஏற்பட்டவைகளே இதோடு தொடர்ந்து வெளி வரும் நூல்களாகும்.

24. **கன்னி – உமையவள்.**

தவமுந் திருநீறுந் தண்டமிழுந் தந்தும்
கவலைப் படுமாறு கண்டாய் – பவளநிறக்
குன்றமெனச் செந்திநகர்க் கோயிலிடம் வாழ்குகனே
உன்றனக்கீ தாமோ உரை 25

உரையும் உணர்வுமிழந் தோங்கார மென்னும்
கரையுங் கடந்தபதங் காட்டும் – விரைமருவு
வன்ன மலர்க்கடம்பு மன்னுசெந்தின் மாநகரின்
முன்னவன்றன் ஆறு முகம். 26

முகமன் பகர்ந்துபலர் முன்றிலிற்போய் நின்றேற்(று)
அகம்நொந்து வாடா தருள்வாய் – பகல்வந்து
திங்களொடு கொஞ்சுபொழிற் செந்திநகர்ச் சீர்விரும்பும்
எங்கள் குலதெய்வ மே, 27

தெய்வம் அநந்தமெனத் தேயத்தார் செப்புமொரு
பொய்வழக்கை யெண்ணியெண்ணிப் புண்படேன் - நெய்வழிதார்ச்
செச்சைமலர் சூடுமெழிற் செந்திநகர்ச் சேவகன்றன்
அச்சைநினைந் தாராய்ந்த தால். 28

ஆலிற் சதுரர்க் கறமுரைத்துள் ளானும்,அதன்
மேலிற் றுயில்வானும் வேதியனும் – வேலிற்
சிறந்தபுகழ்ச் செந்திநகர்ச் சேவகனைப் போற்றி
இறந்தழியா வாழ்வுபெற்றா ரே. 29

---

26. விரைமருவு - மணம் நிறைந்து, வன்ன - அழகுடைய

27. முகமன் - உபசார மொழி, பகல்வந்து திங்களொடு கொஞ்சு பொழில் - சந்திர சூரியர்கள் வந்து தங்கவும் தென்றல் உலாவவும் கூடிய சோலைகள், வந்து - தென்றல், பகல் - பகலை உண்டாக்கும் சூரியன் திங்கள் – சந்திரன் என்க.

23. நெய்வழிதார்செச்சை - தேன் வடியும் வெட்சி மலர் மாலை. அச்சை முருகன் வடிவத்தை.

29 ஆலில் - கல்லாலமர நிழலில். சதுரர் - சனகாதிம நால்வர். மேலிற்றுயில்வான் - ஆலிலைப்பள்ளியினனான திருமால். வேதியன் பிரமன்

பெற்றோர் களிகூரப் பெண்ணிரண்டு தந்தவரும்
மற்றோர்க ளாயபல வானவரும் – முற்றோகை
கொள்ளமுது சூருடலைக் கூறுகண்ட கோமானே
எள்ளருஞ்சீர்ச் செந்திற் கிறை. 30

இறையளவும் மெய்யுணர்ச்சி யில்லாத பாவி
குறைமுழுதுந் தீரக் குறித்தேன் – பிறையணியும்
பெம்மான் மகனே பெருகுபுகழ்ச் செந்திநகர்
அம்மானே நீயறியா யா. 31

ஆயு மறைகள் அறியாத ஆனந்தம்
ஈயும் படியென் றிசைவாயோ – ஆயும்
மனமும் உடலும்நல்க வல்லார்க் கிரங்கும்
கனமருவு செந்தின்முரு கா. 32

கா!கா! எனவே கதறுவேன் றன்னளவும்
நீகாவார் போலிருக்கை நீதமோ – வாகாரும்
செந்திநகர்ச் சண்முகனே செய்யமயில் வாகனத்தில்
வந்திலைநீ றின்றருளு வாய். 33

அருளும் பொருளுமறி வானந்தப் பேறும்
தெருளும் பெருகுநலஞ் செப்பும் – மருளுமனத்
தீய ரணுகரிய செந்திநகர் வாழ்குமர
நாயகனைப் போற்றுகின்ற நா. 34

நாவார வாழ்த்தும் நலம்பெற்றும் நானிலத்தில்
ஈவாரை நாடி யிளைக்கின்றேன் – நீவாரா(து)
இன்னந் துயர்ப்படுத்தல் ஏனோ இலங்குசெந்தூர்
மன்னவனே வேற்கைவய வா. 35

30 பெண் இரண்டு - வள்ளி, தெய்வயானை. தந்தவர் – இந்திரனும், நம்பிராசனும் தந்தவன்

31. இறையளவும் - சிறிதேனும்.

32, வாகு ஆரும் - அழகு பொருந்திய. ஒரு வந்திலைநீறு – வந்து இலை நீறு எனப்பிரிக்க.

34. போற்றுகின்ற நா - பெருகுநலம் செப்பும் என இயைக்க.

35. வயவா – வீரனே

வாளைக் கயல்பாயும் வண்பணைச்செந் தூர்முருகன்
தாளைக் கருதித் தவஞ்செய்யீர் – நாளைக்கு
வந்தடருங் கூற்றுவனை மாய்த்தருளால் வானகத்தில்
உந்தமைவாழ் விப்பவரா ரோ. 36

ஆரோ ஒருவன் அடுத்தடுத்தென் றன்கனவில்
பாரோரொப் பாமை பகர்ந்தானே – நீரோலம்
சங்கையறக் கொண்டசெந்திற் சண்முகனே தண்புனத்து
மங்கைபங்கா நீயல்ல வா. 37

அல்லற் பிணியில் அயருந் தமியேனுட்
சொல்லற் கரியமொழி சொல்லியநீ – இல்லறமும்
அன்றித் துறவறமும் அன்றியுற விட்டனையே
வென்றிமிகு செந்தில்வாழ் வே. 38

வாழ்வு மலிந்து மதிமருண்ட மாந்தரிடம்
தாழ்வு பகர்ந்து சலிக்கின்ற – பாழ்வினையை
என்றற் கமையாதே ஈடில்புகழ்ச் செந்தில்நகர்க்
குன்றத்தில் வாழுங் குகா. 39

குகைமருவு பல்கோடி குன்றிடத்துஞ் சென்றுன்
தகைவிளக்குஞ் சந்தத் தமிழின் – மிகைபாடி
வானவரு மெச்சமகிழ் வாழ்வெனக்கென் றீகுவையோ
ஈனமில்சீர்ச் செந்திலா னே. 40

ஆனே றுகைத்தாற்(கு) அருளியதைத் தென்பொதியைக்
கோனே ருரைத்த குருநாதா – மானேர்கண்
மின்னார்க ளாடல் விளங்குதிருச் செந்தூரா
என்னாசை நீயறிவா யே. 41

---

**36.** **பணை – வயல்**

**37.** **பாரோர் – உலக மக்கள். ஒப்பானை – அநுபூதியுண்மை. நீர் ஓலம் - கடலலை முழக்கம் ஆரோ என்று ஐயமுற்றார்போல, நீநான் என்று. வினாவிடையும் கூறியதறிக.**

**39.** **குன்றம் – சந்தனமலை.**

**41.** **ஆன் ஏறு – இடபம்.**

ஏல நெடுங்குழலார்க் கிச்சைகொண்டிங் கீடழிந்து
கால பயத்தாற் கலங்கினேன் – நீலமயில்
வாகனனே செந்தினகர் வாழ்வேமுன் வந்துனது
கோகனகத் தாளைக் கொடு. 42

கொடுங்காலன் றன்னுருவக் கோரங் கருதி
நடுங்காதுன் ஆறெழுத்தை நாடி – நெடுங்காலம்
ஆயிற்றே யின்னமும்வந் தாண்டிலையே செந்தினகர்க்
கோயிற்றே வாவேற் குகா. 43

வேற்குகனைச் செந்தினகர் மேவும் விறல்வேளை
நாற்குலத்து வித்தகர்க்கும் நல்லோனை – ஆற்குள்
இருந்தாற் கொருசொல் இசைத்தானை யெண்ணிற்
பொருந்தாதோ வுண்மைப் புகழ். 44

புகழ்ச்சி முழுதுமென்னைப் பூவுலகோர் கூறும்
இகழ்ச்சி முழுதுமுன தென்பேன் – நிகழ்ச்சிமுற்றும்
தன்செயலாக் கொண்டசெந்திற் சண்முகனே சத்தியமாய்
என்செயலிங் கொன்றுமில்லை யே. 45

இல்லை செயலொன்றும் என்றனக்கென்(று) யான்விளம்பும்
சொல்லையெவர் சொல்வித்தார் சொல்லுவாய் – தொல்லைவளம்
குன்றாத செந்தினகர்க் கோயிற் குகனே! நீ
யென்றலொப் பாதார் எவர். 46

எவரும் புகழும்நலம் ஏய்ந்ததிருச் செந்தூர்
அவர்தம் புடையிலெனை ஆக்காய்-நவநவமாய்
உள்ளத் தளவில் ஒளித்துவிளை யாடல்செய்யும்
கள்ளத் தனத்துவிசா கா. 47

---

42. ஏல நெடுங் குழலார் - மணம் ஊட்டியநீண்டிய கூந்தல் மடவார். கால பயம் - எம வாதனை. கோகனகத் தாளை - தாமரை போன்ற திருவடியை.

சாகா வரமுந் தருவாயென்(று) யானடைந்தேன்
மோகாந்த காரத்தில் மூழ்கவிட்டாய் – ஏகாந்தச்
சண்முகனே செந்திநகர்ச் சற்குருவே தாரணியில்
எண்முகமுங் கூறும் இதை. 48

இதுவதுவென் றோதி யிளைக்கு மயல்போய்ப்
பொதுமுதலென் றோர்ந்தும் புலர்ந்தேன் – பதுமமலர்
வாவிமலி செந்திநகர் வாழ்வே மறுகுமென(து)
ஆவி யுனதடைக்க லம். 49

அடைக்கலமென் றந்நா ளடைந்த அமரர்
புடைக்கலகந் தீர்த்த புனிதா – படைக்கலங்கொள்
பன்னிருகை யானே பழுதில்புகழ்ச் செந்தூரா
நின்னிருதாள் ஈந்தருளின் னே. 50

இன்னே யிரங்கிரங்கென் றெத்தனையோ கோடிதரம்
சொன்னேன் அனந்தந் துயர்ப்பட்டேன் – கன்னேயம்
உள்ளார்போல் நீயிருக்க ஒண்ணுதொண் ணுதுசெந்தூர்
வள்ளால் மயிலேறி வா. 51

ஏறுகைத்த பெம்மாற் கியம்பியதை என்னுடனீ
கூறுதியேல் யாவருனைக் கோபிப்பார் – வீறுமதக்
குஞ்சரத்தோ(டு) ஆட்டையுங்கைக் கொண்டிலையோ
தஞ்சமென வந்தமர்கந் தா. [செந்திலுக்கோர் 52

தானே வலியவந்து சாற்றியசொல் அத்தனையும்
ஏனேன் முடியா திருக்கின்றாய் – வானேயும்
குஞ்சரிவாழ் செந்திநகர்க் கோமானே நானினிமேற்
பஞ்சரிக்க மாட்டேனப் பா. 53

---

49. இது அது என்று – இந்தச் சமயம், அந்தச் சமயம் என்ற மத பேத மற்று, எல்லாவற்றிற்கும் பொது முதலான பொருள் என்று அறிந்தும்.

50. புடை - பக்கம்.

51. கன்னேயம் - கல்போன்ற கடின மனம்.

52. குஞ்சரம் – யானை

53. பஞ்சரித்தல் – விடாமல் கேட்டல், நச்சரித்தல் எனவும் கூறலுண்டு.

அப்பன் குணமுனக்குண் டானல் அடியவரை
இப்படிநீ வைப்ப தியல்பன்றே – செப்பரிய
நால்வரைப்போ லிங்கொருவர் நன்கொளிர வேண்டாவோ
போல்வதில்செந் தூரா புகல். 54

புகலிக் கவுணியன்றன் புத்திரனை யேவி
இகலிச் சமணழித்த எந்தாய் – அகல்புவியின்
முத்தமிழ்ச்சீர்ச் செந்தின் முதல்வாஅம் மூர்த்தமொரு
பத்தனுக்கின் றீவாய் பரிந்து. 55

பரியுங் கரியுமணிப் பல்லக்கும் ஏறித்
திரியுஞ் சிலர்மனையிற் சென்று – விரியுங்
கரத்தொடுநின் றேற்கவிடேல் காசறுசெந் தூரில்
வரத்தொகுதி நல்குமிறை வா. 56

வாரணமும் பைங்கிளியும் வன்னமயி லும்பிடித்த
காரணத்தால் வேடர்குலக் கன்னிதான் – சேர
நினைத்தாள் அவளையெந்த நீர்மைபற்றிக் கொண்டாய்
கனைத்தகடற் செந்திமுரு கா. 57

முருகு விரிகடம்பும் மூரிக் குரவும்
பெருகுநிறச் செச்சையும்போற் பேணித் – திருகுமொழிப்
பொல்லேன் கவியும் புனைந்தருள்வாய் செந்தூரில்
வல்லாய் அருள்புரிதே வா. 58

54. அப்பன் குணம் யார் எதைக் கேட்டாலும் தடையின்றிக் கொடுப்பவர் சிவபெருமான் என்பதாம். நால்வர் – சைவசமயாசிரியர். அதுபோல், கௌமாரர் அருளாடல் செய்யப் புரியவில்லையே என்பது.

55. புகலிக்கவுணியன் – சீகாழியில் உதித்த திருஞானசம்பந்தர். மூர்த்தம் - தெய்வ வல்லபம்.

56. பரி – குதிரை. கரி – யானை. விரியும் கரம் – கை விரித்து ஏற்றல். காசு அறு – குற்றமற்ற.

57. வாரணம் – கோழி. சேவல், கிளி, மயில் வைத்திருந்தமையால் வள்ளி உம்மை விரும்பினள், நீர் - எக்காரணம் பற்றி வள்ளியை ஆவல் கொண்டீர்- நீர்மை பற்றி குணத்தைக் கருதி.

58. முருகு – மணம். மூரிக்குரவு – சிறப்புள்ள குராமலர். செச்சை – வெட்சி. இம்மலர்கள் முருகனுக்குரியன. வல்லே – விரைவாக.

தேவாதி தேவனுதற் றீக்கட் புலிங்கமென
மேவா வருஞ்செந்தூர் வித்தகனை – நாவார
வாழ்த்தும் பெருமைபெற்றால் மாநிலத்து மன்னர்வந்து
தாழ்த்துவார் தந்தந் தலை. 59

தலைமைப் பெருமைச் சடாக்கரத்தை நாடும்
நிலைமைக் குரித்தாகி நின்றும் – புலைமருவு
புல்லருக்கும் நாணிப் புலர்ந்தேன் புகழ்ச்செந்தூர்
வல்லவனே நீயுமறி வாய். 60

அறிவாய் வெளியாய் அகண்டமாய் ஆறு
பொறியாகி நின்ற புலவன் – வெறியால்
அளிமுரல்பூம் புன்னைமலி வானதிருச் செந்தூர்க்(கு)
ஒளிருமபி மானமுடை யோன். 61

உடைத்தோலுள் ளான்புதல்வன் ஓதநீர் ஞாலம்
படைத்தோன் தலைபுடைக்கப் பார்த்தோன் – சடைத்தோர்
களிக்குநலங் காட்டுசெந்திற் காவலவ னன்பிற்
குளிக்குமவ ரெந்தங் குழாம். 62

குழுவுங் கவுமாரர் குன்றுதொறுஞ் சென்று
வழுவின் றியதமிழால் வாழ்த்தும் – பொழுதை
வரவழைக்க வல்லாயோ மாட்டாயோ செந்திற்
சரவணப வா!குருநா தா. 63

நாதாந்த மோன நடுவான நாயகனை
வேதாந்த விஞ்சை விளைப்போனைக் – கூதாள
மாலைக் குறத்தி மணாளனைச்செந் தூரினிற்கண்(டு)
ஓலக்கைத் தூதரைவெல் வோம். 64

59. புலிங்கம் – தீப்பொறி.

61. ஆறுபொறி – சடாக்கரம். வெறியால் – தேனை உண்ட மயக்கத்தால்.

62. சடைத்தோர் – சலிப்படைந்தவர்கள்.

63. குழுவும்கவுமாரர் – கூட்டமான முருகனடியவர். விஞ்சை – அறிவு. கூதாளம் – ஒரு வித மலர். வேடர்கள் புனைவது. "கூதாள கிராத குலி" என்பர் வள்ளிநாயகியை, அருணகிரிநாதர்.

ஓமென்ற மந்திரத்தின் உட்பயனை அத்தனொடு
நாமென் றுரைத்தசெந்தி ஞாயகனைத் – தேமென்ற
செந்தமிழாற் போற்றச் சிறிதுஞ் சலியார்பால்
அந்தகன்கைக் காசுசெல்லு மா. 65

மாவைப் பிளக்க வடிவேல் பிடித்தசெந்திற்
றேவைக் கருதித் தெளியாமல் – பாவையர்கள்
ஊடற் குருகி உழலுமெனை யொத்தமுழு
மூடர்க்கும் மோனமெய்து மோ. 66

மோதுந் திரைக்கடல்நீர் முத்தெறியுஞ் செந்திலிலென்
வாதும் பிணக்கும் மறந்தேனே – ஓதும்
புகழும் பிறவும் பொறுத்துப் பொதுவாத்
திகழும் குகன்செயலைத் தேர்ந்து. 67

தெருலவும் வீதித் திருச்செந்திற் சேவகனும்
கூருலவா வேலான் குணங்களையிங்(கு) – ஆருடனே
சொல்லலாம் சொல்லிற் றொலையாது சொன்னமட்டில்
நல்லதென்று கொள்ளார் நரர். 68

நரகம் புகுதார் நமன்கையிற் சிக்கார்
கிரகங்க ளால்வருந்தார் கிள்ளை – பரவுதமிழ்ச்
செந்திற் குகனைத் தினமு மறவாமல்
சிந்திக்கப் பெற்ற சிலர். 69

சிலரன்றிச் செந்திநகர்ச் சேந்த னடியார்
பலரென் றுரைக்கப் படுமோ – உலகறிய
நொந்து மனக்கண்ணால் நோக்கிநோக் கிக்குழைந்து
நைந்தும்அருட் பேறுபெறு நான். 70

---

65 ஓம் என்ற பிரணவப் பொருள் தானே யென்று ஓதியவன் என்பதாம் தேம் இனிமை. கைக்காசு – எமனது சாமர்த்தியம்.

நானென் றிருமாந்து நாட்கழிக்கும் நட்டம்போய்த்
தானென் றமையுந் தவம்பெற்றேன் – தேனென்று
பெய்வேத சாரம் பெருகு திருச்செந்தூர்
வைவேலான் சந்நிதியில் வந்து. 71

வந்திப்ப வர்க்குநல்ல வர்க்கு மறவாமற்
சிந்திப்ப வர்க்குந் திருவருளும் – செந்திற்
பதியிலிருந் தீகின்ற பன்னிருகைச் செவ்வேள்
கதியினுக்கோர் வித்தனையான் காண். 72

காண விரும்புமென்னைக் காசினியி லுள்ளவர்க்கு
நாண விடுத்தனையே ஞாயமோ – சேணளவு
சோலைத் திருச்செந்தூர் துங்கமுறச் செய்யும்வண்ணம்
வேலைத் தரித்ததெய்வ மே. 73

மேவார்க ளாமவுணர் வேரறுத்த வேற்பெருமான்
பாவாண ரேவல்செயும் பான்மையான் – மூவா
முருகோன் திருச்செந்தில் முன்னோன் முராரி
மருகோன் எனையாண்ட வன். 74

ஆண்டலைப்புட் கூவும் அடற்கே தனத்தானைத்
தூண்டகுசீர்ப் பன்னிரண்டு தோளானை – மீண்டும்
பிறவா தருள்செந்திற் பெம்மானைச் சற்றும்
மறவா தெனது மனம். 75

எனது மனந்தானோ எங்கெங்கும் நிற்கும்
உனது திருவருளோ ஓதாய் – அனவரதம்
பல்வார்த்தை யென்பாற் பகர்கின் றதுசெந்திற்
செல்வா சிவதே சிகா. 76

---

71. நான் என்று பேசியிருப்பது சீவ அறிவு. யாவும் அவன் என்றிருப்பது சிவ அறிவு.

72. சேண் அளவு – வானைமுட்டியுள்ள.

73. மூவா – முடிவற்ற.

74. ஆண்டலைப்புள் – சேவல். கேதனம் - கொடி.

தேசிகனுந் தெய்வமும்நின் சீரருளே யென்றுகுறித்(து)
ஆசி பகர்ந்தும் அலமந்தேன் – வாசியென
வன்னமயி லூர்வானே வந்தியர்சூழ் செந்திலில்வாழ்
முன்னவனே என்னவித மோ. 77

மோன மறியேன் முதிருந் தவமறியேன்
ஞான நிலையறியேன் நாயினேன் – ஆனமட்டில்
வந்திப்பேன் கைவிடுமோ வாழ்விக்கு மோவளஞ்சேர்
செந்திநகர்க் கந்தன் செயல். 78

செயலிறந்த பூரணமே தேவர் நிமித்தம்
வயமலிவேற் கந்தனென வந்த – வியனுணரார்
செந்திநகர்க் கோயிலுக்குட் சென்றுலுந் தேர்ந்துகொள்வார்
மந்திரவித் தாம்பிரண வம். 79

பிரணவத்தின் உட்பொருளைப் பேசிப் பிணங்கும்
கரணமறப் பார்க்கும் கடவுள் – அரணம்
திகழ்கின்ற செந்திற் சிறுவனெனச் செப்பி
இகழ்கின்ற வர்க்குநல்லோ னே. 80

நல்லோர் பரவுசெந்தில் நாயகனை நஞ்சுமிழ்வேல்
வல்லோனே யென்று வழுத்தாமல் – பொல்லோனென்(று)
ஏசு மவர்கிலக்கா யிங்கலையும் வம்பருக்கே
பூசுரர்கோன் றன்கைப் பொறி. 81

பொறியும் புலனுமற்ற போத மயமென்(று)
அறியுந் தவர்க்கெளிய னுவான் – வெறிமிஞ்சு
மந்தித் திரள்வாழ் மலர்ச்சோலை மன்னுதிருச்
செந்திற் பதியிலொரு சேய். 82

---

77. வாசி குதிரை. வந்தியர் – பாடகர்கள்,

81. பூசுரர் கோன் – பிரமதேவன்.

82. பொறி – மெய், வாய், கண், மூக்கு, செவி என்பன, புலன் – சுவை, ஒளி, ஊறு, ஓசை, மணம் என்பன.

சேயாய்க் குருவாய்ச் சிவனுக் குவகைநல்கித்
தீயார்க் கெமனுகிச் சித்தருக்குத் – தாயாகிச்
சந்தவரைச் செந்தூர் தனக்கரச னுவதுவே
சுந்தரத்தோட் கந்தன் தொழில். 83

தொழுவார் விழிகாணத் தோகை மயில்மேற்
குழுவாம் புலவரொடு கூடி – நழுவாத
வேல்பிடித்துத் தோன்றுதலே விட்டனையோ செந்திலிற்செங்
கோல்பிடித்த கைக்குகனே கூறு- 84

கூருய மங்கையுடைக் கோமான் குருபரனே
ஆருறு தத்துவத்துக் கப்பாலிற் – றேருத
என்போ லியர்க்கும் இசைந்தநலங் காட்டுசெந்தூர்
அன்போர்க்கே நல்கு மருள். 85

அருளாசை கொண்டவர்போ லம்புவியிற் றேன்றிப்
பொருளாசை மிஞ்சிப் புலர்ந்தேன் – தெருளாளர்
மன்னுதிருச் செந்திநகர் வள்ளலே வந்துரைத்த
நின்னுரைபோற் செய்தருளின் னே. 86

நேயம் பெருத்துமுழு நீறணிந்த வேடமிட்டும்
மாய இருளால் மருள்கின்றேன் – நீயதுகண்(டு)
இன்னந் திருவருட்பே றீந்திலேயே செந்திநகர்
மன்னவனே வெண்சே வலா. 87

சேவற் பதாகைதிகழ் செந்திநகர்ச் சந்தவரைக்
காவற் றெழில்புரியுங் கந்தனையே – ஆவற்
பெருக்கமொடு கைகுவிக்கும் பேறுபெற்ற பேர்க்கே
திருக்ககன்ற ஞானத் திரு. 88

---

85. கூருய............கோமான் – ஒரு பாகத்தில் உமையவளையுடைய சிவன்

திருவும் பெருகருளும் செஞ்சொற் றமிழும்
மருவும் படிகருணை வைக்கும் – கருமறலி
பற்கோரங் காணுர் பரவுதிருச் செந்திநகர்ப்
பொற்கோவில் கொண்ட பொருள். 89

பொருள்நசையாற் பல்வாறு புண்படுவேன் றன்னை
அருணகிரி யென்றுரைத்த தாரோ – தருணமறிந்(து)
ஆளுந் திருச்செந்தி லாதிபனே யுன்னையன்றிக்
கோளுஞ் சிறிதுளது கொல்? 90

கொல்லா விரதமொன்றே குற்றமற்ற தென்றுணர்ந்து
நில்லார் மனத்தகத்தும் நிற்பாயோ – வல்லாண்மைக்
கந்தனே செந்திநகர்க் காவலனே நீநிறைந்த(து)
எந்தவிதம் என்னு டியம்பு, 91

இயமன்கைச் சூலமினி என்செய்யும்? மாரன்
செயமிஞ் சியகணையென் செய்யும் - வியனென்றும்
வேதன்விதி யென்செய்யும் மிக்கதிருச் செந்தூர்வாழ்
நாதனரு ளுண்டே நமக்கு. 92

நமராய னைத்தடிந்த நம்பன் பரவும்
குமரா எனத்தினமுங் கூவும் – தமராவார்
எல்லவரும் வாழவென்றே யீடில்புகழ்ச் செந்தூர்வாழ்
வல்லவனைக் கெஞ்சுமென்றன் வாய். 93

வாய்மை அறிவடக்கம் வண்மை முதலாய
தூய்மை முழுதுந் தொகுத்துதவும் – சேய்மருவு
செந்திநகர்க் கோயிற் றெரிசித்துக் கொண்டபின்னும்
புந்தியிடத் துண்டாமோ பொய். 94

பொய்யும் புலையும் பொருந்தினோர் செந்தமிழால்
வையும் பொழுது மகிழுமே – மெய்யுலகம்
ஏழும் பரவும் எழிற்றிருச்செந் தூரிடத்தில்
வாழு மொருவன் மனம். 95

89. கருமறலி – கருப்பு நிறமுள்ள எமன்.

மனங்கொண்ட பேராண்மை வாழ்வனைத்தும் நல்கும்
கனங்கொண்ட செந்திநகர்க் கந்தன் – தினங்கொண்ட
செந்தமிழின் ஆசை சிறிதுந் தணியானென்(று)
இந்தவிதம் நானறிந்த தே. 96

அறிந்த தனந்தம் அறிவரிய தாகிச்
செறிந்த தனந்தம் திரையால் – மறிந்தபுனற்
சிந்துடையான் செந்திற் றிருவுடையான் செங்கடப்பங்
கொந்துடையான் ஆடுகின்ற கூத்து. 97

கூத்தாடு வான்மகனைக் கொற்றநவ வீரருக்கு
மூத்தானைச் செந்தில் முருகோனைச் – சேத்தார்க்
கடம்பணிந்த திண்புயனைக் காணக் கருதித்
திடம்படுநெஞ் சுள்ளார் சிலர். 98

சிலருக் கருள்புரிந்த செந்திற் குமரன்
பலரைப் பரதவிக்கப் பார்த்தான் – உலகிற்
சிறியேனை ஆள்வானோ சீரழிப்பான் கொல்லோ
அறியேன் அறியேனம் மா. 99

அம்மம்ம செந்திநகர் ஆளும் அயில்வேற்கைச்
செம்ம லருளைத் தினம்நாடி – மும்மலமும்
சிந்த முயலும் திறன்பொருந்துஞ் சித்தருக்குச்
செந்தமிழே ஒப்பில்பெருஞ் சீர். 100

——

**நூற்பயன்**

தண்பாவு செஞ்சொற் றமிழ்த்திருச்செந் தூர்முருகன்
வெண்பா ஒருநூறும் வேண்டுவார் – கண்பாய
பூவுலகும் வானுலகும் போற்றும் புகழ்பொறுத்து
மேவுவரன் னேனடிக்கீழ் மெய்.

**வேலுமயிலுந் துணை.**

98. சேத்தார் – சிவப்பு நிறமான கடப்பமாலை.

உ

முருகக்கடவுள் துணை

# திருச்செந்திற் பிரபந்தம்

# பதிற்றுப் பத்தந்தாதி

---

## அணிந்துரை

### வெண்பா

*இந்தூர் சடைப்பரனும் ஏத்துமருட் சீர்குலவி*
*நந்தூர் கடற்கரைப்பால் நண்ணியவிர் – செந்தூர்ப்*
*பதிற்றுப்பத் தந்தாதிப் பைந்தமிழ்ப்பாக் கற்றுத்*
*துதிப்பவர்க்குண் டாகும் சுகம்.*

"**பதிற்றுப் பத்தந்தாதி**" என்ற இந்நூல், திருச்செந்தூரின் எழுந்தருளியுள்ள குமாரக் கடவுள்மீது பாடப்பெற்ற நூறு கவிகளைக் கொண்டது. பதிற்றுப்பத்து என்றால் பத்துவித யாப்புடையதான பத்துப் பகுதிகளைக் கொண்டு, அந்தாதியாகப் பாடி முடிப்பதென்பது தெரிகிறது. அந்தாதி – ஒரு பாட்டின் முடிவு அடுத்துவரும் பாட்டுக்கு முதலாயிருப்பது என்ற பொருளை யுடையது. அதுவன்றி – நூலாரம்பத்தில் உள்ள சொல்லே, நூலின் முடிவுச் சொல்லாகவும் அமைய வேண்டும் என்பது மரபு.

இது இதன்முன் வெளிவந்த நூல் வரிசையில் திருநெல்வேலி வண்ணச்சரபம், தவத்திரு. தண்டபாணி சுவாமிகள். இயற்றியது. 2, 3, 4-வது நூல்களான சிலேடை, திரிபு, யமகம் போலின்றி எளிய விருத்தப் பாக்களால் ஆன துதி நூலாகும். தமது அநுபூதிகளும், முருகன் அருட்செயலும் விருப்பமும் கலந்து இந்நூலைப் பாடியுள்ளனர் சுவாமிகள். ஏழாவது பகுதியிலுள்ள பத்துப்பாட்டும் சந்தப் பாடலாகும்

அதில் மூன்ருவது பாடலில் மணி மந்திரம் அவுடதம் என்ற மூன்றும் நாணும்படி, திருநீறு பொதிந்த பன்னீரிலைப்பிரசாதம் அன்பர்க்குதவும் சந்நிதானச் சிறப்புக் கூறுகின்ருர்.

11, 12-வது வரிசையி லமைந்த அகப்பொருட் கோவை, கௌமார விஜயம் என்பன சில ஆண்டுகட்கு முன்னரே அச்சானது. அதில், தலைவி கூற்றில் தலைவன் (முருகன்) தன் இளம் பருவத்தில் முற்பட்டு, பச்சிலை யொன்றை யெடுத்தான். அதன் உள்ளிருந்த வெண்ணிறப் பொடியை மேலே தூவினுன். என் வாயிலும் இட்டான். உடனே என் பேதைமை நீங்கியது. அவனது அருட்பேற்றிற்கு உரிய பக்குவ நிலையை அடைந்தேன். அதாவது அவனேடு ஒன்றிவாழும் பரிபக்குவமுற்றேன் என்று இருபொருள்பட, தமது அநுபவத்தோடு ஒத்துச் சிறப்பாகவும் நயமாகவும் "மருத்தீடு கூறல்" என்ற தலைப்பில் கூறுகின்ருர். தலைவன் தன்னைப் பச்சிலையும் பொடியும் கொண்டு மயக்கித் தன்வசப்படுத்தினு னென்ற பொருளை யுடையதுறை.

"முச்சிலொன் றேந்துமன் றேசெந்தில் வாழு முருகன்வந்து
பச்சிலை யொன்றெடுத் தான்விரித் தான்அதிற் பத்திரமா
வைச்சிருக் கும்பொடி யைத்தூவி னுன்சற்று வாயிலிட்டான்
கச்சிருக் குந்தனத் தாரையொத் தேன்அடி காரிகையே.

– தலைவி பாங்கிமுற் பகர்வன. (பாட்டு–218)

திருச்செந்தூர்ப் பெருமான் சந்நிதியில் என்றும் அன்பர் கட்கு வழங்கப்பெறுவது பன்னீர் இலைத் திருநீறேயாம். இது எல்லா நோயையும் போக்குவதென்று பெற்றுப் பூசி உண்டு நலம் பெறுவது கண்கூடு தமது தியான வழிபாட்டில் முருகப் பெருமான் தோன்றி யருளியது ஷை பன்னீரிலை விபூதியேயாம். "பன்னீர்ப்பச் சிலையில்வைத்த தவள நீறே" என்பர் வரலாற்று நூலில். இதைச் சருவபிரசாதமென அருமையுடன் கூறிமகிழ்வர். அன்றியும், "அகத்தியர் ஒரு நிட்டையில் முன்வந்து இந்தவா'றே தந்தார். ஆனல் அது உலர்ந்திருந்தது.

காரணம் தனக்கு முருகன் திருவருள்உபதேசம் செய்த அக் காலத்து உதவியதாயிருக்கலாம். ஆதலாற் காலப்போக்கில் அப்படி உலர்ந்திருந்தது சரியென்று கூறியதை நோக்க அப் பிரசாதத்தின் மதிப்பும் அருமையும் நாம் அறியமுடிகிறது.

இதுபோல், தமது பாடல்களில் பொதுவாக முருகன் அருளாடலையும் புகழையும் வரலாற்றோடு இயையக் கூறுவதுடன், தமது அநுபவ உண்மைகளையும் இணைத்தே கூறுவர். இஃது வரலாறு முழுதும் அறிந்தவர்க்குப் புலனாகும். இவர் திருச்செந்தூர் முருகப்பெருமான் அணிந்த வேலாயுதம் ஒன்றைத் தமது வழிபாட்டிலமைத்துக் கொண்டனர். தமக்கு அபிமானத் தலம் செந்தூர், திருவருணைக் கோபுரத்திளையனார், மயிலம் ஆன மூன்றேயென்று கூறியபாடலில் திருச்செந்தூரை முதலாவதாகக் கூறினார்:

'செந்திற் பதியிற் றிருவருணைக் கோபுரத்தில்
மந்தியுலாம் சோலை மயில்வெற்பில் – வந்தித்துச்
செவ்வேளைக் கண்டோர் திருப்புகழோன் சிந்தையினுக்(கு)
எவ்வேளையுமினியோ ரே.



உ

முருகக் கடவுள் துணை

# பதிற்றுப் பத்தந்தாதி

## காப்பு அறுசீர் - விருத்தம்

பன்னு முத்தமிழ்க் குறுமுனி வகுத்துள
பதிற்றுப்பத் தந்தாதி
என்னு நற்பனு வற்கவி நூறுசொற்
றிலங்கெழிற் றிருச்செந்தூர்
மன்னும் ஆறிரு புயத்தொரு முருகவேள்
மலரடி களிற்சூட்ட
நன்னு தற்படாம் அணிந்துள தூண்டுவி
நாயகன் காப்பாமே.

## நூல் - கலி விருத்தம்

கடல்கு லாவிய பேரொலிச் செந்திலிற் கைவேல்
அடல்கு லாவிய முருகனுக் காட்படும் அவர்பால்
மடல்கு லாவிய கமலநான் முகவனும் மதனும்
கெடல்கு லாவிய மறலியுங் கீழ்ப்படல் நிசமே. 1

நிசமொர் எள்ளள வாயினும் நிகழ்தரும் நெறியிற்
பிசகி டாநடை பயிலும்நான் பெற்றிடத் தகுமோ
பசலை யங்குயத் தார்மிகுஞ் செந்திலம் பதியில்
அசமு கைத்தருள் ஆறுமா முகத்தவன் அருளே. 2

---

காப்பு

குறுமுனி......கவிநூறு – அகத்தியர் வகுத்த இலக்கண வரம்புப்படி நூறு பாட்டுடைய இந்நூல். நுதற்படாம் – நெற்றியில் யானைக்கு அணியும் முகபடாம் என்ற ஓரணி, தூண்டு விநாயகர் – யானை யென்ற இயல்பு பற்றிக் கூறிய உவமையணியாக் கொள்க

1. அடல் – வலிமை, மடல் – இதழ், மதன் – மன்மதன், கெடல் குலாவி – உடலோடு ஒன்றி வாழும் உயிரைப் பிரிக்கும் கெடுதலைப் புரியும் எமன், இம் மூவரும் முருகன் அடியவருக்குக் கீழ்ப்பட்டு அடங்குவர் என்க.

2. பயலை அம் குயத்தார் – தேமல் படர்ந்த அழகிய தனமுடைய பெண்கள், அசம் உகைத்தருள் – ஆட்டை வாகனமாகச் செலுத்திய.

அருளி லாமனக் கயவர்முற் சென்றுசென் றணுகி
மருளு ருநலம் அளித்திட வல்லைகொல் அறியேன்
தெருளு நான்மறை புகழ்திருச் செந்திலந் தெருவில்
உருளு வார்வினைப் பிணிமுழு தொழிக்கும்உத் தமனே. 3

உத்த மத்தவ வேடமிட் டடியரு டுலவிப்
பித்தர் செய்தொழிற் புரியும்நா னென்றருள் பெறுவேன்
சத்த மேகமும் தவழ்தரு சந்தனு சலத்திற்
சித்தர் வந்துவந் தமர்தரு செந்திலா திபனே. 4

செந்தி லாதிபன் திருக்கைவேற் குருபரன் திகழ்வெண்
தந்தி யூர்பவன் சரவணச் சண்முகக் கடவுள்
அந்தி வானிறத் தான்றரு மதலையோ அன்னோன்
புந்தி நாடிய பொருள்கொலோ உணர்ந்தெவர் புகல்வார். 5

புகழு முத்தமிழ்ச் சுவைநய மறிகிலாப் புலவர்
இகலு மித்துயர்க் கென்செய்வேன் இரங்கியாண் டருள்வாய்
அகலு மம்புவி புகழ்திருச் செந்திலில் அளவில்
பகலும் ஓருரு வாயதொத் தவிர்குரு பரனே. 6

பரந்த வான்கலைப் பொருள்முழு தறிகிலேன், பலர்சோ(று)
இரந்த ருந்திமா தவமிகப் புரிகிலேன் எனையாள்:
கரந்த நெஞ்சகக் கள்ளர்கண் காணருங் கந்தா
நிரந்த ரத்திருச் செந்திலில் வாழும்நின் மலனே. 7

---

3. அருள்இலா – இரக்கம் இல்லாத. கயவர் – உலோபிகள், உருளுவார் – திருவீதியிற் புரண்டு, அங்கப்பிரகாரம் புரியும் அன்பர்கள்.

5 வெண்தந்தி - வெண்ணிற யானை. திருஞானவேளம் – முருகனுக்குரியது, புந்திநாடிய பொருள் – மனதிற் கருதும் குருவடிவம்

6. பகல்ஓருருவாய – பல சூரியர் கூடியது போன்ற பேரொளியுடைய மேனி.

7. கரந்த – உண்மையை மறைக்கின்ற, நிரந்தரம் – நாள்தோறும்.

நின்ன ருட்டிருப் பெருக்கமே துணையென நினைத்தும்
இன்னல் வாரியிற் குளித்தனன் ஏனிரங் கிலையோ
பன்ன கத்தினின் ருடிய பச்சைமா மயிலில்
மின்ன னுருடன் விளங்கிய செந்தில்வே லவனே 8

வேலை யிற்பொரு நையிற்கனற் றிரளில்யான் விடுத்த
நூலை யாவையும் ஈவதா நுவன்றசொற் பிழையோ
ஆலை மாமணங் கமழ்தரு செந்திலில் அடைந்தோர்
மாலை வென்றமெய் வாழ்வுறப் புரியும்வா னவனே. 9

வான வாணரு மதித்திட வாழ்வது கருதி
ஈன முற்றநான் இன்புறப் புரியும்நாள் என்றோ
பானல் வாவியம் பொழில்மலி செந்திலம் பதியில்
ஏன லாள்பரத் தினளுடன் வதிதரும் இறையே. 10

வேறு ஷெ தாழிசை

இறையு மெய்யுணர் வின்றிய நாயினேன்
நிறையு மின்ப நெறியுறச் செய்வையோ
மறைமு ழக்க மலிதிருச் செந்திலில்
குறையில் கோயிற் கொளுங்குரு நாதனே. 11

நாத கீத நலந்திகழ் நால்வகை
வேத மும்புகழ் மெய்ப்பொருள் நல்குவாய்
சீத வாரித் திரையொலிச் செந்திலில்
சூத மொன்றைத் துணித்தவை வேலனே. 12

---

8. இன்னல்வாரி - துன்பக் கடல். பன்னகம் – பாம்பு.

9. வேலை – செந்தூர்க் கடல், பொருநை - தாமிரபரணியாறு. கனற்றின் - நெருப்பு, இவைகளில் இவர் சேதித்த தமிழ்ப் பாட்டமைந்த ஏட்டுச் சுவடிகளை, மீண்டு வரச்செய்து தருவதாக முருகன் கூறிய தமது அநுபவம்

10. பானல்வாவி – நீலோற்பல மலருடைய குளம். ஏனலாள் - வள்ளி, பரத்தினள் – தெய்வயானை.

12. நான் வகை வேதம் – இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்பன. சூதம் – மாமரமான சூரன்.

வையு மென்புன் மனங்களி கூர்நலம்
செய்யும் நீருன் திருவுளத் துள்ளதோ
மையு லாம்பொழிற் செந்திலில் வந்துளார்
உய்யு மாறருள் உத்தமத் தெய்வமே. 13

தெய்வ நான்முகன் சென்னியில் ஒன்றைமுன்
கொய்வ தாம்நகம் கொண்டவர் தம்பிரான்
மைவ ரும்பொழில் மன்னிய செந்திலில்
நெய்வ ழிந்தலர் நீபவுல் லாசனே. 14

ஆச கன்ற அருட்டிரு மந்திரம்
பேச வல்ல பெருமைபெற் றுய்வனோ
வாச வன்றரும் மங்கையும் வள்ளியும்
ஏசல் காணும் இயற்செந்தில் எந்தையே. 15

எந்த லோகரும் ஏத்தெழிற் செந்தில்வாழ்
செந்த கைக்கும ரேசனைச் சிந்தியார்
மந்த மாருத வான்சக டூர்மதன்
கந்த வாளிக் கனற்சுடர் நோவரே. 16

நோவ நிந்தை நுவல்பவர்க் கஞ்சுமென்
ஆவல் தீர அருள்வதெக் காலமோ
காவ லாரி கருதெழிற் செந்தில்வாழ்
தேவ தேவ சிவகுரு நாதனே. 17

---

13. நீர் - குணம், மைஉலாம் - மேகம் உலவும்.

14. தம்பிரான் – பிரமன் தலை கொய்த இறைவனது குருவான முருகன்.

15. வாசவன் - இந்திரன்.

16. மந்தமாருதம் - தென்றல், சகடு - தேர், மன்மதனுக்குத் தென்றல் தேர் என்பது மரபு. கந்தவாளி – மணமிக்க பூக்களே அம்பாகும். காமமிக்காருக்கு அது நெருப்பை ஒக்கும் என்பதாம்.

17. காவலாரி - கற்பகத் தருவையுடைய தேவேந்திரன்.

நேயம் வைத்துனை நித்தமும் நத்திடாப்
பேயர் தம்முற் பிணங்கலென் றேயுமோ
தீய ராமவர் சேரருஞ் செந்திலிற்
றூய சேவல் துவசவுற் சாகனே 18

சாக ரத்தரங் கந்தர ளங்குவை
யாக நல்கும் அணிதிகழ் செந்திலிற்
பாக சாதனன் ஆதிய பண்ணவர்
சோக நோய்தவிர்க் குஞ்சுட ருள்ளதே 19

உள்ளம் ஒத்துனை உன்னிலன் ஊர்தொறும்
கள்ளம் ஓதிக் கழிபடச் சுற்றினேன்
எள்ளல் தீர்நலம் எய்துவ(து) எற்றையோ
விள்ள ரும்புகழ்ச் செந்தில்வி னோதனே 20

**வேறு—அறுசீர் விருத்தம்**

நோதருங் கவலைப் பேயால்
நுண்ணறி வனைத்தும் நீங்கிச்
சாதலு மினிய தாகித்
தயங்குவ தறிகி லாயோ
தாதகி முடிக்கும் பெம்மான்
தழல்விழிப் பொறியா வந்தாய்
சீதளப் பொழில்கு லாவும்
செந்திலம் பதியிற் சேயே. 21

சேயமா முகங்க ளாறும்
திருக்கைவேற் புயமுந் நான்கும்
தூயமா மறைக ளேத்தும்
துணைப்பத மலருங் காட்டாய்

19. சாகரத் தரங்கம் – கடல் அலைகள். தாளம் – முத்துக்களை, பாக சாதனன் – இந்திரன், பண்ணவர் – தேவர்கள், சுடர் – சோதி வடிவான முருகன்.

21. நோதரும் – துன்பத்தைத் தருகின்ற, தாதகி – கொன்றை.

தீயசூர்ச் செகுத்துத் தேவர்
சிறைதவிர்த் தருளும் செல்வா
காயகந் தவிர்க்குஞ் செந்தூர்க்
கருணையங் கடவு ளானே. 22

கடல்முதற் புனலிற் றீயிற்
கடையனேன் விடுத்த பாடல்
புடவியிற் கொடுத்தா லன்றிப்
பொன்னடி விழையேன் கண்டாய்
நடமிகப் புரியுந் தோகை
ஞமலியில் இருவரோடும்
இடனகல் திருச்செந் தூரில்
என்றும்வந் திலங்கு வானே. 23

வான்வெளி கனல்நீர் மண்எல்
மதியிய மான ஞாய்
கோன்வழி படும்நின் றாளே
குறியெனக் குறித்தி லேனே
தேன்வழிந் தலருஞ் செச்சைச்
செழுமலர் முடிப்பாய் செந்தூர்
தான்வதி தரற்காம் நல்ல
தலமெனத் தழைத்துள் ளானே 24

தழைசெவிக் கடமா வேறித்
தமநிய நகராள் வானும்
உழையுமுன் உதவ வந்தார்
உன்னையொத் துருகா தாரோ

---

22. காயகம் – வஞ்சம்.
23. ஞமலி – மயில்.
24. இயமானன் – உயிர், வான் – வெளி, தீ, நீர், மண், சந்திரன் சூரியன், உயிர் – இவை இறையியல்பு.
25. தழைசெவிக்கடமா – பெரிய காதையும் மதத்தையும் உடைய ஐராவத யானை, தமநியநகர் – பொன்னுலகம், உழை – மான், பிஞ்ஞகன் – சிவன் கழை – மூங்கில்.

பிழைபொறுத் தருள வல்லாய்
பிஞ்ஞகப் பெருமான் மைந்தா
கழைமலி வயற்செந் தூரிற்
கவின்றரு கந்த வேளே. 25

கந்தநாள் மலர்கள் தூவிக்
கனிதமிழ்க் கவியா லேத்திச்
செந்தகை கருது மென்னைத்
தியக்கறுத் தருளொண் ணாதோ
மந்தமா ருதவெற் பாளும்
வரமுனி மகிழும் வாழ்வாய்ச்
சந்தனு சலத்துச் செந்தூர்
தனிலமர் தனிவே லானே. 26

வேலையும் விடமும் வாளும்
விசிகமும் விளங்குங் கண்ணார்
மாலைவென் றருட்பே றெய்தி
மகிழும்நாள் வருத்தொண் ணாதோ
பாலைநேர் மொழியாள் பாகன்
பரவிய பதத்தம் மானே
ஓலைவெந் தூதர் நாடா
துயர்ந்தசெந் தூருள் ளானே. 27

உள்ளகக் கவலை நோயால்
உழலுமிவ் வுலுத்த னேனைப்
பள்ளநீர்ப் புவியும் வானும்
பரவுநாள் வருவிப் பாயோ
தெள்ளமிழ் தனைய தீஞ்சொற்
றெரிதமிழ்ப் புலமைச் செந்தூர்
வள்ளலே மயிலில் ஆட்டில்
வாரணத் திவர்வல் லானே. 28

---

26. கந்த நாள் மலர் – மணமுடைய புதிய பூ, செந்தகை – செம்மையான திருவுருவம் ஒரு பக்கத்திற் கொண்ட சிவன், வரமுனி – அகத்தியர்.

27 விசிகம் - அம்பு, மாலை - ஆசையை

28 வாரணத்து இவர் – யானையில் ஏறிச் செல்கிற.

வல்லமெய்ப் புலவர் பாடல்
வனைதரு மருமந் தன்னில்
புல்லனேன் தொடுத்த புன்சொற்
புனையவு மிசைவாய் கொல்லோ
நல்லவர் பலர்வந் தாடும்
நளிர்கடற் றிருச்செந் தூரில்
எல்லவர்ப் பிடித்துச் செய்தாங்
கிலங்குவே லெடுத்துற் றோனே. 29

உற்றவா றுணர்த்து வார்போன்
றுரைத்தசொல் லொன்று ளேனும்
பற்றலர் நடுங்கப் பாரிற்
பலிப்பதே விழைந்தே னந்தோ
கற்றவர் மலியுஞ் செந்தூர்க்
கந்தனே கவுரி பாகன்
பெற்றபா லகனே அன்பாற்
பிறப்பிறப் பறச்செய் வானே. 30

(வேறு) கலித்தாழிசை

செய்ச்சீர் மலிசெந் திலில்வந் தயில்வேற்
கைச்சீ ருறுகந் தன்முனின் றிடினே
பைச்சீர் திகழல் குல்படைத் தவர்தம்
பொய்ச்சீர் விழையுந் துயர்போன் றுறுமே. 31

பொன்றூ தநலம் பொலியும் புகழ்மீ(து)
என்று கமிருப் பதறிந் திலையோ
நன்று யிரம்நந் தியசெந் திலில்லூர்
மின்றாழ் கதிர்வேல் கொடுமே யவனே. 32

29. மருமம் – மார்பு, நளிர் – குளிர்ந்த, எல்லவர் – பல சூரியர்கள்.
30. பற்றலர் – பகைவர்கள்.
31. செய்ச்சீர் – வளமுள்ள நன்செய், பொய்ச்சீர் – நிலையற்ற இன்பம் பொன்றும் – அழியும்.
32. என்தாகம் – எனது விருப்பம், நந்திய – பொருந்திய, மின்தாழ்– மின்னலும் நாணும்படி ஒளிமிக்க வேல் என்க.

மேயும் புயல்மிக் குறுசந் தனவெற்(பு)
ஏயும் திகழ்செந் திலிடத் தொருவன்
தாயும் பொருவின் றியதந் தையும்நூல்
ஆயும் குருவா தியும்ஆம் அவனே 33

ஆமாம் எனஅன் றறையும் பலசொல்
ஏமா றவெனைச் செயல்கண் டிலையோ
தேமா அடுசீர் திகழ்செந் திலில்நிற்
கோமா னெனநின் றகுணக் கடலே 34

குணமுங் குறியுங் குலையும் படிகண்(டு)
அணவுங் கலியென் றழியும் பகராய்
பணவங் கதகங் கணர்பங் கினள்பால்
உணவுண் டுயர்செந் திலுறைந் தவனே 35

உறையின் றியவாழ் எனஒள் ளியகூர்
குறையுங் குறையென் றுகுலைந் திடுமோ
மறைவிஞ் சியவங் கியசெந் திலில்வந்(து)
அறையுந் துதியா ளர்தமக் கரசே 36

அரசா கியறம் பொலிசெந் திலில்வாழ்
குரவா அயில்கொண் டவிர்திண் புயனே
பரசா ழிபருங் கரகத் தினர்நீர்
விரவா மலெனக் கருள்மெய் யருளே. 37

---

33. தாயும்............ஆனவன், என்றுயுமெனக் கருள் தந்தையும் நீ - கந்தரநுபூதியுடன் ஒப்பக் கொள்க.

34. தேமா - இனியமாமரம் (சூரன்) ஆம் ஆம் என - தமதறுபக் குறிப்பு.

35. அணவும் - பொருந்துகின்ற, கலி - வறுமை, (வடிவுந் தனமும்) என்பது கந்தரநுபூதி என்ற பாடல். பண-படத்தையுடைய பாம்பை. அங்கத- தோளணியாவும், கங்கண - கையிடத்துப் பூணுகவும் உடைய பரமன்.

36. ஒள்ளியகூர் - விளக்கமான அறிவுத் தெளிவு, குறை - மங்கும் படியான உலகச் சூழல் மறை விஞ்சிய - வேத ஒலி மிகுந்த, அறையும - சொல்லுகின்ற.

37. குரவா - குருநாதனே - குராமாலை யணிந்தவனே எனவும் கொள்க. பரசு - மழு, ஆழி - சக்கரம், பரும்கரகம் - பெரிய கமண்டலம், முறையே உருத்திரன் திருமான் . பிரமன் என்ற முத்தொழிற் தலைவர்க்குரியன - எனவே இவர் செயல் விரவாமற் காத்தலாவது, பிறப்பு - காப்பு - இறப்பு - என்றவை அற்ற வீட்டுப் பேறு முத்தி தருக என்பதாம்.

மெய்யா ளர்மிகுத் துறுசெந் திலில்வாழ்
ஐயா எழில்ஆ றுமுகத் தரசே
எய்யா துவிரும் புமென்இச் சையெலாம்
பொய்யா துபுரிந் திடல்நின் கடனே 38

நின்னன் புநிறைந் துளநெஞ் சதனிற்
பொன்னன் புபுகுந் ததும்எவ் விதமோ
தென்னன் புகழ்சீர் பெறுசெந் திலிடம்
துன்னன் புடையார் உணர்தூ யவனே 39

தூய்மைக் கொருவித் துறழ்தொல் பெரியோர்
வாய்மைக் கும்மறுப் பகர்வன் புடையேன்
சேய்மைப் புகழ்சேர் தருசெந் திலவன்
பாய்மைப் பரியே நிகர்பண் பினனே 40

வேறு

பண்பாடும் வண்டுமலி பசுங்கொன்றைத் தொடையாளா
நண்பாகிக் களிகூர நவில்கவிஞன் நீயெனில்என்
வண்பாடற் கின்றளவும் மனமிரங்கா திருப்பாயோ
தண்பாவு மலர்ச்சோலைத் தனித்திருச்செந் தூரானே 41

ஆனேறும் பெருமாற்கும் அரியதமிழ்க் குறுமுனிக்கும்
மானேர்கண் ணுருகும் வனப்பருணைப் புலவனுக்கும்
ஏனேன்அன் றருள்செய்தாய் எனக்கின்றேன் இரங்குகிலாய்
தானேதன் நிகராய தமிழ்ச்செந்திற் றலத்தானே. 42

•

---

39. பொன்னன் - பொன்னுசை, தென்னன் - பாண்டிய அரசன், துன் அன்பு - நெருங்கிய அன்பு.

40. தூய்மை - புனிதம், வித்துற - விதை போன்ற, வாய்மை - உண்மை நெறி, மறுபகர் - குற்றம் கூறுகின்ற, வன்பு - கடுங்குணம், பாய்மைப்பரி - பாய்ந்து வரும் ஆடாகிய வாகனம். ஆடு - ஆணவத்தின் கூறு

தலந்தாங்கும் உரகபதி தலைநடுக்கங் கொளநடிக்கும்
பலந்தாங்கு மயிற்பரியிற் பாங்கிருவ ரொடுகாண்டற்(கு)
அலந்தாங்கப் படிசெய்தேன் அதையுமறுத் தலைத்தாயே
வலந்தாங்கும் வேற்படைச்சீர் வயங்குசெந்திற் பதியானே. 43

பதியாத புன்னெஞ்சப் படிறனேன் ஆயினுமெய்க்
கதிவேண்டு மவர்வேடம் கவின்றரப்பூண் டிலன்கொல்லோ
சதிதீரத் தடுத்தாண்டுன் தண்டையந்தாள் தரவேண்டும்
துதிகூறு மவர்க்கினிதாத் துலங்கியசெந் தூர்க்குகனே. 44

தூர்த்தர்களிற் றலையாகித் துயர்ப்பட்டுச் சுழல்வேனைச்
சீர்த்தபெரி யோரவையிற் சேர்த்தருள வல்லாயோ
கூர்த்தவடி வேலானே குன்றுதொறும் நடமாடும்
தீர்த்தனே வளமோங்கும் திருச்செந்தில் நகர்ச்சேயே. 45

சேயதுவர்க் கனிபோலத் திகழுமிதழ்ச் சிறுமியர்தம்
மாயமே லிடநொந்து மருகினும்நின் மலர்த்தாளில்
நேயமறந் திலனென்னை நெட்டுயிர்த்துத் தட்டழிவுற்(று)
ஆயவிடத் தகுங்கொல்லோ அருட்செந்தூ ராள்வானே. 46

---

43. தலம்.........உரகபதி பூமியைச் சுமக்கும் பாம்பரசனாகிய சேடன், அலந்து - காட்சிக்கு ஏங்கி, அப்படி வள்ளி தெய்வயானையுடன் மயில் முருகனை நேரில் காண விரும்பி திருமலையென்னும் மலையின் மீதேறி, சந்நிதி முன்னின்று ஆணையிட்டழைத்தனர். வாராமையால் உயிரைவிடக் கருதி உச்சியிலிருந்து உருண்டனர் உடல் சேதமின்றித் தரையில் வந்தது. காட்சி பெறாததால் வருந்தினர். எனவே உயிரை விடாதவாறு காத்தான். அருளை யும் வழங்கவில்லை. மனவேதனை மேலும் வளர்ந்தது. என்று தன் கருத்தை விளக்கியதாம்.

44 சதி - கொடுமை.

45. தூர்த்தர் - பாவிகள். அவை – கூட்டம். தீர்த்தன் தூயவன்.

46. சேய துவர்க் கனி - சிவந்த கோவைப் பழம். இதழ் - உதடு. "கட்டுண்ட சொல்லியர்" என்று தொடங்கும் கந்தரலங்காரப் பாட்டுடன் ஒப்பு நோக்குக.

ஆளாகி நின்புகழே அநுதினமு மொழியாமல்
வாளாய கண்ணியர்தம் மனக்களிவேட் டுழல்கின்றேன்
தேளாய நமன்வந்து செருச்செயுமுன் திருத்துவையோ
கோளாளர் மருவரிதாக் குலவுசெந்திற் குருபரனே 47

குருவாகிக் கவுமாரர் குலதீப மெனக்குலவும்
பெருவாழ்வுள் ளாரொருவன் பின்றிரியும் பேறருள்வாய்
மருவாருங் கடப்பமலர் வனஞ்சூழ்செந் தூரிடத்தில்
தருவாணர் நிமித்தம்வரும் தனிவேற்கைச் சண்முகனே 48

முகமனுரை பலபேசி முழுமூட ரிடத்திரந்தென்
அகமெலிதற் காண்பதுன தருட்பெருமைக் கழகேயோ
சகலபுவ னமும்புகழும் தனிச்செந்தில் தலத்தோங்கும்
குகநினதா ளெனத்தம்மைக் குறிப்பவரிற் கூட்டாயே. 49

கூட்டமிடு முனிவர்குலம் குலைகுலையக் குதித்தார்க்கும்
ஆட்டடல்கண் டுவந்தேறி அருள்புரியு முருகாநின்
பாட்டடியார் பலர்மேனுள் பரவுசெந்திற் பெருமைகளில்
நாட்டமுறு மெனைப்பிறர்தாம் நகையாமற் புரந்தருளே. 50

### வேறு – கலித்துறை விருத்தம்

புரமூன்றும் எரிசெய்த நகைநம்பன்
முதலாய புத்தேளிருக்(கு)
உரமாய வடிவேல்உ ரங்கொண்டு
செந்தூரில் உற்றுள்ளவன்
வரம்வேண படிநல்கு வானென்ன
மிகநம்பு மனமுற்றநான்
கரமாய விழிமாதர் மயல்நோயின்
வசமாதல் கடனல்லவே. 51

---

47. செரு - யமனது போர், கோளாளர் - குற்றமுடையவர்.
48. தருவாணர் - கற்பக மர நிழலில் வாழும் தேவர்கள்.
49. முகமன் - உபசாரச் சொல், நினதாள்என உனதுஅடிமைஎன்பதாக.
50. ஆட்டடல் – ஆட்டினது வலிமை.
51 உரம் ஆய – பற்றுக் கோடான, உரம் – மார்பில், கரம் ஆய – விடம் ஒத்த,

அல்லற் பெருந்தாப மருவுற்று
மெலிபுன்மை யடைகின்றநான்
சொல்லத் தகும்பாடல் களிலொன்றை
யுங்கொண்டு சூடாய்கொலோ
இல்லத் திருந்தாலும் அதைவிட்டி
ருந்தாலும் இடைவைகினும்
நல்லற் புதக்கந்த னெனில்உய்கை
யருள்செந்தில் நகர்வேலனே. 52

நகமாயி ரங்கோடி தொறுமாடி
வருசெந்தில் நகராளருட்
குகனேயெ னத்தெண்டன் இடுவார்க
ளுடனென்று கூடச்செய்வாய்
புகழ்துன்றும் ஒருமன்னன் விழிபோய்வ
ரச்செய்த புலவோனையே
நிகராம வர்க்கான படிநாளு
முயல்கின்ற நெறியாளனே. 53

ஆளாய்உ னன்பிற்கு ளிக்கின்ற
மெய்த்தொண்டர் அடிபேணும்நல்
தாளாண்மை யுற்றும்ச கங்கொண்ட
மாயைத்த ழற்கஞ்சினேன்
வாளாய கண்வள்ளி தெய்வானை
பாகாம லர்ச்செச்சையந்
தோளா திருச்செந்தி லூராஉ
மைப்பெண்சு மைப்பாலனே. 54

53. நகம் - மலை, ஒரு மன்னன் – பிரபுடதேவன். முருகன் காட்சி வழி மறைவும், பின் அருணகிரியாரால் உதவவும் பெற்றான் அவன் என்க.

54. சுமைப்பாலனே – பார்வதியின் மடி – கை – தோள் - இடுப்பு இவற்றில் சுமக்கும் குழந்தை.

பாலுங்க சக்கும்ப டிக்கான
இன்பப்ப யன்பெற்றுளார்
மேலுஞ்சி னக்கும்கு ணங்கொண்டு
ளேனென்று மெய்சோர்வனே
சேலுண்கண் நல்லார்ந டிக்கின்ற
செந்திற்றி ருக்கோயிலுள்
வேலும்பி டித்துக்கு லாவுந்த
மிழ்ச்சீல விற்பன்னனே. 55

விற்பன்னர் பல்லோர்வி யந்தோது
செந்தூர்வி சாகன்றனைச்
சற்பங்க யங்கக்கு திக்கின்ற
தோகைத னிற்கண்டுளார்
கற்பங்கள் கோடானு கோடிக்கு
மாயாத காயத்தராய்
வெற்பந்த மெங்கெங்கு மேவிக்க
ளிப்பார்வெ றுப்பின்றியே, 56

இன்றைக்கி ருந்தார்கள் நாளைக்கி
ராரென்றி சைக்கின்றசொல்
ஒன்றைக்கு றித்துன்னை உன்னித்த
வஞ்செய்து வப்பெய்திலேன்
குன்றைத்தி சைச்சாக ரத்தைப்பொ
ருந்துக்கு லச்செந்திலூ(டு)
என்றைக்கு மாருதி ருக்குங்கு
ணஞ்சேர்இ யற்றெய்வமே. 57

---

55. சேல் உண்கண் நல்லார் - மீன்போன்ற, மையிடப்பெற்ற கண் பெற்ற மாதர்.

56. சற்பம் கயங்க - பாம்பின் மீது நின்று அது வருந்த நடிக்கும் மயில் காயத்தராய் – அழிவற்ற சரீரமுடையவராய், வெற்பு அந்தம் - மலையுச்சி.

57. குன்றை - சந்தனமலையையும், சாகரம் – கடலையும் உடைய செந்தூர்.

தெய்வங்கள் கோடிக்கும் நீயேமு
கப்பென்று சிந்திப்பதாம்
மெய்வந்த நெஞ்சத்தில் நீவந்து
சொல்லுஞ்சொல் மெய்யல்லவோ
தைவந்த தென்றற்பொ ழிற்சீர்கு
லாவுந்த னிச்செந்திலிற்
கைவந்த வேலோடு நின்றுடல்
செய்யுங்க ழற்கந்தனே. 58

கந்தக்க டம்புங்க ளிச்செச்சை
யுஞ்சேர்க வின்றேள்புனை
சந்தத்த மிழ்ப்பாவ லர்க்காண்மை
முற்றுந்த ருஞ்செந்திலான்
முந்தத்த டுத்தாண்டு கொண்டான
ருட்பேறு முற்றச்செயா(து)
இந்தச்ச கத்தார்இ கழ்ச்சிக்குள்
வைத்தான்எ னக்கின்பமே. 59

இன்பப்ப குப்பென்ப யாவைக்கு
மேலாம்இ யற்பேறதாற்
துன்பப்பெ ருக்கைத்தொ லைக்கத்து
ணிந்துன்தொ ழும்புற்றுளேன்
என்பக்கு வச்சீரை எண்ணுமல்
இன்னேஎ டுத்தாளுவாய்
மின்பட்ட வேலாயு தத்தெய்வ
மேசெந்தில் மேவையனே. 60

வேறு. அறுசீர்க்கழில் நெடில்

ஐயமின்றி நினதெழுத்தோர் ஆறையுமே
தினங்கருதி அவலந் தீர்ந்து
செய்யதமிழ்ப் புலவருக்கோர் திலகமெனத்
திகழும்நலஞ் செயவல் லாயோ

58. முகப்பு – முதலில் நிற்பவன். தைவந்த - தழுவுகின்ற.
59. ஆண்மை முற்றும் - திருவருட் செல்வமெல்லாம். அநுபவ விளக்கம்

பையரவ மிசைநடிக்கும் பச்சைமயிற்
பரியூரும் பவளக் குன்றே,
வெய்யசினச் சமர்ச்சேவற் கொடியானே
செந்தினகர் விழைந்துற் றோனே. 61

உற்றவரென் றுன்னருட்பேற் றிச்சையுளார்
தம்மையன்றி உலகில் வாழும்,
மற்றவரை நம்புகிலா மனத்தேனும்
இவ்வாறு வருந்த லாமோ,
பற்றலர்தங் குலமழிக்கும் பரிதிவைவேற்
படையானே பழுதில் நூல்கட்,
கற்றதமிழ்ப் புலவர்பலர் வருஞ்செந்திற்
பதிபுரக்கும் காவ லானே. 62

காவகத்துப் புத்தேளிர் களிப்பெருஞ்சீ
ரிணைப்பொருளாக் கருதா துன்கைச்,
சேவலங்கே தனம்வாழி யெனத்துதிக்குந்
தமியேனும் தியங்க லாமோ,
மூவருக்கும் ஆதரமாம் முனைக்கதிர்வேற்
படையானே முப்பாற் பான்மைப்,
பாவலர்தம் பனுவல்புனை புயத்தானே
திருச்செந்திற் பதிச்செவ் வேளே. 63

செவ்வேளைக் குமரகுரு பரமுருகப்
பெருமாளைத் தேவர் போற்றும்,
கைவேல்கொண் டருட்செந்தூர்த் திருக்கோயி
லிடைநடிக்கும் கடவு ளானைப்,

61. அவலம் – துன்பம். பை அரவமிசை – படத்தையுடைய பாம்பின் மீது।

62. பற்றலர் - பகைவர் - பரிதிவேல் - சூரியன் போன்ற ஒளி.

63 காவகத்துப்புத் தேளிர் - கற்பகச் சோலையுடைய தேவர். முப்பாற் பான்மை - முத்திறமாயுள்ள. இயல் இசை நாடக மென்ற.

பொய்வேடம் புனைந்தெனைப் போற்புவிபுகழ
நடிப்பார்க்கும் புரையொன் றின்றி,
மெய்வேதப் பயன்கருதும் மேலவர்க்கும்
பொதுவனென விளம்ப லாமே. 64

விளங்கனிநேர் கொங்கைநல்லார் தருங்காமப்
பிணிக்கனலில் வெதும்பு முள்ளக்
களங்கமுழு தொழித்துனருட் காரணமே
கருதுநலங் கற்பித் தாள்வாய்
விளங்கவினும் பலகோடி மலையினும்போய்
நடமாடி வரும்பொற் றுளா
இளங்கமுக மடல்நிழலிற் குரங்குதுயில்
பொழிற்செந்தூ ரிடத்துள் ளானே, 65

இடங்கொண்ட பூவுலகும் வானகமும்
பாதலமும் இறைஞ்சும் பேறுற்
றடங்கொண்ட பரசமைய மத்தனையு
மடங்கவெல்லும் ஆண்மை யீந்தாள்
படங்கொண்ட பாந்தளின்மேல் நடமாடும்
பச்சைமயிற் பரியி லேறி
மடங்கொண்ட மாதர்மனங் கவர்ந்துசெந்திற்
றிருப்பவனி வரவல் லானே 66

வல்லாண்மைக் கவுமார நெறியுலகிற்
பெரிதோங்கி வளரச் செய்யும்
நல்லாண்மை யருணகிரி நாதன்முத
லோர்க்குமுன்னே நல்கி லாயோ
வில்லாண்மைப் புகழ்பொறுக்கும் வீரவாகுத்
தலைவனுமே விரும்பும் பாதா
பல்லாண்மைப் பொலிவுதவும் திருச்செந்திற்
பதிபுரக்கும் பான்மை யானே 67

65 கமுக மடல் - பாக்கு மரத்து மட்டை.
66. அடம் கொண்ட - பிடிவாதமுற்ற, மடம் – அறியாமை.

பானல்விழிக் குறவள்ளி பகர்குறியும்
தெய்வமங்கை பரிவும் நீயன்(று)
ஊனகுவேற் படையொடுவந் துரைத்தமையும்
பிழையாமென் றுன்ன லாமோ
போனகச்சீர் மலிதிருச்செந் தூர்க்குமர
குருபரனே புலவர் கூறும்
தேனனைய தமிழ்ப்பாடல் விழைந்துலகத்
தூர்கள்தொறும் திரிகின் றோனே 68

திரிவுபடுங் கடுங்கோட்டுச் செந்தகரைப்
பிடித்தேறிச் செலுத்தி லாயேல்
விரிதிரைநீர்ப் பூவுலகும் மேலுலகும்
பாதலமு விளங்குங் கொல்லோ
கரியுரிப்பாண் டரங்கன்முதற் கடவுளர்க்கோர்
ஆதரமாங் கைவே லையா
தெரிவருஞ்சீர்ச் செந்தூரா சிறியனேன
எவும்வஞ்சம் செயவொண் ணாதே 69

ஒண்கொண்ட வேற்பூசைக் குரித்துமிகுந்
தமியனேனென் உள்ளத் தேனும்
கண்கொண்ட மயிற்றோகை நீழலில்வந்
தொருகாலங் கவின வேண்டும்
பெண்கொண்ட பாகத்தார் நுதற்கனற்கட்
புலிங்கமெனப் பிறந்த பாலா
வண்கொண்ட பொழிற்செந்தில் மாநகிரிக்
கோயிலுக்குள் வசிக்கின் றோனே 70

68. வள்ளி - தெய்வானை — இவர்களது ஆசியும், உனது அருட் செயலும் என்றது, தனது அநுபூதி வரலாற்றுக் குறிப்பு. பானல்—நீலோற்பலம் போன்ற. போனகம் – உணவுச் சிறப்பு (தினமும் சந்நிதியிற் பிரசாதம் நிறையக் கிடைக்கும்.)

69. திரிவுபடும் - மாறுபட்டு முறுக்கேறிய, கருங்கோடு – கரியகொம்புகள், கரியுரி—யானையின் தோலைப்பூண்ட, பாண்டரங்கன்—சிவன்.

70. நுதல்—நெற்றி. கனற்கண்—நெருப்புக்கண்,

### வேறு – எண்சீர்ச் சந்தவிருத்தம்

**தனத்த தாந்தன தனதன தனனா**

வசித்த செந்திலில் ஒருதரம் வருவார்
மலைப்பெ ருங்குகை தொறும்நினை பவர்சேர்
விசித்தி ரம்பெற அருளியும் இருபாழ்
வினைக்கொ டும்பகை அறும்வகை மொழிவான்
அசிக்கு லந்திகழ் கரமிகை யுடையான்
அசத்தி யம்புரி பவருணர் வரியான்
ஒசித்தொர் பன்றியி னதுமறு வறுகோ(டு)
உமைக்கி ணங்கினர் பெறவுத வினனே 71

**தனதன தானன தனதன தந்தா**

இனனொரு கோடிகள் விழியெதிர் வந்தால்
எனவடி வேலொடு மயிலில் இவர்ந்தே
பனகமெ லாம்அழ அகவொலி கொண்டோர்
பழுதறு சேவையை உதவுவ தென்றோ
அனகச தாசிவன் நுதல்விழி யின்றீ
அருளிய பாலக னெனவளர் கந்தா
தனதனை நேர்பவர் பலர்வரு செந்தூர்
தனில்வரு வார்வினை களையும ருந்தே 72

**தனந்த தந்தன தானன தனனா**

மருந்து மந்திர மாமணி யெனவே
வழங்கு கின்றவை நாணுற வளர்சீர்
பொருந்த உந்துப னீரிலை யதிலே
பொதிந்த வெண்டிரு நீறருள் புலவோன்
வருந்த ருந்தவர் வேள்வியி னிடையே
வரும்பெ ருந்தகர் ஏறிய வயவேள்

---

71. இருபாழ்வினை–நல்வினை தீவினை என்ற இரண்டும் பிறவிக்குரியன என்க. அசிக்குலம்–ஆயுதங்கள்வகை. ஒசித்து–ஒடித்து, (திருமால்வராகமாக உதித்துச் செயலாற்றிய பின், அதன் பற் கொம்புகளை முருகன் பறித்துவந்து பரமனிடம் தந்தனர். அவர் அணிந்து உவந்தன ரென்பதும்.
72. இனன்–சூரியன், பனகம்–பாம்பு அகவுஒலி–கூவும் ஓசை–தனதனை–செல்வக் குபேரனை

திருந்து செந்திலில் ஆடிய குகன்,வேல்
திகழ்ந்த திண்புயன் ஆறிரு கரனே 73

**தனனத் தானன தந்தன தனனா**

கரமொப் பாகிய கண்கொளு மடவார்
கவலைச் சாகர மென்றதில் விழமால்
தரலைப் போதுத விர்ந்துன தருளே
தகும்நட் பாகுமெ னுந்துணி வுறுவேன்
அரனக் காலமு யன்றுள தவசால்
அமரர்க் காகவ ருஞ்சர வணனே
சரதச் சீர்திகழ் செந்திலில் முருகா
தமிழ்கற் றூர்விழை யுங்குரு பரனே 74

**தனனந் தனனந் தனத்த தனனா**

பரமுங் குருவுந் தகப்பன் அனைநேர்
பலரும் பிறவும் கடுத்த பெரியோர்
சரணங் கதியென் றிருக்கும் அதுவே
தவமென் றுணருந் திறத்தை யருள்வாய்
சரபந் தருதிண் டிறற்சண் முகனே
சகுணங் களின்மிஞ் சியற்கை யுடையாய்
வரமொன் றியசெந் திலுக்கொர் இறைவா
மதுரம் பொலியுந் தமிழ்க்கொள் குகனே 75

**தனனத் தந்தன தாத்த தனனா**

குகனைத் தொண்டர்கு ழாத்தி னிடைவாழ்
குரவத் திண்புய மூர்த்தி தனை,மால்
மகளைக் கண்டடி போற்று தனை,வேல்
வயமிக் கொன்றிய கீர்த்தி யனை,ஓர்

---

74. கரம்-விடம். சரதச்சீர்-சந்தியவிளக்கம்.

75. சரபம்-எண்காலுடைய பறவை. திருமால் நரசிம்மமாக வந்தபோது அவரது கோபம் தவிர, பரமன் அப்பறவையாக வந்து அடக்கினர். சகுணம் - கடவுள் வடிவம். மதுரம்-இனியசுவை.

சுகமெச் சுங்கவி வாய்த்த வனை,யீ
சுரனுக் கன்றொரு வார்த்தை சொலுமாண்
அகனைச் சந்ததம் வேட்டு மெலிவீர்
அருமைச் செந்திலின் நாட்டம் நலமே 76

தனதன தந்தன தாந்த தானா

நலமுழு தும்பெற வேண்டி மாறா
நளிர்கட லம்புவி மாந்த ரூடோர்
புலவனெ னும்புகழ் தாங்கி வாழ்சீர்
பொலியுமென் நெஞ்சகம் ஏங்க லாமோ
கலகமி டுஞ்சமண் வேந்த ராளுர்
கழுமரம் என்றதில் மாய்ந்து போமா(று)
இலகொரு வன்புகல் பாங்கர் பாலா
எழில்மிகு செந்திலை ஆண்ட கோவே. 77

தானன தந்தன தன்னன தானா

கோவைந றுங்கனி துன்னிய வாயார்
கோலம்நி னைந்துரு கென்னுட னேநீ
பாவைவி ளம்பெனும் உண்மையி னாலே
பாடுவ தன்பயன் என்னசெய் வாயோ
நாவைவி ரும்பிய வெண்ணிற மாளுள்
நாடும்அ ருங்கலை பன்னிய நாதா
சேவைத ருஞ்சிவ சண்முக வேளே
சீர்பெறு செந்திலை நண்ணிய தேவே. 78

தானன தந்தன தய்யன தந்தா

தேவர்பெ ருந்துயர் எய்தவி டுஞ்சூர்
சீரழி யும்படி செய்தவன் அன்பே
நாவலர் தம்புடை கொள்ளுவ தென்பேன்
நாகரி கம்பெற வைகலும் என்றே

76. சுகம் மெச்சும்கவி - கிளியாகிய அருணகிரிநாதராற் போற்றிய கவியுடைய முருகன்.

77. ஒருவன் – திருஞானசம்பந்தர்.

சேவல ணிந்துயர் கையுறு நம்பா
தீதறு குஞ்சரி வெளவிய மொய்ம்பா
காவடர் செந்திலில் வைகிய நண்பா
காமனை வென்றவர் செய்யகு ருந்தே 79

**தனதன தனதன தந்தன தானு**

குருவுனை யலதிலை யென்றுகொ ளாதே
குறைமதி யினரெதிர் சென்றுளம் வாடேன்
அருவமும் உருவமும் ஒன்றிய மேலாம்
அநுபவ நலமதை அன்பொடு தாராய்
சருவுண வினர்தரு குஞ்சரி பாகா
தழையுடை வனசர மங்கைம ணாளா
திருவுட னருள்மலி செந்தில்வி சாகா
சிவன்வழி படமுதிர் செந்தகை யானே 80

**வேறு. கலிவிருத்தம்**

ஆனை மாமுகத் தவன்றன் பின்வரும்
கோனை வார்கடற் குளிர்ச்செந் தூரனை
மேனை பேரனை விரும்பும் மெய்த்தவம்
வானை யாண்டபின் வருநர்க் கெய்துமே 81

எய்த விற்கரத் தெயினர் தங்குலம்
செய்த மாதவச் சிறுமி கேள்வனை
மெய்த ரும்புகழ் மிகுசெந் தூரினில்
வைத பேர்க்கும்நல் வாழ்வுண் டாகுமே. 82

ஆகு வாகனத் தவனுக் கஞ்சியன்(று)
ஏகும் எல்லையில் எனைவந் தாண்டமை
யோகு ளானென உலகம் ஓர்தர
நீகு லா(வு)அணி நிறைசெந் தூரனே. 83

80. சரு—தேவருணவு. வனசரமங்கை – வேடப்பெண்ணனவள்ளி
81. மேனை—பார்வதியின் வளர்ப்புத்தாய்.

ஊரெ லாந்திரிந் துழன்றும் உன்னருட்
சீரெ லாம்பெறச் சிந்தித் தேங்கினேன்
பாரெ லாம்புகழ் பயனென் றீகுவாய்
காரெ லாம்வரு செந்திற் கந்தனே. 84

கந்த நாண்மலர்க் கடம்பி னோடும்என்
செந்த மிழ்க்கவித் தொடையைச் சேர்ப்பையோ
மந்த மாருதம் வருஞ்செந் தூரினிற்
சந்த ஞசலத் தலத்து வேலனே 85

வேலை ஆர்ப்பொலி மிகுஞ்செந் தூரினில்
மாலை வானென வளரு வான்றனைக்
காலை யாதிமுப் பொழுதுங் காண்பவர்
ஓலை யேவுநற் குளம்அஞ் சார்களே 86

அஞ்சல் நல்கினை அடுத்து வந்தொரு
வஞ்ச மின்றிய வார்த்தை கூறினை
செஞ்ச ரோருக வாவிச் செந்திலாய்
நெஞ்ச கத்துயர் நீங்கிற் றில்லையே. 87

இல்ல றந்துற வறமென் றேத்திரு
நல்ல றத்தினும் இன்றி நைந்துளேள்
அல்லல் தீர்த்துன தருள்சற் றீகுவாய்
செல்ல ருப்பொழிற் றிருச்செந் தூரனே 88

செந்தி லம்பதிக் குருநிற் சிந்தியா
வந்தி யாரென வருத்த மெய்தினேன்
அந்தி வெண்பிறைச் சடிலத் தாருடன்
முந்தி யோதிய மொழிசொற் ருள்வையே 89

---

87. செஞ்சரோருகவாவி – செந்நிறத் தாமரைத் தடாகம்
88. செல்அரு – மேகம் நீங்காத.

ஆள வல்லையென் றடைந்து ளேன்எனைக்
கோளர் தம்முடன் குலைய விட்டிடேல்
தேள ஞார்அணு கரிய செந்திலில்
நீள வேல்கொடு நிலவும் நித்தனே. 90

வேறு. எழுசீர் விருத்தங்கள்

நித்தமும் உனையே கருதுமா தவநன்
னெறிபிடித் தொழுகலிற் சிறந்த
பித்தனேன் றானும் நின்னதா ளெனுமெய்ப்
பெயர்பெறப் புரிந்திலாய் கொல்லோ
பைத்தவா ளரவில் நடம்புரி தோகைப்
பரியில்வந் தொருதரங் குலவாய்
செய்த்தலை வாளைக் கயலுகள் செந்தூர்த்
தெய்வமே சைவதே சிகனே. 91

தேசிகப் பெருமான் திருவருள் வளமைச்
செந்திலம் பதியுடைச் சிறுவன்
பாசியுங் குறடும் பலகறை யணியும்
பசுங்கதிர் பின்னலோ டணிவாள்
ஆசிநன் குணர்வேள் அவனலா தொருவர்க்
கடிமையாம் அல்லவென் றறைதல்
வீசிய திரைநீர்ப் புவிமுழு தறிந்தும்
வினைப்பிணி மிகையொழிந் திலவே. 92

இலவுறழ் கயமைக் குரியவர் மனைதோ
றிரந்தலைந் திளைத்துளேற் கின்பக்
குலமுழு துதவிக் குறைவில்மெய் யடியார்
குழுவுடன் கூட்டுதற் கிரங்காய்

91. செய்த்தலை – வயலிடத்து, கயல்உகள் – மீன்கள் துள்ளிவிளையாடும்.

கலவமென் துகிலாள் கணவனே தவளக்
களிற்றுமா மகள்புணர் கந்தா
அலகில்சீர்ச் செந்தி லம்பதி புரக்கும்
ஆறுமா முகத்தனி யரசே. 93

அரசசோ குடையார் முதலிய பொல்லார்
அகமுழு தழிக்குமாண் படைவான்
பரவிநின் றிருமுன் னடைந்துளேன் றனக்கும்
பலவிதத் துயர்தரப் படுமோ
குரவமா லிகையும் கூதளத் தொடையும்
குளிர்கடம் பாரமும் பிறவும்
விரவுபன் னிருதோட் குமரநா யகனே
வியன்புகழ்ச் செந்தில்வே லவனே. 94

வேலனே பரமென் றுணர்ந்துளார் தமக்கோர்
மெய்யருள் விழியென விளங்கும்
சீலமார் செந்திற் பதியினிற் சென்று
திருப்பனு வலாற்று திக்கும்
வாலறி வுடையார் தம்முடன் கூடி
வாழுமாண் பெனக்கருள் வாயோ
சாலவெவ் வேரும் உருக்கொடு தோன்றித்
தமிழ்ச்சுவை தருபெருந் தகையே 95

பெருந்தகைத் தவளக் களிற்றினுல் வளர்ந்த
பெய்வளை யிடத்தில்வீற் றிருந்தும்
திருந்துவிற் குறவர் சிறுமியைப் புணர்ந்தாய்
திருப்புகழ்க் கவிமிகச் செப்பும்

93. இலவு உறழ் - இலவம் காய்போன்ற உலோபருக்குவனம். கலவமென் துகிலாள் – மயிற்றேகையாற் பின்னிய உடையை உடைய வள்ளிநாயகி.

94. அரசு அசோகு உடையார் – பவுத்தரும் சமணரும்.

95. வால் அறிவு - மானவுணர்வு.

அருந்தமிழ்க் கிளியொன் றிருப்பினு மெனைநீ
ஆண்டுகொண் டருள்செயத் தகுமே
கருந்தனச் சிகரிக் கோவிலஞ் செந்தூர்க்
காத்தருள் கருணைநா யகனே. 96

நாயினுங் கடைய ராகிய புலையர்
நவைநினைத் துளமிக நலியும்
பேயினே னெனினும் நின்னருட் பெருக்கம்
பெறுவது குறித்துளே னன்றே
காயிரும் பனைய தகரிவர்ந் திமையார்
கலக்கமுற் றொழித்தகாங் கேயா
நீயிரங் கிலேயேல் எவ்வணிங் குய்வேன்
நிசந்திருச் செந்திலில் நிகழ்த்தே. 97

நிகரில்பே ராடல் உடைத்தெனப் பலரும்
நீணிலத் துரைத்திடும் நெடுஞ்சீர்
திகழ்தரு வயலூர் மலையுடை யொருவன்
செந்திலிற் செல்லெனத் திடமாய்ப்
பகருமா றடைந்தேன் என்றருள் புரிவாய்
பரிதிவேற் படைபுனை பவள
நகமுறழ் குமர நாயகா இருவர்
நடுமயில் முதுகிவர்ந் தவனே. 98

தவமொரெள் ளளவும் புரிகிலேன் றுதிக்கும்
தமிழினும் நின்புகழ் சாற்று(து)
அவமறுத் தெனையாண் டருளெனு மொழிகேட்
டறைகுவேன் அஞ்சலென் றருள்வாய்
பவளமுந் தரளக் குவையும்வால் வளையும்
பசுந்துணர்ப் பாசியும் எறியும்
திவலையந் திரைநீர்க் கடலொலி மலிசீர்ச்
செந்தில்வாழ் சுந்தரக் குகனே. 99

98. வயலூர்மலை - பழனியாண்டவன். செந்திலுக்குச் செல்லுக என்று இவரிடம் கூறினன் என்க. (பயன்) தென்நிலத்தோர் — யமதூதர்கள்

சுந்தரக் கமல வதனம்ஓ ராறும்
　　சுடரயிற் புயங்கள்முந் நான்கும்
செந்தகைத் திருத்தாட் டுணையுமென் விழிமுற்
　　றெரிதர ஒருதரம் வருவாய்
பைந்தமிழ்க் குறுமா முனிக்கருள் குரவர்
　　பலமலை தொறும்நடம் பயிலும்
கந்தநா யகனே செந்தின்மா நகரிற்
　　கவின்றரு கருணையங் கடலே. 100

**முற்றிற்று**

பயன்

பொன்னிறைந்த பெருஞ்சீரோ(டு) அறமுந் தோய்ந்து
　　பொருவரிதா விளங்குசெந்திற் புனித வேள்மேற்
பன்னியசெந் தமிழ்விருத்தம் ஒருநூ றுள்ள
　　பதிற்றுப்பத் தந்தாதிப் பயன்கொள் வார்க்குத்
தென்னிலத்தோர் செய்கின்ற இடுக்கண் தீரும்
　　திருவருட்பே ராண்மைமுதற் றிறல் உண்டாகும்
கன்னிவள்ளி தெய்வானை மகனே யென்று
　　களித்தழைக்கும் பெருநலமும் காணலாமே.

**வேலுமயிலுந்துணை.**

உ

குருவே துணை.

# திருச்செந்திற் பிரபந்தம்.

# செந்திறுயக சதகம்.

---

## பதிப்புரை.

### வெண்பா

தூயகம லத்தடங்கள் சூழ்ந்த திருச்செந்தில்
நாயக மாலைகற்கும் நல்லோர்கள் — தாயகட்டில்
மீண்டும் பிறக்கும் வினையகன்று மெய்யன்பர்
வேண்டும் புகழுடைவார் மெய்.

திருச்செந்தூர் முருகப்பெருமானைப் பொருளாகக்கொண்டு பாடப் பெற்றதான "**செந்திறுயக சதகம்**" என்ற இந்நூல், எழுசீர் விருத்தப் பாடல் நூறு கொண்ட துதி நூலாகும். இதுபோன்ற சதக நூல்கள் பல, பலவித யாப்புகளில் வழங்குகின்றன. அவற்றில் மக்கள் கைக்கொள்ளவேண்டிய நெறிகளைக் கூறுவன சில. சில துதியாக அமைந்தவை. இது துதிப்பாடலாகும். முருகனைப் பொதுவாகத் துதிப்பதில், சிவபிரானை முதற் பாட்டிலும் இரண்டாவது உமாதேவியையும் கூறிய முறையில், நூல் முழுதும் இருவரையும் மாறி மாறிக் கூறி, இவர்களது "மைந்தனே செந்திறுயகனே" என்று ஈற்றடி யமைத்துப் பல செய்திகளையும் பொருந்த எளிய இனிய நடையில் இயற்றியுள்ளார்.

அருணகிரிநாத சுவாமிகள் கிளி வடிவிலிருந்து முடிவில் கந்தகிரியின் முருகன் சந்நிதி முன் நின்று பாடிப் பேறுபெற்ற ஞானுநுபூதி நூலில், முதற்பாவில் தெய்வயானையம்மையையும் இரண்டாவது வள்ளிநாயகியாரையும் சொல்லி, முறையே

மாறிமாறி இருவரையும் கூறி, இவர்களது நாயகனுக விளங்கும் "தெய்வமே உய்யுமாறருளே" என்று முருகப் பெருமானைப் பாடிய கருத்தை ஒத்த நடையில் அமைந்திருக்கிறது. பாடல் மிக நயமான எளிய நடை. சிலவற்றில் பெருவாரியாக வழக்கத்திராத வரலாறு கூறப்பட்டிருக்கிறது. அவற்றிற்கு ஓரளவு விளக்கம் எழுதப் பெற்றுளது.

முருகன் ஆறுமுக நயினுராகச் சிறப்புடன் விளங்குவது திருச்செந்தூரேயாம். ஆறெழுற்துக் குரியவனுமாகும். ஆகவே, ஆருவது வரிசையில், இந்தச் சதக நூலே யமைத்திருப்பது சிந்திக்க இனிமை தருகிறது. ஒவ்வொரு நூலும் இப்படி ஒரு கருத்தை யொட்டியே யிருப்பது காண்க,

இந்நூலாசிரியரான வண்ணச்சரபம், தண்டபாணி சுவாமிகள் முற்பிறப்பில் அருணகிரி நாதராயிருந்தனரென்பது முருகப்பெருமான் நேரே இவரிடம் கூறியருளினர் என்ற செய்தி, இவர் பாடலிற் பல இடங்களிற் காணலாம். அருணகிரிநாதர் தாம் பாடிய பாடற் சுவடியைச் செந்தூர்க் கடலில் உருவி விட்டனர் என்பதும், கோபுரத்திலேறி வீழ்ந்து முருகனருள் பெற்றனர் என்பதும், சந்தத் திருப்புகழ்ப் பாடல்களே மிகப் பாடினர் என்பதும் அறிகிருேம். அதுபோல இவரும் ஷெ கடலில் தமது பாடலெழுதிய ஏட்டை அவிழ்த்து விட்டும், திருமலேயிலேறி முருகன் காட்சிபெற விரும்பி உருண்டும், சந்தக்கவிகள் மிகப்பாடியும், துறவு பூண்டும் விளங்கினர். இந்த ஒற்றுமைப்பாட்டைக் கண்ட பிறபுலவர் களும் வியந்து இக்கருத்தைத் தமது அநுபவமாகப் பாடியுள் ளனர். அவற்றுள் ஒன்று காண்க.

அருணகி ரியேஇந்த முருகதா சனுவந்த
ஆனந்தம் பாருங்கள் புலவோரே.

அவளவில் லாமற்போனுல் கனவினில் முருகன்வந்(து)
அருள்வானே இவனுண்மை தெருள்வானே- தெருண்(டு)
எவளவோ உயர்வான திருமலே மீதேறி

இவனைப்போல் ஒருவன்வந் துருள்வானோ – உருண்(டு)
அவமாய் உயிர்விடாமற் பிழைப்பானோ - பிழைத்தும் வந்(து)
அடிமைத்தி றமும்சிலர்க் கருள்வானோ

என்பதுபோலப் பாடி மகிழ்ந்தனர் பலர். ஆனால் இவர் அதை மகிழ்வுடன் ஏற்றுக்கொள்ளத் தக்க தவம் தனக்குப் போதாதென்றும், அதை முற்றும் மறுக்க அஞ்சுவதாயும், அதற்கேற்ற அருளை வழங்குக என்றும் வேண்டினர்.

''பனிவேய் வனத்தில்வந்து நீற்றைக் கொடுத்தோர்
கிளிதான் எனச்சொல்உன்றன் வார்த்தைக் கிடக்கர்
பழுதோது முற்சிறந்த பேற்றைத் தரற்கு–வருவாயே.''

என்பதுபோற் பல இடங்களிற் கூறுவர். வேய்வனம் என்பது திருநெல்வேலி. குருபர தத்துவ நூலில் முற்பிறப் புணர்த்திய சருக்கத்தில் இவ்விவரம் கூறுகின்றார். இதுபோற் பல வரலாறுகள் உள்ளன. இந்நூல், முறைப்படி அன்பர்களது நித்திய வழிபாட்டின் பாராயணத்துக் கேற்றது. அருள்க முருகன்.



# செந்திருயக சதகம்.

## காப்பு – கலித்தாழிசை

நந்தி யம்பரன் நயனச் சேய்மகிழ்
செந்தி ருயகச் சதகம் செப்பிட
இந்தி ரன்றவத் திரங்கி நீர்தரு
தந்தி மாமுகன் சரணங் காவலே.

## நூல். எழுசீர்

திருவருள் பொழியும் வதனமோ ராறும்
திறற்பெரும் புயங்களீ ராறும்
பருமலர்க் கமலம் பொருபதத் துணையும்
பகலினும் இலகவந் தருள்வாய்
கருமயிற் பரிமீ திருவர்க ளோடுங்
கடலுடைப் புவிவலம் வருவாய்
மருமலி யிதழித் தொடையணி பரமன்
மைந்தனே செந்திரு யகனே. 1

கள்ளையும் பழித்துக் கனிதமிழ் மதுரக்
கவித்திருப் புகழ்மிகக் கழறும்
கிள்ளையென் றெனைப்பல் கனவில்நீ வலிதிற்
கிளத்தியும் கெடுத்தனை யந்தோ
புள்ளைவாய் கிழித்த புனிதமால் மருகா
புலவர்கோன் மகளுயிர் போல்வாய்
வள்ளையஞ் செவிப்பார்ப் பதிமுலை நுகரும்
மைந்தனே செந்திரு யகனே. 2

---

நயனச் சேய் - அக்கினிக் கண்ணிலிருந்து தோன்றிய முருகன்.

1 வதனம் – முகம், இதழித்தொடை – கொன்றைமாலை

2 கள்ளை – தேனை, மதுரம் – இனிமை, கிள்ளை – கிளி, புள்ளை - கம்சனு லேவப் பெற்ற கொக்காகிய பறவையை.

ஆரணப் பொருள்முற் றுணர்ந்தவர் தமக்கும்
அரியதாஞ் சேவையொன் றருளிக்
காரணப் பிறப்பீ தென்னமுக் காலும்
கழறியுங் கவன்றனன் கண்டாய்
நாரணன் புகழும் நலமுடைக் குமரா
நறுந்தமிழ்க் குறுமுனிக் கினியாய்
வாரணத் துரிவை போர்த்தவர் பயந்த
மைந்தனே செந்திஞு யகனே. 3

வெள்ளநீர்ச் சடிலத் தமலனுந் தவள
வேலையிற் றுயிலுமா யவனும்
கள்ளவே தியனும் எனைத்தம துளத்திற்
கருதிடா நலம்பெறப் புரிவாய்
தெள்ளமிழ் துறழ்சொற் குறக்கொடி மருவும்
தினைப்புன முழுதினுந் திரிந்தாய்
வள்ளமே யனைய முலைத்துணைக் கவுரி
மைந்தனே செந்திஞு யகனே. 4

கொங்கையங் குவடுங் கூர்விழிக் கயலும்
குளிர்மொழித் தேனெடு கொடுவந்(து)
அங்கையால் வலியத் தழுவுவார்க் குருகும்
அடியனேற் கருட்பெருக் களித்தாள்
சங்கையால் அலமந் திகல்பெரும் புலவோர்
சபையொரு மூன்றினுந் தழைத்தாய்
மங்கையோர் பாகத் திறையவர்க் கினிய
மைந்தனே செந்திஞு யகனே. 5

---

3 காரணப் பிறப்பு – முருகன் தமக்கருளிய அநுபூதி, இவர் வரலாற்றி லறிக. வாரணத்துரிவை - யானையின் தோலாடை.

4 சடிலம் - சடை, தவளவேலை – வெள்ளை நிறப் பாற்கடல், கள்ள வேதியன் – ஊழின்றிறத்தை யறிய வொட்டாமல் மறைத்துப் படைக்கும் பிரமன், வள்ளம் - கிண்ணம்.

5 சங்கை - சந்தேகம், மூன்று சபை - முதல், இடை, கடை என்ற முச்சங்கம்.

புலைக்குணத் திகலோர் குலமறக் களையும்
புகழ்பெறப் போற்றுமென் றனக்கன்(று)
இலைக்குள்வைத் துளநீ றளித்தொரு மாற்றம்
இயம்பிய தில்லையோ இசையாய்
கலைக்குழு முழுதும் உணர்ந்தமெய்ப் புலவர்
கதிரயி லிலங்குதோட் கந்தா
மலைக்குலத் ததிபன் மகளொடுத் தணைக்கும்
மைந்தனே செந்திலு யகனே. 6

கொண்டலுங் காம தேனுவும் நாணுங்
கொடையுடைக் குமணனிற் கொடுக்கும்
தொண்டருக் களப்பின் மிடியும்ஏ ழையர்க்குத்
தொலைவறு திருவுமேன் தொகுத்தாய்
புண்டரீ கத்தான் தலைகள்நான் கினுமுன்
புடைத்தமெய்ப் புகழ்பெறும் புனிதா
வண்டமிழ்ப் புலவன் விடுத்ததூ தானூர்
மைந்தனே செந்திலு யகனே. 7

பொன்னியல் மேனிப் புரிகுழல் மடவார்
புணர்முலைப் போகமே கருதி
நின்னிய மங்கள் விழைகலார் போல
நீணிலத் துழலஏன் விடுத்தாய்
தென்னிய கொடும்பற் பேயினம் நடிக்கும்
செருக்களந் தொறும்புகழ் திறலாய்
மன்னிய அறமெண் ணான்குமுன் வளர்த்தாள்
மைந்தனே செந்திலு யகனே. 8

பழவினைப் பயன்றுய்த் தளவிலார் வாயிற்
படிதொறும் ஏறியெய்த் திரவா(து)
அழகிய தோகைச் சிகியில்நீ தோன்றி
ஆண்டுகொண் டருளும்நா ளுளதோ

6 கலைக்குழு - சாத்திரங்களின் தொகுதி, அதிபன் - மலையரசன்.
8 தென்னிய - வரிசை பிறந்துள்ள.

கழகமோர் மூன்றும் அறிந்தமெய்ப் புலவா
கருநிறச் சமணர்வேர் களைந்தாய்
மழவிடைப் பரியிற் பவனிவந் தருள்வார்
மைந்தனே செந்தினா யகனே. 9

விதுவணி சடிலத் தினர்திரு வருளால்
மேதினி யிடத்தில்முன் விளங்கும்
சதுரரே யனைய ஒருவனைக் காணத்
தவம்புரிந் திளைக்கைகண் டிலையோ
பதுமனைப் புடைத்து முரகரிக் காழிப்
படையளித் தரற்குமெய் பகர்ந்தாய்
மதுரநா வலனுக் கடிசில்முன் சமைத்தாள்
மைந்தனே செந்தினா யகனே. 10

பால்வனப் பொடியும் பவளவான் கலையும்
பழுதறு கண்டிகை வடமும்
நால்வகை நெறியும் உடையமே லவர்தம்
நடுவிருந் துவக்குமாண் பருள்வாய்
சேல்விழிக் குறத்தி மருவிய பெருமைச்
செழுந்துவர்க் கிரிநிகர் புயத்தாய்
மால்விடை யெழுதும் கொடியுடைப் பரனார்
மைந்தனே செந்தினா யகனே. 11

பாரணங் கலமந் தழச்செயுங் கொடியோர்
படைப்பெருக் கறப்பொரும் பான்மை
வீரர்பற் பலரில் ஒருவனை யென்பால்
விடுப்பினும் விரும்புமா றுவப்பேன்

10 விது – சந்திரன், சதுரர் - சமயாசாரியர் நால்வர், மதுரநாவலன்– கவிராசபண்டிதருக்கு, காசி யாத்திரையின்போது மகள் வடிவில் உணவு செய்து தருதல்.

11 பொடி – திருநீறு, பவளவான் கலை – செந்நிறக் காவியுடை, நால்வகைநெறி - சரியை, கிரியை, யோகம், ஞானமென்பன, துவர்க்கிரி பவளமலை விடை – இடபம்,

பூரவா கனத்துப் புனிதவெண் டிருமின்
போற்றிய புண்ணியப் பொருளே
மாரனைப் பொடித்தார் மனங்கவர் குமரி
மைந்தனே செந்தினு யகனே. 12

கொல்லலே தொழிலா மெனமுயல் கொடியோர்
குலைகுலைந் தலமறக் குனிக்கும்
வில்லணி வீர வாகுவன் றுரைத்த
வியன்மொழிப் பயன்மிக விழைந்தேன்
பல்லவிக் கிசைந்த பதம்பக ரொருவன்
பங்கயக் கண்பெறப் பணித்தாய்
வல்லரக் கனையோர் விரல்கொடு நெரித்தார்
மைந்தனே செந்தினு யகனே. 13

போதினுன் படைப்பும் உருவிலான் கணையும்
பொறையிலான் கணிச்சியும் பொருந்தா
நீதியால் உயர்ந்த புகழ்க்கவு மாரர்
நிறைதரும் அவையிலென் றடைவேன்
வாதிடுஞ் சமணர் குலமறக் களைவான்
வையையே டெதிர்செல விடுத்தாய்
மாதிரத் துயிர்கள் முழுமையும் பயந்தாள்
மைந்தனே செந்தினு யகனே. 14

தேன்மரு மலர்கள் தூவிநின் றிறைஞ்சும்
திருக்கைவேற் படைப்பெரும் பூசைக்(கு)
யான்மகிழ் வதுகண் டிருந்தும்நீ யிரங்கா
திருப்பது முறைகொலோ இயம்பாய்
கூன்மருப் பிலகு தவளவா ரணத்திற்
குருவெனக் குலவிய குகனே
மான்மழு வகலா மலர்க்கரத் தொருவன்
மைந்தனே செந்தினு யகனே. 15

13 பதம்பகர் ஒருவன் – முத்துவயிரப்புலவர், வல்அரக்கன் - இராவணன்

14 கணிச்சி-மழுவாயுதம். நீதி – படைத்தல், காத்தல், அழித்தலற்ற முத்தி.

சுந்தரி குமரி யெனுமிரு மடவார்
துயர்களைந் தணைந்தமை கருதி
வந்தடைந் தருமைத் தமிழ்கொடு துதிப்பேன்
மனங்கொதித் தயர்வது வழக்கோ
செந்தமிழ்க் குறுமா முனிக்கருள் புலமைச்
சிவகுரு நாதனும் சிறுவா
மந்தர மனைய முலைப்பரா பரைதன்
மைந்தனே செந்திரு யகனே. 16

ஊன்றுருகுத் தருந்தி உடல்வளர்ப் பவர்தம்
உவப்பறக் காண்பது கருதும்
நான்றுழ லறியா யெனில்அநா தியதாம்
நான்மறைச் சுருதிமெய்ப் படுமோ
தேன்றுடைக் கடம்பும் புனலியும் குரவுஞ்
செச்சையும் திகழ்ந்ததிண் புயனே
வான்றுடு குடுமி வரைச்சிலைக் கரத்தார்
மைந்தனே செந்திரு யகனே. 17

பங்கய மலரோன் றேந்திய கரத்துப்
பசுநிறப் பாவைநேர் குறத்தி
அங்கவ னுரைத்த விதங்கரு திலையேல்
அவளுளம் அயர்வுறு மன்றே
பொங்கழல் வேள்வித் தகரிவர்ந் தேழு
புவிகளும் பொன்றுரு தளித்தாய்
மங்கள கோலா கலச்சிவை யுதவு
மைந்தனே செந்திரு யகனே. 18

கானவர் வளர்த்த கருங்குயி லனைய
கன்னிகை வசத்தன்நீ யென்பார்
நானறிந் தளவில் அப்படிக் கான
ஞாயமொன் றையும்நடத் திலையே

17. புனலி – நீலோற்பலம், செச்சை – வெட்சிப்பூ, குடுமி – உச்சி.
18. உரைத்தவிதம் – சொந்த அநுபூதி.

தானவக் குலத்துச் சூர்முதற் கொடியோர்
தமையெலாந் தகித்தவேற் றலைவா
வானவர் துயரஞ் சகித்திடா தழுதார்
மைந்தனே செந்திநா யகனே. 19

கயிலையிற் பரமர் நின்னிடங் கொள்ளுங்
களிப்பினிற் காணியா கிலும்நின்
அயிலையே பரவும் அடியனேன் மிசைநீ
அமைத்தினி தாள்வதற் கிரங்காய்
மயிலிவர்ந் துலகை வளைந்தொரு நொடியில்
மாங்கனி நிமித்தமுன் வந்தாய்
வயிரனூர் வாழ மயிடனைத் தடிந்தாள்
மைந்தனே செந்திநா யகனே. 20

கானிடைத் திரியும் புலியினும் கொடிய
கலியினாற் கலங்குறும் துயரம்
நானினிச் சகியேன் நனவொடு கனவில்
நவின்றவா றிக்கணம் நடத்தாய்
சூனியப் பொருளே பரமெனத் துணியும்
தொடக்கர்கண் காணருஞ் சொருபா
வானிறக் கேழல் மருப்பணி பெருமான்
மைந்தனே செந்திநா யகனே. 21

கரகமீ னியமா முனிமிசை வைத்த
கருணையிற் சிறிதெனக் குதவி
உரகநேர் சமணர் ஆதியர் வெருள
உறுக்கு மாண் புறும்படி புரிவாய்
குரகதக் குலங்கள் முழுமையும் நாணக்
கொழுந்தகர் நடத்திய குமரா
மரகத மேனி உமையவட் கினிய
மைந்தனே செந்திநா யகனே. 22

22. கரகம் – கலசம், உரகம் – பாம்பு, குரகதம் - குதிரை, மரகதம் – பச்சை.

ஆசகல் பெரியோர் வகுத்தநூல் உணரேன்
ஆறெழுத் தாண்மையுங் குறியேன்
பாசநோய் தவிர்ந்த ஞானவா னந்தப்
பரமவீ டடைவதெப் படியோ
தேசவிர் கடப்ப மாலிகை யணிந்து
திரண்டபன் னிரண்டுதோட் செல்வா
வாசவ ருடலத் தெலும்பெலாம் புனைவார்
மைந்தனே செந்திஞ யகனே. 23

ஓர்கணத் தெனினும் உனதருட் பெருஞ்சீர்
உணர்கிலா உலுத்தர்க ளுடன்சேர்ந்(து)
ஆர்கலி யனைய துயரமுற் றிடைதல்
அறிந்தும்நீ யிரங்கிலாய் அந்தோ
கூர்கவின் றருவேற் படையுடைக் குகனே
குக்குடப் புட்கொடி கொண்டாய்
வார்கடல் உலகுண் டுமிழ்ந்தவற் கிளையாள்
மைந்தனே செந்தி ஞயகனே. 24

செம்புகர் வேழப் பிடரின்மீ தேறிச்
செகந்தனி புரப்பினும் உன்னை
நம்புமாண் பிலரேல் அவரையோர் கொதுகா
நானினைப் பதுபிழை யாமோ
வெம்புலால் கமழும் விதிரிலைச் சுடர்வேல்
விகிர்தனே மேலவர்க் கிறைவா
வம்புலாங் கடுக்கைத் தொடையணி சடையார்
மைந்தனே செந்திஞ யகனே. 25

மையல்நோய் மிகுத்து மறைநெறி தவறி
வருந்துறு மனத்தினேன் றனக்குன்
செய்யதா மரைப்பூந் திருவடி சூட்டித்
திருப்புகழ் தொடுக்குமாண் பருள்வாய்

---

24. ஆர்கலி – கடல், குக்குடம் – கோழி.
25. கொதுகு - கொசு, கடுக்கை – கொன்றை.

பையரா வணையில் இருமட மாதர்
பாங்குறத் துயில்பவன் மருகா
வையமேழ் ஈன்ற வயிறுடைக் கவுரி
மைந்தனே செந்திநா யகனே 26

பன்னிரு சமயப் பகுதியி னூடும்
பரந்தநின் றிருவருள் விழைந்தும்
மின்னியல் வடிவேற் பூசனை புரிந்தும்
மிகைபடும் வெருட்சியுற் றயர்ந்தேன்
சென்னியிற் குரவுஞ் செச்சையுங் கடம்பும்
செறிதரு சீருடைச் சிலம்பே
வன்னியும் அறுகும் இதழியும் முடித்தார்
மைந்தனே செந்திநா யகனே. 27

கிளர்சுவைத் தமிழால் அளவறும் பனுவல்
கிளத்திநின் திருவடிக் கணிந்தும்
தளவமென் முகையிற் குலவும்வா ணகையார்
தருமயற் பிணிதவிர்த் திலையே
களபமா முகத்துக் கடவுளோ டிகலிக்
கடலுடைப் புவிவலம் வந்தாய்
வளரொளிப் பாசாங் குசம்புனை கரத்தாள்
மைந்தனே செந்திநா யகனே. 28

சேலியல் விழியார் மயற்கொடும் பிணியாற்
செம்பொன்மால் மிகுத்துளந் தியங்கி
நூலியல் பறியார் தம்மொடு பிணங்கி
நுடங்கலென் றெழிகுவேன் நுவலாய்
கோலிய கடலுங் குன்றமு மரவும்
குலைவுறக் குறித்துவேல் விடுத்தாய்
வாலிய திருநீ றுடல்முழு தணிந்தார்
மைந்தனே செந்திநா யகனே. 29

28. களபமாமுகக் கடவுள் – யானை முகப்பெருமான் (கணபதி)

மஞ்சரு மலய வரைக்குறு முனிவன்
மானத மனத்தடத் தலரும்
செஞ்சரோ ருகப்பூ வனையநின் துணைத்தாள்
சிரமிசை பரிக்குநாள் உளதோ
குஞ்சரிக் கினிய கணவனே ஏனற்
குறக்கொடி புணர்ந்ததோட் குகனே
வஞ்சகப் பண்டா சுரனுயிர் குடித்தாள்
மைந்தனே செந்திநா யகனே. 30

கலகமே விளைக்குங் கயவர்தம் வாயிற்
கடைதொறுங் கண்கலங் குறுவேன்
அலகில்சீர்ப் புலமைத் திறற்கவு மாரர்
அவையினூ டவிர்தர லென்றோ
திலகவா ணுதலார் இருவர்பங் கமரச்
சிகிமிசை யெங்கணுந் திரிவாய்
மலருடைப் பிரமர் தலைபல புனைவார்
மைந்தனே செந்திநா யகனே. 31

தந்திரத் தொழிலே பெரிதென மதித்துன்
றனதருட் பெருமையை யிகழும்
வெந்திறற் கொடியோர் குலமறக் களையும்
வீரரைக் காண்பதே விழைந்தேன்
சிந்திய மலர்ப்பைம் பொழில்மலி சாரற்
சிலம்பினந் தொறுநடம் புரிவாய்
மந்திரக் குடிலை வடிவமாம் ஒருத்தி
மைந்தனே செந்திநா யகனே. 32

கழுமல நகரிக் கவுணிய னனைய
கவிவலான் ஒருவனைக் காட்டி
யெழுதரு மறையி னெறிவழா தோங்க
விடைத்திடா திருப்பதேன் இயம்பாய்

30. மஞ்சரு – மேகம் நீங்காத. சரோருகப் பூ – தாமரை மலர், ஏனல் – தினை.

முழுதுணர் புலமைக் குருபர முருகா
மூவலில் சேவலங் கரத்தாய்
வழுதிகைப் பிரம்பால் நிறைந்தமை தெரித்தார்
மைந்தனே செந்தி னாயகனே. 33

காணியு முனது திருவருட் செயலைக்
கருதிடாக் கயவரிற் கலங்கி
மாணிழந் தலைய விடுத்தனை அந்தோ
மயில்மிசை யொருதரம் வந்தாள்
சேணிடத் தமரர் சேனையி னதிபா
செழும்புனற் சரவணோற் பவனே
வாணியுந் திருவும் வழிபடு முமையாள்
மைந்தனே செந்தி னாயகனே. 34

காமனும் நாணத் தகுமுன தழகே
கருத்தினுட் கவின்றரக் கருதிப்
பாமலர்த் தொடையும் வனைதரு மெனக்கோர்
பரிசுநீ யுதவுநாள் வருமோ
கோமளக் குறத்தி கரத்தினாற் பிசைந்து
கொடுத்தமா வருந்திய குழகா
மாமதத் தயிரா வணக்களிறு டையார்
மைந்தனே செந்தி னாயகனே. 35

பல்லியங் கறங்கப் பாவலர் பாடப்
பண்ணவர் முனிவர்கண் டிறைஞ்ச
எல்லினும் பவனி வருமுனைக் குறியா
திசைந்தவா றெண்ணியிங் கிடைந்தேன்
கல்லினந் தோறும் நடம்புரி திருத்தாட்
கடவுளே கருணைவா ரிதியே
வல்லியங் கொடிநேர் இடைப்பரை மடியின்
மைந்தனே செந்தி னாயகனே. 36

---

33 சிலம்பினம் – மலைகள், குழலை – பிரவணம்.

35 அயிராவணம் - பிரமனது யானை (இரண்டாயிரம் கொம்புடையது)

பாகுவுங் கசக்கத் தகுபெருஞ் சுவைசேர்
பசுந்தமிழ்ப் பனுவலார் பலர்க்கன்(று)
ஆகுலந் தவிரப் புரிந்தநீ யின்றென்
அளவுமேன் இரங்கிலாய் அந்தோ
மாகுணக் கடலே மரகதக் கலப
மயிற்பரி யுகைத்தவா னவனே
வாகுவென் றிருநாற் றிசையையுங் கொண்டார்
மைந்தனே செந்திணு யகனே. 37

ஓலைகொண் டெதிர்வந் துறுக்கும்வெங் குணத்தார்
உரம்நினைத் துள்ளுடைந் துன்கை
வேலையே துணையென் றிருக்குமென் றனைநீ
விடும்வித மென்கோலோ அறியேன்
மாலையும் கனலும் பவளமுங் கலந்த
வடிவுடைக் குருபரக் குகனே
வாலைமுற் பகர்மூ வகையுருக் கொள்வாள்
மைந்தனே செந்திணு யகனே. 38

கல்லினுங் கொடிய மனத்தினே னெனினும்
காசினி நின்னதா ளென்னும்
சொல்லினுக் குரியே ஞகினேன் அதஞற்
றுயர்க்கடல் சுவறுமாண் பருள்வாய்
எல்லினங் குடியுற் றிருத்தலே போலும்
ஈரிரண் டங்கத மிசைத்தாய்
வல்லியப் புலித்தோ லரைக்கசைத் துள்ளார்
மைந்தனே செந்திணு யகனே, 39

தேறிய புலமைத் திறலுளார் மதியாச்
சிதடனேன் எனினும்நீ யென்பாற்
கூறிய மாற்றம் அனந்தமுண் டவற்றிற்
குவலய மறியவொன் றியற்றுய்

38. மாலை – செக்கர்வானம், கனல் – நெருப்பு. இவை முருகன் திருமேனியின் செந்நிறத்துக்கு உவமை மூவகை உரு – பாலை, புவனை, திரிபுரை என்ற தேவி வடிவம் மூன்று என்க.
39. எல் இனம் – சூரியர்கள், அங்கதம் – தோளணி.

ஆறிரு கரத்தோர் பவளவான் பொருப்பே
அமலதே சிகர்க்கர சானாய்
மாறிலாக் கருணைப் பெருக்குறு கவுரி
மைந்தனே செந்தினா யகனே 40

பொய்யினும் உனது திருவருட் பெருமை
புணர்தரப் புகல்வது மன்றி
மெய்யினுந் தவள நீறுமிக் கணிவேன்
விருப்பெலாம் வீண்படத் தகுமோ
கையினுங் கமலக் கழலினு மலருங்
கடப்பமா லிகைபுனை கந்தா
மையினுங் கறுத்த களமுடைப் பெருமான்
மைந்தனே செந்தினா யகனே 41

சீதவெண் மதியிற் றிகழும் நான்மருப்புச்
சிகரியிற் றிரிதரும் மகவான்
ஏதமுற் றொழித்த பெருமை கேட்டுனையே
யிலக்கெனக் குறித்தனன் கண்டாய்
போதனைப் புடைத்துச் சிறையிலிட் டளவில்
புவனமும் புதுக்கிய புனிதா
மாதரி கமல மலர்க்கர மகலா
மைந்தனே செந்தினா யகனே, 42

எள்ளலிற் சிறந்த சமணரா தியர்தம்
இகல்முழு தழிக்கும் வீறெய்தித்
தெள்ளலந் தமிழ்கொண் டுனைத்தினந் துதிக்கும்
சிறப்பெனக் களிப்பதற் கிரங்காய்
புள்ளலம் புறுசெங் கடம்பமா லிகையாய்
புகழ்பவர் விருப்பெலாங் கொடுக்கும்
வள்ளலார் நுதற்கண் மணியெனப் பிறந்த
மைந்தனே செந்தினா யகனே. 43

42. மாதரி – உமையவள்.

43. நுதற்கண் - நெற்றிக்கண்

அகத்திய முனிவ னாதிய பெரியோர்
அவையினுக் கருகுசென் றிறைஞ்சி
இகத்தினும் பரத்தும் நிறைந்தமெய்ப் புகழ்ச்சீர்
எய்திட விரும்பலென் இயல்போ
நகத்திரள் தோறும் நடம்புரி பதத்தாய்
நக்கனைப் பகைத்ததோர் தக்கன்
மகத்தினைச் சுடலை யாகிடச் சபித்தாள்
மைந்தனே செந்திநா யகனே. 44

தடங்கடல் பொருநை யாதிய புனலும்
தழலுமுன் கவர்ந்தசெந் தமிழ்ப்பாட்(டு)
அடங்கலும் கொடுத்தாண் டருள்வலி உனக்கின்
றுயினும், அவ்வணம் பகராய்!
கடங்கலுழ் களிற்று மாமுகற் கிளையாய்
கனகனைக் கனன்(று) உயிர்குடித்த
மடங்கலைத் தடியச் சரபம தானார்
மைந்தனே செந்திநா யகனே, 45

சேல்கவின் றருகட் சிறுமியர் கனகச்
சிமிழ்முலை மறந்துநின் திருக்கை
வேல்களோ டுள்ள வியனெலாங் கருதி
மெய்யருட் பேறுறப் புரியாய்
கால்களாற் பொருது கூவிய பறவைக்
கையனே! கணத்திலோர் பத்து
மால்களைப் பயந்த மணிவிர லுடையாள்
மைந்தனே செந்திநா யகனே. 46

---

44. நகத்திரள் – மலைக்கூட்டம், மகத்தினை – யாகத்தை, சுடலை – மயானம் (அழிவுக்குரியதாக).

45 பொருநை – தாமிரபரணியாறு, கடம்கலுழ் - மதத்தைப் பொழிகின்ற, கனகனை – இரணியனை, மடங்கல் – சிங்கம், சரபம் – ஓர்வகைப் பறவை, எண்கால் உடையது.

46. வேல்களோடுள்ளவியன் – வேல் முதலிய ஆயுதங்களும், மற்றுமுள்ள அலங்காரங்களும்.

நீதமோர் சிறிதும் அறிகிலார்க் கஞ்சி
நெடிதுயிர்த் தலமரும் தமியேன்
பூதல முதலாம் உலகமோர் மூன்றும்
புகழும்வாழ் வுறுந்தின முளதோ
காதள வோடுங் கரியகட் குறத்தி
கணவனே கதிரயிற் கரத்தாய்
மாதவர் மடவார் மனங்கவர்ந் திரந்தார்
மைந்தனே செந்திளு யகனே. 47

நஞ்சுறை களத்துப் பரமனுர் அருணை
நகரியின் சிகரியி லமர்ந்த
அஞ்சுகம் பகர்ந்த திருப்புகழ்க் கவியோ(டு)
அடியனேன் தமிழுமென் றணிவாய்
கிஞ்சுகப் பதத்துக் குறமகள் பாகா
கிளர்தனி வேலுடைக் கிழவா
மஞ்சுறழ் கூந்தற் கவுரியீன் றெடுத்த
மைந்தனே செந்தி ஞயகனே. 48

ஆசுமுற் பகரும் கவியொரு நான்கும்
அறைபவர்க் கருள்செய்வா யென்னத்
தேசுறும் நின்றேள் மிசையுறுங் கிளிமுன்
செப்பிய சொற்பயன் தீதோ
வீசுதெண் டிரைநீர்ச் சாகரஞ் சுவற
விடுத்தவேல் விகிர்தனே! விடங்கால்
மாசுணப் பெருக்கைப் பணியெனப் புனைவார்
மைந்தனே செந்திளு யகனே. 49

---

47. மாதவர் மடவார் – தாருகவனத்து முனி பத்தினிகள், இரந்தார் – பிட்சாடன வடிவுற்றுச் சென்ற பரமன்.

48. அஞ்சுகம் – கிளி வடிவினரான அருணகிரிநாதர், கிஞ்சுகம் – முருக்கம்பூ (செந்நிறமுடையது)

49. நான்குவிதக் கவி – ஆசு, மதுரம், சித்திரம், வித்தார மென்பன, **வேல்விடுத்த-மதுரையில் உக்கிரகுமார பாண்டியனுக முருகன் உதித்தபோது கடல் சுவற வேல் விட்ட வரலாறு.**

விதிமர பினருட் சீரிய ராகி
விளங்கிய திரிசுதந் தரர்மேற்
பதியும்நின் கருணைப் பெருக்கையோர் கோடி
பங்குவைத் தென்றனக் கருள்வாய்
பொதியைமா முனிவற் கருளிய கரத்தாய்
புலைத்தொழிற் பூரியர்க் கரியாய்
மதியினைக் கமலக் கழல்கொடு தேய்த்தாள்
மைந்தனே செந்தினா யகனே. 50

நால்வகை யோனிப் பிறப்பிலும் புகுந்து
நைவுறும் நாயினேன் றன்னைப்
பால்வழிந் தனைய அருவியம் பொதியைப்
பருப்பதத் தினனொடு பழக்காய்
கோல்வளைக் கரத்துக் குஞ்சரி பாகா
கொற்றவை வேற்படைக் குகனே
வால்வளைக் குழையார்க் (கு)உயிரினு மினிய
மைந்தனே செந்தி னாயகனே. 51

சூதுகொண் டுலகைக் கெடுப்பவர் பகையாற்
றுயர்படும் தொடக்கெலாம் தொலைவான்
போதுகொண் டுனது வேற்படைப் பூசை
புரிவதும் அறிகிலாய் கொல்லோ
தீதுகொண் டவருந் திருவருள் கொள்ளச்
செயத்தகு சிவகுரு பரனே
வாதுகொண் டரனோ டாடிய வனிதை
மைந்தனே செந்தினா யகனே 52

---

50. மதியினை......தேய்த்தாள் – தக்கயாகத்தில் காளியாகத் தோன்றிச் சந்திரனைக் காலால் தேய்த்த சிவசக்தி.

51. நால்வகைப் பிறப்பு – வித்து, வியர்வை, கரு, முட்டை என்பன.

52. வாது......வனிதை – சிவனோடு எதிர்த்து நடித்த உமையவள்.

நயனுறப் பயிலும் வீணையங் கரத்து
நாரதன் மகத்தழல் நல்கும்
அயமதை அடக்கி ஆண்டநீ அடியேன்
அகத்தையேன் அடக்கிலாய் அந்தோ
புயனிறங் குலவும் நெடியமால் மருகா
பொருப்பெலாம் உடையவேல் முருகா
வயமலி சூலப் படையுடைப் பரமன்
மைந்தனே செந்திலு யகனே. 53

வேதநூல் விரித்த வியாதமா முனிவன்
வியன்கிளி முகமுடைச் சுதனுக்(கு)
ஆதரத் தோடும் உரைத்தநின் பெருமை
அனைத்தும் நான் மறக்கிலேன் கண்டாய்
சீதளக் கடம்பும் செச்சையும் குரவும்
செறிந்தவிர் திருவடிக் குமரா
மாதளங் கனிநேர் முலைப்பரா பரைதன்
மைந்தனே செந்திலு யகனே. 54

திண்டிறற் புலவர் தம்மைவெல் பெருமை
திகழ்முசு குந்தனுக் கருளல்
கண்டியம் பினர்சொற் கேட்டெழு தினர்நூல்
கருதிநின் கழற்றுணை விழைந்தேன்
வெண்டிரு இறைஞ்சக் கலைமுழு துணர்ந்து
வியன்புகழ் பொறுத்தவித் தகனே
வண்டிசை பயிலும் ஆத்தியந் தொடையார்
மைந்தனே செந்திலு யகனே. 55

---

53. அயம் – ஆடு, அசம் என்பதன் திரிபு.

54. சுதன் – சுகப்பிரம முனிவர்.

55. ஏழை – முருகம்மை, முருகா என்று கூவி நடனம் செய்த முனிவரது தோற்றத்தால் பத்திவயப்பட்டு, சதாவும் முருக நாமம் கூறியபோது அவ தூறுக்கஞ்சிய கணவனால் கைவிடப்பட்டபோது முருகன் காட்சிதந்து உதவிய கதை.

ஊழைவென் றுளமா முனிநடங் கண்ணுற்(று)
　　உறுதியால் முருகனென் றுரைத்த,
ஏழைகை யிழந்து வருந்துமுன் சிகிமீ
　　திலங்கியாண் டருளிய திலையோ
பேழையிற் றிகழும் வயிறுடைக் களிற்றின்
　　பின்பிறந் துயர்ந்தபீ டுடையாய்
மாழையங் கிரிநேர் முலைத்துணைக் கவுரி
　　மைந்தனே செந்திநா யகனே. 56

ஈனமார் குதிரைத் தலைகொளும் அலகைக்(கு)
　　இளைத்திடைந் திறைஞ்சிய புலவன்
மானவேற் படையால் உய்ந்தன னெனஇம்
　　மகிதலம் பகர்வது வம்போ
பானலங் கருங்கட் குறமகள் பாகா
　　பன்னிரு கரத்தொரு பரனே
வானவ ருடலம் பொடிந்தநீ றணிந்தார்
　　மைந்தனே செந்திநா யகனே. 57

ஓகையோ டுருவம் கரந்தொரு கவியேற்(று)
　　ஒருகவி யுரைத்ததுண் டாகிற்
றோகைமா மயிலிற் றுலங்கியென் றனைநின்
　　தொழும்பரிற் கூட்டிடத் தகுமே
ஈகையிற் சிறந்த பன்னிரு கரத்தெம்
　　இறைவனே எஃகவே லுடையாய்
வாகைசேர் மடங்கற் பரித்திரி புரைதன்
　　மைந்தனே செந்திநா யகனே. 58

57. புலவன் – கற்கிமுகி என்ற பெயருள்ள பெண் குதிரை முகமுடைய பூதத்தால், சிறை செய்யப்பட்டு, ஆற்றுப்படை பாடிய நற்கீர முனிவர், வேலாயுதத்தாற் குகை பிளக்கப்பட்டுத் திருவருள் பெற்ற வரலாறு.

58. உருவம் கரந்து – வேட வடிவுடன் பாடல் கேட்டும் பாடல் கூறியும் பொய்யாமொழிப் புலவரை ஆண்ட விபரம். (முட்டையெனப் பாடச் செய்தது)

தாமதக் குணத்துக் கயவர்பால் இரந்து
தவிக்குமென் றன்னைநீ தடுத்தாண்(டு)
ஏமமும் பொழியும் ஒருமுகி லெனப்பா
ரிடத்தினிற் குலவவைத் தருள்வாய்
பாமலர்த் தொடையற் சுவையொடு மணமும்
பருகிய பன்னிரு செவியாய்
வாமபா கத்தோர் மடந்தைவைத் தவர்தம்
மைந்தனே செந்திநா யகனே. 59

இட்டுணா லோபர் தம்மையும் பொருளாம்
எனமதித் தின்றமிழ்க் கவிதை
கொட்டுவார் குழுவிற் கூடிநெஞ் சயரும்
கொடுமைதீர்ந் துய்யும்நா ளுளதோ
திட்டுவார் தமக்குந் திருவருள் வழங்கும்
தெய்வமாஞ் சிவகுரு பரனே
மட்டுலாங் கரிய கூந்தலம் புவனை
மைந்தனே செந்திநா யகனே. 60

மிகுத்துள பொருளைப், பூமியை, மின்போல்
விளங்கிழை மாதரை, மேவிப்
பகுத்துமிஞ் சினர்பால் இரந்தலைத் திளைக்கும்
பருவரற் றவிர்க்கஇன் றிரங்காய்
செகுத்துவெஞ் சூர்மா வேர்களைந் தமரர்
தியக்கறச் செய்தவே லவனே
வழுத்திடும் எழுநான் காகமம் உடையார்
மைந்தனே செந்திநா யகனே. 61

பொன்னகர்க் கிறைவ னாதியர் தாமும்
புகழஇப் பூமியிற் றிகழ்வுற்(று)
உன்னடித் துணையிற் கலப்பதே விழைந்தீண்(டு)
உருகுவ தறிகிலாய் கொல்லோ

60. மட்டு உலாம் – மணம் விளங்கும்.
61. சூர்மா – சூரனாகிய மாமரம்.

பன்னகத் தரசும் நடுக்குறக் கூவும்
பசியமா மயிலிவர் பரனே
வன்னமே கலைப்பார்ப் பதிமடிக் கழகாம்
மைந்தனே செந்திரு யகனே. 62

கோணல்வெண் பிறைக்கோட்(டு) இபமிசைக் குலவிக்
குவலயம் புரப்பவர் வாழ்வும்
ஏணலவெ னக்கண் டிகழ்ந்தும்நின் னடிமை
யெனும்பெயர் விழைந்துளேன் கண்டாய்
பூணணி களப முலைமிரு ரிருவர்
புணர்ந்ததோட் பொருப்புடைப் புனிதா
வாணரு தியர்க்கும் வரமிகக் கொடுத்தார்
மைந்தனே செந்திரு யகனே 63

இரைக்கலைந் திளைக்கும் ஈனரு டொருவன்
எனப்புவி யிகழ்தல்முற் றொழித்துக்
கரைக்கடங் கரும்பே ரின்பவா ரிதியின்
களிப்பெனக்(கு) அளிக்கும்நா ளுளதோ
குரைக்கும்நாய் நரியொத் தூன்மிகப் பருகும்
கொள்கையோ ருணர்வறுங் குகனே
வரைக்குலம் பரவு(ம்) மேனைபால் வளர்ந்தாள்
மைந்தனே செந்திரு யகனே. 64

சதுமுகப் பிரமன் சிருட்டியா தியவாச்
சாற்றுமுத் தொழில்களாற் றயங்கல்
சுதுமெனத் தவிரக் கருணையா ருெழுகுங்
கடைக்கணுற் சற்றெனைப் பாராய்
பொதுமுத லாயே யிருந்து(ம்) மெய்யடியார்
புந்தியிற் சொந்தமு மாவாய்
மதுரையிற் சங்கப் பலகையொன் றமைத்தார்
மைந்தனே செந்திரு யகனே. 65

62. பன்னகத்தரசு – பாம்பரசனுகிய ஆதிசேடன். (பாம்பின் பகை மயிலாதலால்) கூவும் ஓசையினுல் அஞ்சினுன் என்க.

சயிலமெங் கணும்நின் றெழும்பரோ டேகிச்
சந்ததம் நின்புகழ் பாடி
வெயில்நில வெறிக்கும் இடந்தொறுந் திகழும்
மெய்ப்புகழ் பெற்றிட விழைந்தேன்
அயிலணி தடந்தோள் ஆறிரண் டுடையாய்
அறுமுகத் தொருபரம் பொருளே
மயில்பொரு சாயற் பகவதி பயந்த
மைந்தனே செந்தினா யகனே. 66

பகருமுன் புளிய மரக்கிளை தெறித்துப்
பாரினில் விழும்படி பார்த்தோன்
நிகர்பலர்க் களித்த பெருமையிற் சிறிது
நீயெனக் கருள்வதெப் பொழுதோ
தகரமுண் டிருண்ட கூந்தலஞ் சசிதன்
தமநிய மங்கலம் புரந்தாய்
மகரகே தனனைத் தகித்தகண் ணுடையார்
மைந்தனே செந்தினா யகனே. 67

தேந்தமிழ்ப் புலமைச் சிரம்பொரு மதுரத்
திருப்புகழ் தொடுத்தவர் சிலரு(டு)
ஆந்தகை பொறுத்தும் அடியனேன் இவ்வா(று)
அலமரத் தகுங்கொலோ அறையாய்
காந்தளின் மலர்நேர் கரத்தினாற் குறத்தி
கள்ளுடன் பிசைந்தமா அயின்றாய்
மாந்தளிர் மேனிச் சிவைமுலை பருகும்
மைந்தனே செந்தினா யகனே. 68

67. பார்த்தோன் – வீரபாண்டியப் புலவர், தகரம் – வாசனை, சசி – இந்திராணி, மகரகேதனன் – மீன்கொடியுடைய மன்மதன்.

68. காந்தள்மலர் – கைவிரல் போல, சிவந்து நீண்ட ஐந்து இதழுடைய பூ, கள் – தேன்.

உனைமிக விரும்பித் துதிக்குமோர் புலவன்
உறுகணுற்(று) ஊரவர் தம்மாற்
பினைவரத் திரும்பிப் பார்த்(து)அவன் புகழைப்
பெருக்கிய பெற்றியெங்(கு) ஒளித்தாய்
அனையினைத் திருக்கை வேற்படை யாக்கி
அணிந்துநின் றுடிடும் அரசே
மனைவியைப் பாதி யுடலில்வைத் திருப்பார்
மைந்தனே செந்திநா யகனே. 69

பெறுதலுக் கரிய பேறுபெற் றுயர்ந்த
பிரபுட தேவனுக் கிருகண்
இறுதியுற் றிடச்செய் தொருவன்வேண் டுதலால்
ஈந்தமை கருதியும் இடைந்தேன்
அறுமுகத் தொருவா ஆறிரு கரத்தெம்
அண்ணலே அமுதவா ரிதியே
மறுவில்பே ரருட்கற் புடையபார்ப் பதிதன்
மைந்தனே செந்திநா யகனே. 70

ஆனியில் பெருமைச் சிகரியோன் றியற்றும்
அருந்தவற் கம்பொன்மிக் கருளி
மாநிலத் திடையோர் வன்னமு மெடுக்கும்
வகையுரைத் திட்டதும் வம்போ

69. ஓர் புலவன் - ஆறுமுகப் புலவர். செந்திலில் ஆறுமுக நயினார் பின்புறம் திரும்பும்படி பாடினர், துறவியாயிருந்தும் குலத்திற் குறைந்தவரென்று சுவாமி முன்பு பாடியபோது சிலர் இகழ்ந்து பின்புறம் சென்று பாடுக என்றனர். அப்படிச் சென்று பாடினர். முருகன் வடிவம் பின்புறம் திரும்பியது, ஏழாம் நாள் விழாவில் பின்புறமுகம் நடராசராக இன்றும் அலங்காரம் செய்வர். 'ஆறுமுகச் சிவனே ஐந்து முகச் சிவனை அடிமைக்குச் சொல்ல வேண்டும்' என்பது பாட்டு. கந்தசாமி புலவர் மகன் இவர். விபரம் புலவர் புராணத்தறிக.

70. ஒருவன் - அருணகிரிநாதர். முருகன் சேவையைக் கண்ட ஒளியால் அரசன் கண்ணிழந்தான். பின் அவராற் பெற்றான் என்பது அருணகிரிநாதர் புராணச் செய்தி,

கூனிய தவளமருப் பின்வெங் களிற்றைக்
குன்றொடு தடிந்தவேற் குகனே
வானிறக் கயிலைக் கிரியுடைப் பெருமான்
மைந்தனே செந்திநா யகனே. 71

கழைமலி பழன மதுரைமா நகர்க்கோன்
கன்னிதன் கற்கிமா முகம்போய்
உழைவிழிக் கமல மலர்நிகர் வதனம்
உறச்செயும் உண்மைபொய்த் திடுமோ
தழைசெவிக் களிற்று மாமுகற் கிளைய
தம்பிரா னெனில்மகிழ் தகையாய்
மழைபொரு கருணைத் திருமுகத் துமையாள்
மைந்தனே செந்திநா யகனே. 72

தங்கணத் தொருவ னெனக்குறித் திகலித்
தனையடித் தவனிரு கரமும்
கங்கணம் புனையப் புரிந்தநின் கருணைக்
கடலினைக் கருதிலேன் கொல்லோ
வெங்கணத் தொகுதி சூழநின் றுடி
வீடுதோ றிரப்பினும் விரும்பும்
வங்கண னுகத் தனதனைக் கொண்டார்
மைந்தனே செந்திநா யகனே. 73

---

71. திருச்செந்திற் கோபுரம் அமைத்த பெரியார் – கூலியாகத் திருநீறு உதவி, குடலையுள் பணம் வேலைக்கேற்பப் பெறச் செய்தனர். சாதிலிங்க மென்ற வண்ணம் எடுக்கும் வகை பெருமான் கூறப் பெற்றனர் என்பதாம் வளைந்த தந்தத்தையுடைய தாருகனுன யானை முகவன் அவனோடு, கிரவுஞ்ச மலை ஆகிய இரண்டையும் வேலாயுதத்தாற் பிளந்த செய்தி.

72. கழைமலி பழனம் – கரும்பு விளையும் வயல். சாபத்தால் பாண்டியன் மகள் பெண் குதிரை முகமாயிருந்தனள். செந்தூர்க் கடற்றுறையில் முழுகி எழுந்த போது மாறி மனித முகமாயிற்று. அந்தத் துறை, வதன அரவிந்தம் என வழங்குகிறது. வதனம் – முகம், அரவிந்தம – தாமரை (ஒத்தது).

73. வலைச்சி ஒருத்திக்காக, முருகன் மாறுவேடம் கொண்டு, பழனி வைகாபுரிக் குளத்து மீன்பிடித்த குவியலில் ஒரு கூடையில் அள்ளினர். காவற்காரன் கண்டு துரத்தும்படி சென்று, அவன் வீட்டிற் செல்லுமளவில் அவனடிக்கப் பெற்று அவனிடம் தந்து முருகன் மறைந்தான் அடித்த அவனுக்கு பொற்கங்கணம் போடும்படி முருகன் ஆணையிட்டருளிய செய்தி. வங்கணன் – தோழன், தனதன் – குபேரன், செல்வத்துக்கதிபதி.

இல்லையென் றிரக்குஞ் சளமுழு தொழிந்தீண்
டிரப்பவர்க் கீபவ னெனுமோர்
சொல்லையும் புனையக் குறித்துநான் வருந்துந்
துயருணர்ந் திரங்கிலா யந்தோ
குல்லையந் தொடையற் குருபரக் குகனே
குறிச்சிதோ றிலகிய குருந்தே
வல்லைவென் றெளிரு முலைப்பரா பரைதன்
மைந்தனே செந்திணு யகனே. 74

ஓர்பொழு தேனும் உனைக்கரு திலர்போன்
றுழலுமென் னுள்ளகத் துன்னும்
சீர்பெறப் புரிய வல்லையோ அலையோ
தெரிதரச் செப்பினும் நலமே
வார்புவி முழுது மளந்தயின் றுமிழ்ந்த
மாயவன் மனமகிழ் மருகா
மார்பினி லாமைத் தோடுமொன் றணிந்தார்
மைந்தனே செந்திணு யகனே. 75

திலகவா ணுதலார்க் குருகுநெஞ் சுடைய
சிதடனேன் றன்னையும் சிலர்நின்
அலகில்சீர் பகரும் அருந்தமிழ் புலவ
ஞமெனப் புரிந்தவ ஞரோ
இலகுதன் னெழில்கண் டுள்ளகத் தேங்கும்
இயக்கர்கோன் வெள்ளியோ டிணைய
மலர்விழி யொன்றைக் கெடுத்தபாங் கினள்கை
மைந்தனே செந்திணு யகனே. 76

76. இயக்கர்கோன் - குபேரன். வெள்ளி - சுக்கிரன். ஒருகண் பார்வையுடையவன். ஒரு சமயம் குபேரன், உமையின் அழகுக்கேற்ப சிவன் அழகற்ற எலும்பு, ஆமை ஓடு முதலிய பூண்டுள்ளமையை நினைத்துக் குறை பட்டான். அதையறிந்த அம்பிகை சினந்து தன் அழகைக் கவனித்ததால் இரு கண்ணும் பார்வையறச் சபித்தாள். சிவன், என்னை யிழிவாகக் கண்டதால் நான் சினவவில்லை. உன்னைக் கண்டு வியந்ததற்காகச் சபித்தது ஏனென - இரண்டுக்கும் கண்தான் காரணம் என்றலும், என்னை அவமதித்தமைக்கு ஒன்றை மாற்றி. உனக்காக ஒன்றை உதவென்றனர். ஆகவே - ஒரு கண் பார்வையுடைய சுக்கிரனைப் போல. குபேரனையும் ஒரு கண் உடையவனுகச் செய்தவள் என்பதாம்.

வேதநான் முகனைப் புடைத்தநின் புகழே
விழையுமென் வினைப்பிணி மீறிச்
சாதலிற் கொடிய துயர்க்கடல் விளைக்கத்
தகுங்கொலோ சற்றருள் புரிவாய்
சீதவா ரிசத்தாட் சிலம்பினஞ் சிலம்பச்
சிலம்புதோ றுடிய சிறுவா
வாதவூர் முனிசொற் றமிழ்க்கவி வரைந்தார்
மைந்தனே செந்தி னாயகனே. 77

களவிலா மனத்துப் பெரியவர் புடையிற்
கலந்துறுங் களிப்பினைக் காட்டி
அளவறு மதுரத் தமிழ்க்கவி பொழியும்
ஆண்மையும் அடியனேற் கருள்வாய்
உளமதிற் கருதும் அக்கணந் தீம்பால்
ஒழுக்கிய முலையின ளான
வளவர்கோன் பாவைக் கொல்கிய உமையாள்
மைந்தனே செந்தி னாயகனே. 78

பூணினைப் பனுவற் புலவனுக் கருளிப்
பொருள்கொடுத் ததைத்திருப் பௌத்தன்
தாணினைத் துருகும் ஒருவனோ டுரைத்த
தனித்தொழி லினிச்செயத் தகாதோ
கோணிய பிறைச்செஞ் சடைமுத லாய
கோலமுற் றுன்னிய குணஞ்சேர்
மாணியார் நீமித்தம் மறலியைத் தடிந்தார்
மைந்தனே செந்தி னாயகனே. 79

---

77. சிலம்பினம் – பாதத்திலணிந்திருக்கும் பணி. சிலம்ப – ஒலி செய்ய. சிலம்புதோறும் - மலைதோறும்.

78. ஒல்கிய-நாணமுற்ற. மங்கையர்க்கரசி, சம்பந்தர் வரலாற்றை வினவி மதுரையிலழைத்துக் கண்டபோது பால் சுரக்கப் பெற்றாள். சீகாழிக் குளக் கரையில் அவரழுதபோது, சிவனாணைப்படி பால் கறந்து ஊட்டினள் உமை, ஆகவே தலையன்பு விளக்கினார். இலையடர்ந்த பொய்கை என்ற பாட்டில் சிவப்பிரகாசர் நான்மணி மாலையிற் கூறுவதோடு ஒப்பக்கொள்க.

செந்தரை வரகாற் சமைத்துள களியுந்
தேனுமோர் பொருளெனக் கருதி
முந்தவோ ரிருவர் காணவும் நடித்த
முதிரருள் மறைந்ததோ மொழியாய்
கந்தநாண் மலர்க ளாகிய கணையும்
கன்னலஞ் சிலைமுதற் பிறவும்
மந்தமா ருதத்தேர் மதனனுக் களித்தாள்
மைந்தனே செந்திஞ யகனே. 80

பொழிதமிழ்த் தொடையால் அளவற வனைந்துன்
பொன்னடித் துணைகளிற் புனைந்தும்
கழிபட வைத உழத்தியார்க் களித்த
கருணையுங் கண்டிலே னந்தோ
விழிமலர் மூவா றுடையவே தியனே
விண்ணுளார்ப் புரந்தவே லவனே
வழிபடு மொருவற் கமுதிரந் தளித்தார்
மைந்தனே செந்திஞ யகனே 81

அதிர்தொனிப் பேரி உதவியாற் கால
மறிந்துனை வழிபடு மவன்ஓர்
முதிரொளிக் கமல விழிதர ஒருவன்
முன்பெறச் செய்ததும் பிழையோ
துதிபகர் பனவன் கனலிடை வீழ்ந்து
துஞ்சுரு நிமித்தமே துணிந்து
மதியமா வாசை தனில்வரப் புரிந்தாள்
மைந்தனே செந்திஞ யகனே 82

மந்திர நகரில் மருமகன் வீர
வாகுவால் வரும்படி வருத்தி
உந்திய மணிநா வறுங்கவி படித்தோன்
உறுந்திறல் எனக்குத வுவையே
செந்திரு மகளும் மணியொடு துளவும்
திகழுமார் பினன்புகழ் செல்வா
வந்திதன் ஆளாய் வைகையா றடைத்தோன்
மைந்தனே செந்திஞ யகனே. 83

அங்குநின் னடிமைத் திறலுடைப் பனவர்
அருகுறத் துயில்நல மமைந்த
கங்குலிற் பகர்ந்த வாசகம் பிழைத்தாற்
கடையனேன் களிக்குமா றுளதோ
செங்குணக் கடலே திருவருட் சுடரே
தெய்வநா யகச்சிவ குருவே
மங்குறு தென்றும் வளரருட் பரைதன்
மைந்தனே செந்திநா யகனே. 84

கோளினந் தொடர்ந்து வருத்தலாற் றமியேன்
குலைகுலைந் தலைவது குறித்து
நீளியற் கலப மயிலின்மீ தொருக்கால்
நிலவியாண் டருள்செய நினைவாய்
காளிகோ வெனவீழ்ந் தலறிட இடித்த
கரத்தினன் விழைந்தபொற் கழலாய்
வாளியா மென்ன மாயனைச் சமைத்தாய்
மைந்தனே செந்திநா யகனே. 85

எண்ணருங் கவலைப் பிணியினால் மெலிவுற்
றேங்குறும் ஏழையேன் றனைநின்
தண்ணளிக் கடலினி டைமுழுக் காட்டுந்
தருணமொன் றுள்ளதோ சாற்றாய்
பண்ணவர் சேனைக் கதிபனா முன்னம்
பாரிடச் சேனைகொண் டிருந்தாய்
வண்ணவாய்க் கரிய குயில்நிக ருமையாள்
மைந்தனே செந்திநா யகனே. 86

சொல்லரும் பனுவற் றொகையெலாம் பகரும்
துணிவுடைப் புலவரைத் தொடர்ந்து
வெல்லவுங் கருதும் வீணரை மதியா
விறலெனக் குதவும்நாள் உளதோ

---

85. கரத்தினன் – வீரவாகு தேவர். வாளி – அம்பு.
86 பண்ணவர் – தேவர். பாரிடம் - பூதம்.

கல்லகந் தோறும் கமழ்தரு கமலக்
கழலுடைக் கந்தனே கடல்சூழ்
மல்லலம் புவித்தேர் நடத்திய சிவனார்
மைந்தனே செந்திநா யகனே. 87

மலக்கொடும் பிணிமூன் றுளதெனத் தெளியா
மயக்குறும் வஞ்சர்தம் பகையால்
கலக்கமுற் றிடையும் கடையனேன் மனமும்
களிப்புறக் கருணைசெய் குவையோ
இலக்கறப் பெருத்த பாரினைச் சுமக்கும்
ஈடுள மாசுணத் தரசை
வலக்கையின் விரற்சிற் றாழியாப் புனைவாள்
மைந்தனே செந்திநா யகனே. 88

ஓடைமால் களிற்றின் உலவுபல் பகைஞர்க்
கொருபெரு மடங்கலே றொத்துக்
கோடைவான் இடியிற் குமுறிவென் றுயர்சீர்
கொடுத்திட வல்லையென் றடுத்தேன்
ஆடையா மெனஎண் டிசையையு மணிந்தும்
அமரர்தம் நிமித்தம்அம் பிகைமுன்
மாடையம் பலத்தில் நடம்புரி பெருமான்
மைந்தனே செந்திநா யகனே. 89

காயக மனத்துக் கடையரை மதித்துக்
கவிபல கழறியும் துதிக்கும்
பேயரோ டிகலித் திரியுமென் றனக்கோர்
பெருமையென் றருள்வையோ பேசாய்
தூயவா ணகைக்குஞ் சரிபுணர் கணவா
துதிக்கைமா முகத்தினன் றுணைவா
மாயனுஞ் சிவையு மாகிய ஒருத்தி
மைந்தனே செந்திநா யகனே. 90

87. பிணி மூன்று – ஆணவம், மாயை, கன்மம் என்ற மலங்கள், மாசுணத்து அரசு – ஆதிசேடன்.

89. மடங்கல் ஏறு – ஆண் சிங்கம். மாடை அம்பலம் – பொற்சபை.

ஏழ்வகைப் பிறவித் துயரினுக் கஞ்சி
யிடையரு துன்னையே யெண்ணித்
தாழ்வொருங் கொழிக்கத் தகுமெழுத் தாறே
சதமெனப் பகரும்வீ றருள்வாய்
பாழ்வினைச் சளந்தீர்ந் துய்யவேண் டினர்க்கும்
பயன்பல குறித்தபத் தருக்கும்
வாழ்வெலாம் உதவத் தக்கபாண் டரங்கன்
மைந்தனே செந்தினா யகனே, 91

காவிமா மலர்க்கட் சிறுமியர் மயலாற்
கலங்குமென் கருத்தினைத் திருத்தி
ஆவியைத் திருத்தாட் டுணையுடன் கலந்தாண்
டருளினின் புகழ்க்கழ கன்றோ
தாவில்மெய்த் தவத்து மலையர சுவக்கத்
தகுசிறு தனையளாய்த் தடநீர்
வாவியின் கமலப் பொகுட்டின்மீ தவிர்ந்தாள்
மைந்தனே செந்தினா யகனே. 92

பாகசா தனன்முற் பகர்பல தேவர்
பருவரல் முழுமையுந் தவிர்ப்பான்
வேகவெஞ் சூர்மா முதலினர்த் தடிந்த
வெற்றிவேற் புகழ்மிக விழைவேன்
ஏகதத் துவனே எவ்வெவ ரெண்ணத்
தெவ்வண மவ்வண மிருப்பாய்
மாகமே வழியா வரும்விடைப் பரியார்
மைந்தனே செந்தினா யகனே. 93

குற்றமெங் கணும்போய் நின்றிருப் புகழே
கூறிவெங் கொலைத்தொழி லினரை

91. பாண்டரங்கன் – சிவன். சிவன் கூத்து பாண்டரங்கம், அதை யுடையவன் என்பதாம்.

93. பாகசாதனன் – இந்திரன். அன்பர் விரும்பிய வடிவுடையவன் பெருமான் என்பது.

வென்றரு ளாடல் விளைக்குமெய்த் திறமை
விரைந்தெனக் கருளவல் லாயோ
மின்றயங் கியவேல் விகிர்தனே யனந்தம்
வெற்பனே விடைப்பரி யுடையார்
மன்றகத் தாடல் காணுமம் பிகைதன்
மைந்தனே செந்தினா யகனே. 9

கூரிய தனிவேற் குமரனே முதன்மைக்
குருவெனச் சந்ததங் கூறும்
ஆரிய முனிவோர் புடையினிற் கூடி
அருட்கடல் குளிப்ப தென்றறையாய்
சீறிய அமரர் புடையழு தலறித்
தியக்குற மாசுணஞ் சிதறும்
வாரியின் விடமுற் றயின்றவாய்ப் பரமன்
மைந்தனே செந்தினா யகனே. 9

பதனமா மனத்தைத் தடுத்துடல் முழுதும்
பழுதில்வெண் ணீறுமிக் கணிந்து
புதனல ரியைநேர் புலமையுற் றுனது
பொன்னடி போற்றும்வாழ் வருள்வாய்
மதனவேள் கண்டு தன்னுருக் கரக்க
வயங்கெழில் மலிந்தசண் முகனே
வதனமா யிரங்கொண் டுலவிய பெரியாள்
மைந்தனே செந்தினா யகனே. 9

கட்கரி முகவன் வயிரவன் காளி
கலதியன் னவரென்மேற் கனன்று
விடஅரி யெனவந் துறுக்குநாள் உனது
மெய்யருள் வென்றதோர்ந் திலனோ
புடவியில் வானிற் பிலத்தினில் உள்ளார்
புகல்பல தேவரு மாவாய்

95. மாசுணம் - வாசுகி என்ற பாம்பு (உமிழ்ந்த பாற்கடல் விடம்.)

96. பதனமா-பல இச்சையில் ஓடா வண்ணம் மனத்தைப் பாதுகாத்
அலரி-சூரியன். புதன்-கல்வியிற் சிறந்தவர்கள். பெரியாள் - காளிதேவி.

வடநிழ லதனில் மருவுதே சிகனா்
மைந்தனே செந்திஞ யகனே. 97

தீயையு முறுக்குந் திறற்கரி முகனைச்
சிங்கனைச் சூரனைச் செற்றாய்
தாயைவேற் படையாய்த் தரித்தனை தமியேன்
றவப்பயன் தரச்சிறி திரங்காய்
வேயைவென் றவிர்தோள் மடந்தையர் பலராய்
மேதினி விளக்கியும் விளங்கா
மாயையு மாகி அருளுமாய் நிறைந்தாள்
மைந்தனே செந்திஞ யகனே. 98

முழங்குமுத் தமிழ்ச்சொற் பாடலுக் கினிய
மூர்த்திநீ யென்றுணர்ந் தடைந்தும்
கழங்குடைக் கரத்தார் ஆதியே டனையாற்
கலங்குற வொழிந்திலேன் கண்டாய்
கிழங்குதேன் தினைமா உணக்கொடுத் துருக்கும்
கிளிமொழிக் குறமகள் கேள்வா
வழங்குவ அனைத்து மாகியும் ஆகார்
மைந்தனே செந்திஞ யகனே. 99

நிறையுமெய் யுணர்ச்சி யின்றிய என்பால்
நீயுரைத் தவையெலாம் நிசமேற்
குறைவறு பரமா னந்தவா ரிதியிற்
குளிப்பதுண் டென்னவே குறித்தேன்
சிறைதவிர்த் தமரர் தமைப்புரந் தாண்டாய்
சிலம்பின மெங்கணும் சிறந்தாய்
மறைநெறிச் சமயந் தொறுந்திக ழொருதாய்
மைந்தனே செந்திஞ யகனே. 100

---

. ஏடனை – மண், பெண், பொன் என்ற மூன்றாசை.

0. மறைநெறிச் சமயம் – வேதத்துட் கூறப்பட்ட சண்மதங்கள்.

## நூற்பயன்

தூய வேதியர் புடைமிகப் பெருகலாற்
    றுலங்கெழிற் றிருச்செந்தில்
நாய கன்புயத் தணிதரு கடம்புறழ்
    நறுந்தமிழ்ச் சதகத்தை
ஆய வல்லவர் அநுதினந் துதிப்பவர்
    அனையவ ரனைவோரும்
மாயஞ மெனப் புவியிலுற் றரனென
    வானகத் தவிர்வாரே.

வேலுமயிலுந் துணை.



உ
செந்திலாண்டவன் துணை.

# திருச்செந்திற் பிரபந்தம் பதினாறில் ஏழாவது

# உலா

## முன்னுரை

கலாப மயிலேறுங் கந்தன்செந் தூரில்
உலாவந்த மாண்பை உரைத்துக் - குலாவுமிந்நூல்
வண்ணச் சரபமென வந்ததண்ட பாணிமுனி
எண்ணத் திருந்துதித்த தே.

தமிழ்மொழியிடத்து ஏற்பட்டுள்ள பிரபந்தவகை நாண்ணூருறில் உலா என்பதும் ஒன்று, கடவுளர்களையோ ரசர்களையோ குறிக்கொண்டு, அவர்கள் வீதியிற் பவனி நங்காலத்து உண்டாகும் சிறப்புகள், பரிசனங்களின் ஆர ரம், அவரவர்க்கேற்ற வெற்றி, புகழ், வள்ளன்மை, கருணை, ாங்கம் என்ற பத்து அங்கங்கள், ஆகியவற்றைப் பலநயம் ., கலிவெண்பாவில் பாடப்பெறும் சுவையான நூல். பல லா நூல்கள் நமது முன்னோர் பாடியுள்ளனர்.

ஆதியுலா - ஞானவுலா என்ற சிறப்புடைய உலா நூல், ரமான்பெருமாள் நாயனர் பாடியது. சுந்தரமூர்த்தி பனருடன் கயிலாயம் சென்ற காலத்தில் சிவபிரான் சந்நிதி அரங்கேற்றப் பெற்றதென்றால் அதன் சிறப்பை என் ன்று கூறுவது. அதன்பின் சோழ மன்னர்கள் ஆட்சியில் ற்குலோத்துங்கன் மீது பாடப்பெற்றதும், பிறவும் பலவுள் ர, முன்னையது சிவபரமான அநுபவ நூல். பிற்பட்டவை சன் புகழ் கூறி, அவனது கொடையை நாடிப் பாடப் டவையாம்.

இந்நூலினிடத்து, தலைவன் உலாவருங்காலத்து, பேதை லாகப் பேரிளம்பெண் ஈருகவுள்ள ஏழு பருவ மாதர்களும்,

அவரவர் நிலைக்கேற்பத் தலைவன் மீது காமுற்ற செய்தி கூ
வது மரபு. அரசரைப்பற்றிக் கூறிய உலாவில், அவன
புகழ்ந்தும் புனைந்தும் சிறப்புக் கூறிப் பொருளைப் பெற்றன
புலவர்கள், இறைவன்மீது கூறப்பெறும் உலாவில் அம்முன
யில் தூலப்பொருளைக் கொள்வது தவறு; முறையுமன்
பேதை என்ற சொல் அறியாமையைக் குறிக்கும். உயிர், எ
றும் உலக மயக்கத்தில் ஈடுபட்டு இறைவன் தன்மையறியா
நிலையினது. அதுவே பேதைப்பருவம். நூலாராய்வும், பய
சியும் பெற்றுப் பருவமுதிர்ந்த நிலையில், இறைவனோடுள்
ஈடுபாடு மிகுதியாகிறது இன்பாநுபவம் பெறுதற்கேற்ற பரு
முதிர்வே மடந்தை முதலிய பருவநிலையாகக் கொள்ளவே
டும். ஆண்டவனைத் தலைவனாகக்கொள்ளும் போது உய
பெண்மையுடையது. ஆண்டவன் இன்பந்தருபவன். உய
இன்பம்நுகருந் தன்மையது. அவன் சுதந்தரமுடையவ
உயிர் சுதந்தரமற்றது என்பதையறிவோம். ஆதலால் அ
முறையில் இதனிடத்தும் நூலாசிரியரான வண்ணச்சரப
தண்டபாணி சுவாமிகள் சுருங்கிய அளவில் அவ்வியல்பு கூ
கின்றார். பொதுவாகவே கற்பனை உவமைகளை விரிப்பதி
இவருக்கு நோக்கமில்லை. நேர்முகமான செய்திகளை
விளக்குவது வழக்கம். அம்முறையில் எடுத்துக்கொண்ட நூ
முறைக்கேற்ப ஓரளவு கூறியுள்ளார். கற்பனை நயம் ஆகி
வற்றைக் கற்கவிரும்புவோர் அந்நூல்களிற் காண்ட
வேண்டும். அன்றியும் உலா என்று தனியே பாடத்தொட
வில்லை. பதினாறு விதப் பனுவல்பாட எடுத்துக்கொண்
வரிசையில் இதுவும் ஒன்றாயமைத்ததாகும். ஆகவே வி
படுத்திக்கூறவும் இடந்தரவில்லை. ஏழு பருவ மாதர் இயல்
விளக்கும் முறை பற்றி ஏழாவது எண்ணுடையதா யிவ
யமைத்தனர்.

முருகப் பெருமானைத் தமது உபாசனைக்குரிய சிற
கடவுளாகக்கொண்டு தியான செபம் புரிந்து வந்தனர். தம
வீட்டின் கீழ்புறப் பார்வையான சுவற்றின்பால், ஆறுமுக
பன்னிரண்டு கையுள்ளதாக முருகனைச் சித்திரவடிவில் எழு

வள்ளி வேலாயுதம் சாத்தி, முன் பக்கமாக பன்னிரண்டு ரமிரவேல்களை நிறுத்தி, கும்பம் வைத்து, வேள்வி செய்து ாள் வழிபாடு சிறப்பு வழிபாடு செய்தனர். நாரதர், வீரவாகு, கத்தியர். இவர்கட்குச் செப்புத் தகட்டில் யந்திரம் வைத்துப் சித்தனர். தினமும் மூர்த்தியின்முன் படுத்துத் துயில்வர், ர்நாட் கனவில், நாரதர் வந்து இவரது தலைப்புறம் இருந்து, த்தகைய வாக்கு யார் உனக்குத் தந்தவர் என வினவினர். பாமிகள் விவரங் கூறுமுன், சித்திரவடிவக் குமரன், அபயம் ட்டும் வலது கையால் மார்பில் தட்டியும், வாயால், குமர நபரனாகிய அடியேன்தான் கொடுத்தேன் என்றும், மும்முறை றினர். பின் நினைவு வந்து, மிகப் பாராட்டி அவனருளை பந்தனர். தாமியற்றிய ''மயிலலங்காரத்தின் ஒரு பாடலில்,

என்பாட லேயென யான்பாடும்
பாடல்கள் யாவை யும்சேய்
தன்பாட லேயெனச் சாற்றுகின்
றுன்எந்தத் தன்மைகொண்டோ.

என்றும்

தென்பொதி யைக்குறு மாமுனி
நூற்சொலைச், செம்பவளத்
தின்கனி வாய்க்கலை மங்கைதன்
ஆடலை, யாவும்வல்ல
நின்கனற் கண்தரு சேய்சொன்ன
வாற்றை நினைந்திடில்என்
றன்கவி யொன்றுள தோதில்லை
யானந்தத் தாண்டவனே.

றும் இவர் கூறுகின்றார். இவரியற்றிய தில்லைத் வாயிரத்துள் ஆனந்தத் தாண்டவமாலையில் இப்பாடல் ாது. இது போற் பல.

உ

செந்திலாண்டவன் துணை.

# உலா

## காப்பு - வெண்பா

மோதுந் திரைக்கடற்சீர் முந்துதிருச் செந்திலெந்தைக்(கு)
ஓதும் பவனி உலாவதனில் — யாதும்
விதிக்கயல்வந் தொன்றாது மெய்ப்பொருளை நல்கத்
துதிக்கைமுகத் தாதி துணை.

## நூல் - கலிவெண்பா

சீர்மருவு 'திங்களணி செஞ்சடிலச் சித்தர்பிரான்
ஏர்மருவு நெற்றிவிழி யீன்றசேய்—வார்மருவு
கொங்கைச் சிலையுமன்றிக் கோலமுறு கார்த்திகைப்பே
மங்கையருங் கூடி வளர்த்தவேள் —சங்கையெடுத்(து)
ஊதும்நெடு மாலுக் குவந்தமரு கோன்,ஒருநன்
மாது மனமகிழ வார்கயிலை —மீதுவிடும்
கையாற் கிளையான்,எண் கட்பிரம தேவனுக்கும்
மொய்யார் மலர்வாளி மொய்ம்பனுக்கும்—மெய்யாக
நாணம் பெருக்கியருள் நாகரிக மைத்துநன்,விற்
றோணவவீ ரர்கோர்த் துணையானோன்—சேணமரர்

---

காப்பு:- பவனி, வீதி வலம் வருதல், உலா என்பதும் ஒன்றேயாம். விதிக்கு அயல் - நேர்மைக்கு மாறானதவறுகள். ஒன்றாது - பொருந்தாம ஆதி - மூத்த பிள்ளையாரான விநாயகர்

1. திங்கள் அணி — இளஞ் சந்திரனை அணிந்த, செம் சடிலம் சிவந் சடை, பிரான் - பரமன்.
3. நன்மாது - ஔவைப்பிராட்டி.
4. மொய் ஆர் — வண்டுகள் மொய்க்கின்ற, மலர் வாளி — பூக்களா அம்பு. மொய்ம்பன் - மன்மதன்,

பிரமனும் மன்மதனும் திருமால்மக்கள். அமிர்தவல்லி. சுந்தரியென் இரு பெண்கள் திருமாலது மகள்கள்.( இவரே பின் வள்ளி தெய்வயானை இவர்கள் முருகன் சத்திகளானபோதுஅவர்கள் மைத்துனராயினர்.

நவவீரர் - வீரவாகு முதலிய ஒன்பது பேர்.

சேனைக் கதிபன்,வள்ளி தெய்வானை பங்குடையான்,
மானைப் பொருவும்விழி வாணிக்குந்—தேனைப்
பொழியுமலர்ச் சோலைப் பொதியை முனிக்கும்
அழிவில்பர மானந்தம் அன்ன—கழிமதுரச்
செந்தமிழைக் கற்பித்த சேந்தன், திருப்புகழ்ச்சீர்க்
கந்தன், முருகக் கடவுளான்—சந்தநலம்
துன்றருமைப் பைந்தமிழும் சோராத வீரமொடு
தென்றலும்பைங் காவுமற்றுஞ் செப்புகின்ற—
நன்றனைத்தும்
செந்தா மரைப்பூந் திருமாதர் எண்மர்களும்
நந்தா துயர்பாண்டி நாட்டினன்—வந்தார்க்கும்
உற்றார்க் குதவும் உயர்ச்சி ஒருங்களித்துக்
கற்றார் பனுவல்பல கைக்கொண்டு—பற்றாரூர்
எங்கும் இறுமாப்புற் றிந்திரனா ரும்புகழ்மாண்(பு)
ஓங்கும் திருவருட்செந் தூருள்ளான்—வீங்குமுலைத்
தெய்வ மகளிரொடு தேவர்களும் சீராடும்
நெய்வழியுந் தண்டலையால் நீங்காத—மைவனப்புத்
தெண்ணீ ரருவிமுதற் செப்பும்வளம் ஆயிரஞ்சேர்
வண்ணீர்மைச் சந்த வரையினன்—தண்ணீர்
வளத்தால் உயர்ந்துகங்கை மாநதிமுன் னைக்
கிளத்தாறெல் லாம்புகழ்சொற் கேட்டுக்-களத்தானும்
சாகரத்திற் சீக்கிரம்போய்ச் சாருந் தகைமருவு
நாகரிகச் செம்பு நதியினன்—மாகனகம்
ஆதியவை வேண்டும் அவர்க்களித்தல். அண்டவரைக்
காதி யிரத்தக் கடல்காட்டல்—கோதில்பெருஞ்

7. கழிமதுரம் - மிகுந்த சுவை.
0. திருமாதர் எண்மர் – அட்ட இலக்குமி.
1 பற்றார்ஊர் - பகைவர் ஊர்.
3 தண்டலை - சோலைகள், மைவனப்பு - மேகங்கள் உலாவும்அழகு.
4. சந்தவரை - சந்தனாசலம் என்ற மலை

சித்துமண மாதிநலம் செய்தல், இவைதெரிக்க
மொத்துமொரு மூன்று முரசினன்—சுத்தவெள்ளைக்
குன்ற மெனமதநீர் கொப்பளிக்கும் கும்பமொடு
நின்றசைவ தான நெடுங்களிறும்—அன்றமரர்
அஞ்ச முனிவோர் அலறஅழ லூடெழுந்து
வெஞ்சினத் தாற்பின்வாங்கு மெய்த்தகரும்—அஞ்சுவரி
உண்டுவிண்ணிற் றேன்றில் உடனே யுவகைமிகக்
கொண்டுநட மாடுங் குலமயிலும்—மண்டுகுணம்
ஆனவொரு மூன்றென் றறிவா ரறிந்துரைக்க
வானகத்தில் ஊர்வனவாம் வாகனத்தான்—தானவரைக்
கொத்தி யருந்திக் குணக்கு முதற்கூறும்
எத்திசையும் போற்றும் இயல்பினதாய்—நெய்த்தலரும்
நெற்றிமலர்க் கொத்தனைய செஞ்சூட் டசைத்தார்க்கும்
கொற்றமிகு சேவற் கொடியினன்—கற்றைநெடும்
கூந்தற் கவுரியொடு கோர வுருத்திரர்கள்
ஆந்தனிவேல் ஆதியபல் ஆயுதத்தான்—காந்தள்
கடம்பு குரவுசெச்சை காவி முதலாத்
தடம்புயத்திற் கொண்டபல தாரான்—திடம்பெருகு
நெஞ்சக் கவுமாரர் நீதி யுடையவல்லோர்
செஞ்சரண மென்னத் திகழ்கின்ற—கஞ்சமலர்த்
தாதாண்மை நல்கும் சருவ சடாக்கரத்தின்
ஆதாரம் பற்றிநிற்கும் ஆணையான்—வாதாடும்

---

16 சாகரத்தில் – கடலிடத்து. மாகனகம் - பெரும்பொருள் உதவல்,

17. அண்டலரை - பகைவரை

18. மணம் - திருமணம் போன்ற நற்சடங்கு, இம்மூன்று காலத்தும் முழங்குவது முரசு என்பர்.

19. கும்பம் - மத்தகம், களிறு - யானை.

20. அஞ்சுவரி – அழகிய கடல்,

21 குணம் மூன்று - தாமதம், ராசதம், சத்துவம், இம்மூன்றுமே மயில், ஆடு, யானை யென்ற வாகனங்களாகும்

23. குணக்கு – கீழ்த்திசை,

24. செஞ்சூட்டு – செந்நிறக்கொண்டை

சூரன் முதலாய துட்டர்களைச் சூறைகொண்ட
வீரம் நழுவாத வென்றியொடுஞ்—சீரலைவாய்க்
கோயிலுக்குள் என்றும் கொலுவிருக்கக் கண்டமரர்
தாயிலுக்குப் போம்மகளிர் தம்மைப்போல்—போயிணையில்
ஆனந்த மெய்தி அடியார்க் கருட்செயலாம்
தானந் தரும்பெருமைச் சண்முகனே—ஞானம்
குலவுங் குமர குருபரனே குன்றம்
பலவுஞ் சுமந்தமலர்ப் பாதா—அலகில்
விளையாட் டுடையானே வேழ முகனுக்(கு)
இளையானே என்றுமிக ஏத்தி—வளையாத
சென்னி நிலந்தீண்டத் தெண்டனிட்டுச் சிந்தைநைந்து
நன்னிமித்தம் கோடி நவின்றுநீ—பொன்னிலங்கு
தோகைப் பறவைத் துரகதத்தின் மேற்பவனி
ஓகையுடன் கொண்டருளென் றோதினார்—ஆகையினால்
வேதா கமங்கள் விரித்துரைக்க மாட்டாத
பாதார விந்தப் பரஞ்சோதி—காதாரக்
கேட்டு மகிழ்ந்து கிளர்புன் முறுவல்நலம்
காட்டி யிசைந்தமொழி கற்பித்தான்—வாட்டடந்தோள்
வீரர் களித்தார் விறற்பூதர் ஆர்ப்பரித்தார்
மாரன் துணிந்து மலர்கொய்தான்—பேரி
முதலாய பல்லியங்கள் மூவுலகுங் கேட்கும்
விதமா மிழற்ற விரைந்து—சதகோடி
கண்மருவு தோகை கவிகின்ற கானமயில்
வண்முதுகி லேறி மருங்கிரண்டு—பெண்மகிழ

30. தாயிலுக்கு - தாய் இல்லுக்கு, பிறந்த வீட்டுக்கு மகளிர் மகிழ்வுடன் போவது போல்,

34 சென்னி – சிரம்; நன்நிமித்தம் – நல்ல சகுனம்.

35. துரகதம் - மயிலாகிய குதிரை, ஓகை - உவகை,

37. புன்முறுவல் – குறுநகை, இசைந்த மொழி – சம்மதமென்ற அருளுரை வாட்டடந்தோள் வீரர் - வாளை ஏந்திய தோளையுடைய நவவீரர்,

38. மாரன் - மன்மதன், துணிந்து மலர் கொய்தான், தனது பூக்கணைக்கு வேலை கிடைக்குமென்ற மகிழ்வு,

39. சதகோடி – நூறுகோடி ஆயிரம், எனவே பல என்ற குறிப்பு,

ஆறு பரிதி அனைய மணிமுடியும்
கூறுமவற் றேடுறவாங் கோகனக—வீறுமலர்
அன்ன முகமாறும் அங்கிவிழி யாறும்அருள்
துன்னும்விழி பன்னிரண்டும் தொண்டர்துதி—பன்னற்(கு)
உருகி மகரநிகர் ஒண்குழையோ டாடும்
பொருவில்செவி யீராறும் போத—மருநுகரும்
நாசி யிருமூன்றும் நாதாந்த மோனமறைப்
பேசிச் சிவனோர் பெரியோருக்கு—ஆசில்
அருள்விளைத்து வெண்டரளம் அன்னதந்தப் பந்தித்
திருநகைதோ யுங்குமுதச் செவ்வாய்—இருமூன்றும்
மூவா வுமைப்பெண் முகந்து முருக்கிதழ்போற்
சேவார் விரலாற் றினந்தீண்ட—மாவாள்
பெருகுகவுள் ஆறிரண்டும் பேழைவயிற் றூனை
அருகு வலிதிகலும் அப்போ(து)—இருவர்களாம்
அன்னையப்பன் தாங்கும் அணிச்சிபுகம் ஆறும்நௌவற்
பொன்னை மணியைப் புனைபதக்கம்—தன்னைமிகத்
துன்னுங் கழுத்தும் சுடர்உமிழும் கேயூரம்
மன்னும் பலவகைய மாலைத்தோள்—பன்னிரண்டும்
வேலுஞ்சீ ராவும் விரைக்களப மும்புரிமுந்
நூலும் புனைந்தகன்ற நோன்மார்பும்—சூலம்
குழிசஞ் சரம்வில்வாள் கோலப் பலகை
வலிமிகுகாற் சேவலெனும் வான்புள்—மலியுமருள்
ஆழி துறட்டிகயி றஞ்சல் வரதமுற்றுச்
சூழியற்பல் பூணுந் தொகுத்தணிந்த—பாழியங்கை
ஆறிரண்டும் பண்டி யழகும் அடற்கச்சை
வீறியசெம் பட்டு வியன்சுரிகை—தேறுமணிக்

42. அங்கிவிழி - அக்கினிக் கண், வெண் தரளம் - வெண்முத்து.
45 தந்தப்பந்தி – பல் வரிசை,
47 கவுள் – கன்னம்,
48 சிபுகம் - முகவாய், நாடியென்பாருமுண்டு, நௌவற்பொன் - சாம்பூநதம் என்ற பொன், உயர்ந்தது.
49, கேயூரம் தோளணி.
50. சீரா – சிறுவாள், இடுப்பிலணிவது விரைக்களபம்-மணமிக்க சந்தனம்
52 பாழியங்கை . விசாலமான பன்னிரண்டு கைகள்,

கோவை மருவிக் குலவு திருவரையும்
பாவை யனையஇரு பன்னிமார்--ஆவலுடன்
ஏறுங் கவானும் எழிலார் முழந்தாளும்
நாறுஞ் செழுங்கமல நாண்மலரும்—ஊறுபடாச்
செஞ்சதங்கை தண்டை சிலம்பணிந்த சீறடியும்
எஞ்சருமெய்ச் சீர்கொண் டிலங்கவே—குஞ்சரங்கள்
ஆர்க்கப் பரிகள் அதட்ட அணிவீணைத்
தீர்க்கத் திருவர் செயம்பாட—வார்க்கனகக்
கொங்கை குலுங்கக் குலுங்கக் குலவுபொன்னூர்
மங்கையர்க ளாடி மகிழ்கூரச்—செங்கைகொட்டி
ஆடுவார் ஆட அருமைத் தமிழ்க்கவிதை
பாடுவார் பாடிப் பரிவெய்த—நாடும்
தவமுனிவ ரானந்த சாகரத்தின் மூழ்கிக்
கவலை தவிர்த்து களிக்கக்—குவடரிந்த
வெள்வயிரப் புத்தேள் விழித்தொகைபற் றுதெனச்சற்(று)
உள்வருத்த மெய்தி உடன்றேறக்—கள்வழியும்
கஞ்ச மலரானும் கார்மேனி நாரணனும்
நஞ்சயின்ற பெம்மானும் நன்கிறைஞ்சித்—தஞ்சமுனை
அன்றியிலை யென்றருகில் ஆறெழுத்தால் ஆதரிக்கக்
குன்றினந்தோ றும்புரியுங் கூத்துடையான்—நன்றறியாத்
தீதினர்கண் காணரிய செல்வத் திருச்செந்தூர்
வீதி யினிற்பவனி மேவினன்—பேதைப்
பருவம் பெறுமகளிர் பால்குடித்த வெண்பல்
மருவுந் திருப்பவள வாயார்-அருமைத்
துகிலைப் புழுதியிடை தோய்விப்பார், தோன்று
நகிலங் குறித்தணுவும் நாணார் – அகிலறியாக்

53. பண்டி திருவயிறு,

55. கவான் - துடை,

57 வீணைத்தீர்க்கத்து இருவர் – நாரதர், தும்புரு,

58. பொன்னூர் மங்கையர்கள் - ஊர்வசி, திலோத்தமை, ரம்பை, மேனகை,

61. வயிரப்புத்தேள்-மலைச் சிறகையறுத்த வச்சிரமுடைய தேவேந்திரன்.

கூந்த லவிழக் குலவுநுதல் வேர்வரும்ப
ஏந்துமுச்சி லாடல் இயற்றுவார்—சேந்தன்
மகத்துவமொன் றுந்தெரியார் வாஞ்சைகொடு நின்கைச்
சுகத்தைக் கொடுத்தி டெனச்சொன்னுர்—ககத்திலுயர்
கேகயத்தின் தோகையினைக் கேட்டார் கிளத்தரிய
தாகமுற்றுக் கெஞ்சித் தயங்கினுர்—மோகநயம்
கூற லரிதென்னக் கொண்டாடி ஔவையுஞ்சொல்
பேறடையப் பெற்ற பெதும்பைமின்னுர்—வேறிணையில்
அம்பொற் கழங்காடி அம்மானை யாடுமலர்க்
கொம்பொத்த சீர்குலவு கோலத்தார் — அம்பனைய
கண்ணில் அமுதும் கடுவும் கலவாதார்
வண்ணமுலை சற்றரும்பும் மார்பினுர் — எண்ணம்வரில்
ஒவ்வோர்கால் மூடும் உணர்வுள்ளார் ஒள்வேற்கைச்
செவ்வேளைக் கண்டு தெரிசித்து — வெவ்வேள்கைப்
பாணமொன்று தைத்த பருவரல்மட் செய்தியுள்ளம்
நாணம் பிறரறியா நன்மையொடு – தோண
மறுகியவன் வாய்திறந்து வாவென் றழைக்கப்
பெறுகிலமென் றேங்கியடி பேர்த்தார் – சிறுகுறும்பை
அன்னமுலை மங்கைநல்லார் அங்கசவேட் காற்றுராய்
இன்ன லளவுபடா தேங்கியே – மின்னகுவேற்
பெம்மா னருகிருக்கப் பெற்றவிரு பொற்றெடியார்
எம்மா தவஞ்செய் திருந்தாரோ – அம்மாவென்(று)
ஏங்கி யினியவன்றேள் எய்தினன்றி உய்கலமென்(று)
ஆங்கவலைச் சாகரத்தில் ஆழ்ந்திட்டார் – வீங்கிளநீர்

---

66 துகிலை – உடுத்த ஆடையை, நகிலம் - தனங்கள், அகில் - மயிர்ச் சாந்து,

68. சுகத்தை கைக்கிளியை,

69. ககம் - பறவையினத்துயர்ந்த கேகயம், மயில்,

74· ஒன்று - தாமரையாகிய முதல அம்பு, '' நினைக்கும் அரவிந்தம் '' என்ற தறிக,

76. அங்கசவேள் - மன்மதன்,

78. ஆயிழையார் - பெண்கள்,

அன்ன முலைமடந்தை யம்பருவத் தாயிழையார்
கன்னல்வரி வில்லாற் கலங்கியே – வன்னமணி
மேகலையும் கைவளையும் வீதிக் களித்துமிகு
மோக முடன்றொடர்ந்து முன்னேபோய் – நீகளவு
செய்த மனத்தையெம்பாற் சேர்த்துவிட்டுப் போவென்று
வைதயிற்வேற் சேயை மறித்திட்டார் – மைதவழ்வெற்(பு)
ஆன முலையோ டரிவைப் பருவமுள்ளார்
மான மழிந்து மதிமயங்கிக் – கானமயிற்
கந்தா வெமைநின் கடைக்கண்ணாற் பார்உமையாள்
மைந்தா உனதுமனம் வல்லுருக்கோ – முந்தாதே
உன்னை விடோமென் றுடன்போய் உருகிநொந்தார்
தென்னை மடற்கொங்கைத் தெரிவைமார்-கொன்னகுவேற்
கைய னதிமோகக் கள்வனெனக் கற்றாரும்
வையகமுங் கூறுவது வம்பென்றார் – மையல்கொண்ட
மங்கையரைப் பாரான் மதுரமொழி ஒன்றுரையான்
அங்கை பிடித்தாருக் கஞ்சியோ – இங்கிவணம்
செல்கின்றா னென்றார் தெரிசனத்தா னாலுமிவற்
புல்கின் றவமடைந்தாற் போதுமென்றார் – பல்கவினும்
குன்றியுள்ள பேரிளம்பெண் கூட்டத்தின் மீதும்மதன்
வென்றி மலர்வாளி வீசினான், கன்றினமை
காட்டாமல் ஊமை கனவொத் துளத்தடக்கிப்
போட்டாலும் நெட்டுயிர்த்துப் புண்பட்டார்–வீட்டாவல்
தொண்டர்களுக் கன்பளவிற் றாயநலம் நல்குமருட்
கொண்ட லனைய குமரவேள் – மண்டலத்தோர்

80. வீதிக்கு அளித்து - தானே கழன்று விழுகிற வளையல், உடைமீதணியும் அணிகளைத் தெருவிலேயே விட்டு வசமிழந்தார்,

83. உருக்கோ - இரும்போ;

87. தெரிசனம் - மனக்காட்சி,

89 ஊமை கனவு - வெளிக்கூற முடியாதது போல் பருவமுதிர்ந்த காரணத்தால் இச்சை மனத்தில் ஏற்பட்டதாயினும முற்கூறிய பருவத்தாரைப்போல வெளிக்காட்டாமல் மனத்தே வைத்து மயங்கினார் என்க.

வீட்டாவல் தொண்டருக்கு அன்பளவில் தோயும் நலம் செய்து, என்றதால் அன்பின் நிலைக்கேற்றபடி உயர்ந்த இன்பாநுபவத்தை அடியவர்கட்கு வழங்குவான் என்ற கருத்தையே பேதை முதலாய ஏழு பருவ மாதரை உவமித்தார்- இதுவே கடவுட்கியைந்த உலா முறையாம்.

எல்லவரும் போற்ற இலங்கு திருச்செந்தூர்
நல்ல வளமறுகு நான்கும்போய் – மெல்லவந்து
குன்றிலுயர் சந்தவரைக் கோயில்மணிப் பீடத்திற்
சென்றிருந்து செய்தானெண் சீர்.

முற்றியது.

**பயன்**

செந்தமிழ்ச் சீர்மன்னுந் திருச்செந்திற் சேவகனும்
கந்தன் பவனியுலாக் கற்போர்கள் – எந்தவிதத்(து)
ஆனலு மொப்பில்பர மானந்தத் தாழ்வாராய்
மேனாள் வினையைவெல்வார் மெய்.

வேலுமயிலுந் துணை.



91. மறுகு – திருவீதிகள்,
92 எண்சீர் மதிக்கும்படியான அருளாடல் என்க.

உ

முருகக்கடவுள் துணை

# திருச்செந்திற் பிரபந்தம்

# சந்தமாலிகைத் திருப்புகழ்

---

## நூன்முகம்

*சந்தனுச லச்செந்தூர்ச் சண்முகவேள் மீதுரைத்த*
*சந்தமாலி கைப்பெயர்நூல் சாற்றினான் — சந்தமிகு*
*வண்ணச் சரபதண்ட பாணியெனும் மாதவன்றன்*
*விண்ணத் தமுதில்உயர் வே.*

"**சந்தமாலிகை**" என்ற இந்நூல் சந்தப்பாக்களா லமைக்கப்பெற்ற மாலை என்ற பொருளில் அமைந்தது. பூக்களால் தொடுக்கும் மாலை போல, பாக்களால் யாக்கப்பெறுவதும் மாலையென்றமையும். பூவாலான மாலை கடவுளுக்குச் சூடியெடுத்ததும் ஒதுக்கப்பெறும். பாவாலான மாலை – பலர் பல காலம் பாடினாலும் இயல்பு குறையாது சிறப்புறும். அது பற்றியே தாயுமானசுவாமிகள்

" நாவெடுக்கும் சொன்மலரோ நானெடுக்கும் பொன்மலரோ
தேவையுனக் கெதுவோ சேப்பாய் பராபரமே.

என்று கூறினார்.

மாலிகை என்ற வடசொல், மாலை என்று தென்மொழியில் நிலவியது, சந்தம் என்பது அழகைக் குறிக்குமாயினும், ஈண்டு வண்ணத்தையே குறிக்கின்றது, சந்தம் தந்த-தாந்த–தத்த, தாத்த - தன - தான – தன்ன – தய்ய – என்று எட்டானது போல, இந்தச் சந்தமாலிகைத் திருப்புகழும் எட்டாவது வரிசையில் எண் பெற்றிருக்கிறது பொருத்தமாம். சந்தம், வண்ணம் என்பது ஒரு பொருளையே குறிக்கும் என்க.

திருப்புகழ் என்பது அருணகிரிநாதர் பாடிய சந்தப்பாடல் கட்கமைந்த சிறப்புப்பெயர். சமயாச்சாரியர்கள் பாடல்கள் தேவாரம், திருவாசகம் என்றுற்போல் என்க. புகழ் யாவருக்கும் உரியதொன்ருயினும் – இறைவனைப்பற்றிய புகழே திரு என்ற சொல் சேர்த்து வழங்கப்பெறும். தோன்றியிருந்து இறந்தொழிவோர் புகழ் புகழாகாது. அதுவும் பெருது வாளா வாழுமவரினும் இவர் சிறந்தோர் என்று கூறிப் புகழ்வது உபசாரமேயாம். வடலூர் வள்ளலார்,

அம்பலப்பாட்டே அருட்பாட்டு
அல்லாதார் பாட்டெல்லாம் மருட்பாட்டு

என்று கூறிப் போந்தார்.

நாயன்மார், ஆழ்வாராதிகள் சென்று வணங்கிப் பாடிய தலங்களையே திரு என்ற சொல்லோடு கூட்டி வழங்கி வருகின்ருேம். மற்றவை எவ்வித மேம்பாடுடையதாயினும் அதனேடு ஒவ்வாதன்ருே. இனி, இந்நூலாசிரியர் அருணகிரியார் பாடிய திருப்புகழோடு ஒப்ப, பெருமாளே என்று ஈற்றிலமைக்க ஒருப்படாது தமது சந்தப்பாட்டின் இறுதியில் "குகவேளே" என்று முதலிற் பாடினர். முருகப்பெருமான், இவரை முற்பிறப்பில் அருணகிரிநாதராயிருந்தனரென்ற விவரத்தைக் கூறி, பெருமாளே என்றழைக்கும்படி ஆணையிட்டனரென்றறிகின்ருேம். இக்கருத்தை, திருச்செந்தூர்ப் பதிறுறுள் முன்னரே பதித்து வெளிவந்த கௌமார விஜயம் என்ற நூலில், "செவிகொடு வினவல்" என்று ஒரு பகுதியின் முதற்பாடலில் அருணகிரிநாதர் பாடிய திருப்புகழின் உயர்வையும் தான் அப்பெயரிற் பாடும் சந்தப் பாடலின் நிலையையும், பல உவமைகளைத் தொகுத்துக் கூறித் தன் பணிவையும், அதன் பண்பையும் பாராட்டிக் கூறுகிருர். ஆதலின், தற்பெருமையின்றித் திருவருள் முன்னிலையாக எக் கவிகளையும் பாடுவஞான இவர் மன நிலையைக் காண்கிருேம். பாடலைக் கருதி நோக்குக:

பருப்பதத் தெதிர்ஒரு பருக்கைக்கல் உறுவதில்,
பரிதியெதிர் ஒருமின்மினிப்
பறவையுறலில், பரவைநீர்க் கெதிரில் ஆன்அடி
பதிந்தகுழி நீர்நிற்றலின்,
மருப்பொலி செழுங்கமல மலரினெதிர் நெய்தலும்
மலர்ந்திடலின் மும்மதத்து
வாரணத் தெதிர்ஏனம் ஆரவாரம் செயலில்
மயிலெதிரில் வான்கோழியும்
விருப்புட னடித்திடலில், விதுவினெதிரிற் குலவும்
வெண்சங்கமணியில், அருணை
மேவிய கிளிப்புலவன் ஓதிய திருப்புகழின்
வியனெண்ணி வெட்குறுமல்
திருப்புக ழெனச் சிறியனேனும் பிதற்றலைச்
செவிகொண்டு வினவியருளே
செம்பொன் மதில்சூழ் திருச்செந்தி லெந்தாய்உனது
செவிகொண்டு வினவியருளே.

தில்லைத் திருவாயிரம் என்ற நூலில், சிதம்பரம் நடராசப் பெருமான் மீது 100. திருவரங்கத் திருவாயிரத்துள், ரங்க நாதன் மீது 100. வேறு. முருகன் மீது 100. இப்படிப் பெருந் தொகையாகவே, சந்தப் பாவாயினும் எந்தப் பாவாயினும் பாடுவது இவர் மரபு. இவர் பாடிய பாடல் இலக்கமே யிருக்கும். இப்போது கைவசம் உள்ள பாடலின் தொகை ஐம்ப தாயிரத்தின் மேற்பட்டவையாம். ஒரு குறிப்பை, திருவருள் ஆணை, தமது குறிக்கோள் இவற்றைத் துணையாகக்கொண்டு பாடி வருவார். அது நிறைவேறவில்லையானல் அதுவரை பாடிய பாடல்களின் பனையோலை ஏட்டுச்சுவடிகளை ஆற்று நீர், கால்வாய், கிணறு, நெருப்பு இவற்றிற் கிழித்தெறிந்து விடுவார். இப்படி அழிந்தன பல. இக்கருத்தை இவர் தம் பாடல்களிற் கூறி, அவற்றைத் திரட்டித் தரவேண்டுமென்றும் கேட்பர் ஆண்டவனிடம்.

இதுவரை வண்ணம் என்ற சந்தத்துக்கெனத் தனியிலக்கணம் இல்லை. ஆதலால் முருகன் திருவருளின் துணைகொண்டு, வண்ணத்தியல்பு என்று ஓரிலக்கணம் இயற்றினர். அதில், சந்தங்களின் பிறப்பு, ஒலிவகை, ஆகியன விரிவுறக் காணலாம். தன்ன என்ற சந்தச்சொல், தய்யவென்ருகும். தன்மம், வன்மம். கன்மம், என்பன போன்ற தன்னச் சந்தம், தர்மம், வர்மம், கர்மம் என்னுமிடத்தில் தய்ய வென்று இயங்கும். ஐகார ஔகாரம், ஒரு சந்தச் சொல்லின் முதல் இடை கடை என்ற இடங்களில் வருங்கால், குறிலாகவே ஒலிக்கும் என்பதைத் தெளிவுபடக் கூறுகிருர். பையன் – வையம் ஐகாரம் முதலில், கவ்வை கவை ஐகாரம் இறுதியில், கலையம், வலையர்—ஐகாரம் இடையில் வருகிறது. இதுபோன்று, பௌவம், ஔவியம் முதலில் ஔகாரம். பன் + ஔவை என்ற சொல் கூடி வரும் போது பனௌவை என்று வரும். அது இடையில் ஔகாரம் ஆகிறது. ஆகவே குறிலாகவே ஒலிக்கும் என்பது இலக்கணம். ஒரு சந்தச்சொல் மற்ருென்ருக ஒலிக்கும் இடம் இவையிவை என்றெல்லாம் கூறுகிருர் சுவாமிகள்

இந்நூல், 10-ம் பாட்டில் நாய் சந்தைக்குப் போனது போல என்றும், 4-ம் பாட்டில் அந்து உண்ட நெல் போல என்றும் வழங்கும் பழமொழிகளையும். 94-ம் பாட்டில், வினைப்போகமே ஒரு தேகம் என்ற பட்டினத்தார் வாக்கையும். 80-ம் பாட்டில் பெறுமவற்றுள் யாமறிவதில்லை என்ற திருக்குறளையும் எடுத்தாள்கின்ருர். வேதாந்த சித்தாந்தக் கருத்துகளும் தமது கௌமாரக் கொள்கையும், முருகன் அருளின் தன்மை, தமக்கு எய்திய அநுபூதி, அடியவர் வரலாறு செந்தியின் சிறப்பு ஆகியவைகளையும் கூறுவது காணலாம். அருணகிரியார் திருப்புகழ் நடையை ஒட்டி பொது மாதர்களியல்பு, உலகப் போக்கு, செல்வரியல்பு, உலோபர் பண்புகளையும் காணலாம். பலவிதப் பொருள்களின் கூட்டுறவால் ஒரு பொருள் உருவாவது போலப் பல கருத்துகளையும் கலந்தே பாடல்கள் அமைக்கும் நிலையேற்படுவதியல்பு.

படை வீடுகள் ஆறில் முதன்மையானது திருச்செந்தில் என்ற கருத்தை விளக்கி முன்னரே கூறப்பட்டிருக்கிறது. இந் நூல் 6-ம் பாட்டில், ஆறுபடை வீட்டினுள் உயர்ந்த செந்தில் என்கிறார். 16, 26, 36 போன்ற ஆறு எண் வந்த பாடலிற்கு அடுத்த பாட்டு ஒற்றையடித் திருப்புகழாயும், 96-ம் பாட்டு தத்வதும் தொண்ணூற்றாறு என்ற குறிப்பில் மிகப்பெரிய சந்தப்பாட்டாகவும் பாடியிருக்கிறார். அதில் 6-வது கலை, பராசக்தியைப் பற்றிக் கூறும் வரலாற்றுப் புகழ் வரிசையில், தனது தந்தை மகப்பேறின்றி வருந்தியதும் தமது வழிபாட்டுக் குரிய காந்திமதி (திருநெல்வேலி அம்பாள்) திருக்கல்யாணத் திருவிழாவில் அருள் வாக்குப் பெற்ற காரணத்தால் தான் மகவாகப் பிறந்ததுமான கருத்தைக் குறிப்பாக உணர்த்து கிறார்.

> ...................... " எனக்கொரு
> மகவருளிக் கண்பார் என வேய்வன
> நகரில் அடுத்துய்ந்தான் உளம் மேயவள் ".

என்பதாம்.

வேய்வனம் (திருநெல்வேலி) முன்பு மூங்கிற் காடாயிருந்தது என்பது புராண வரலாறு, இவரது வரலாற்றுக் குறிப்பும் பல இடங்களில் வருகிறது.



உ

முருகக்கடவுள் துணை

# திருச்செந்திற் பிரபந்தம் பதினாறில் 8-வது
# சந்தமாலிகைத் திருப்புகழ்

---

**காப்பு - கலித்தாழிசை**

பைந்தண் மேகம் படர்பொழிற் செந்தில்வாழ்
கந்த நாதன் கழல்களுக் காகிய
சந்த மாலைத் திருப்புகழ் தந்திடும்
செந்த மிழ்ப்புல வோர்குல தெய்வமே.

**தந்த தானன தய்யன தன்னன—தனதானா**

சிந்த ருதொலி செய்தொளிர் பன்மணி—எறிசீர்சால்
செந்தில் மாநகர் வெள்வுநர் புண்ணிய—வடிவாம்ஓர்
சந்த ருசலம் வைகிய சண்முகன்—மகிழ்வானே
சந்த மாலிகை சொல்லிட நின்னருள்—தருவாயே
கந்த வார்குழல் வல்லவை நண்ணிய—மணவாளா
கஞ்ச னூர்தரும் ஔவைதன் உண்மரு—வியபாதா
தந்த மாமுக மல்கிய செம்மலே—நிகர்வானே
சம்பு வாதியர் கைதொழ முன்வரு—முதல்வோனே

**நூல்**

**தந்தனத் தந்தத் — — தந்ததான**

செந்தமிழ்ச் சந்தப் பைங்கிளிக்(கு) அங்கைத்
தெண்டனிட் டின்சொற் – கொண்டுபாடார்
திண்டிறற் பொங்கக் குஞ்சரக் கும்பிற்
றெம்புறற் கண்டித் – தன்பராவார்

சிந்தனைக் கின்பத் தொண்டியற் றுங்கைச்
சிங்கமொத் திங்குற் – றுய்ந்திடேனோ
செண்டெடுத் தம்பொற் குன்றமொத் துஞ்சொற்
சிந்தினிற் கொஞ்சப் – பங்குதாராய்
கந்தரத் துந்துத் துங்கன்மிக் கஞ்சற்
கண்டளிக் குங்கைக் – கந்தவேளே
கங்குலொத் தம்பிற் பொங்குநச் சங்கிக்
கண்டமட் டுண்கைச் – சம்புபாலா
தந்தனத் தந்தத் திந்திமித் தொந்தெய்ச்
சந்தநட் டம்பற் – றுங்குமாரா
தண்டமிழ்ப் புங்கத் தொண்டர்சொற் செந்திற்
சந்தனக் குன்றத் – தம்பிரானே. 1

**தந்தத் தானன தானன – – தந்ததானா**

தங்கப் பூணுற ஆடிய கொங்கைக் காரிகள் மாலிடை
சந்தைக் கூடுறும் நாயில்அ – லைந்துளேன்வாய்
சந்தப் பாவகை யால்உனை வந்திக் காதது வோசிலர்
தங்கட் காகிய வாறுசொல் – கின்றதேனோ
அங்கத் தேயொரு நாளெழில் மங்கைக் கோவரு மாறுசெய்
அஞ்சொற் பாலகன் ஆண்மைது - லங்கவேழு(து)
அண்டத் தோடதன் மேலொளிர் வென்றிச் சேவலெ னுஇகல்
அஞ்சப் போர்பொரும் வேலையும் – வந்திடாதோ
சங்கப் பாவலர் வாழ்வுவி ளங்கப் போய்வரு சீர்பெறு
தண்டைக் கால்முரு காபல - குன்றவேடா
சண்டைச் சூர்முத லாயவர் பொன்றக் கார்கடல் ஆவி,த
யங்கச் சாடிய வேல்புனை – துங்கமார்பா
செங்கட் கார்முகில் போலுமு குந்தற் கோர்துணை யாவரு
சிங்கக் காளித னுசலம் – உண்டவாயா
சிந்துக் கேதுணி வாறொரு வன்சொற் பாவும்நி லாவிய
செந்திற் பாசறை மேவிய – தம்பிரானே 2

**தந்த தானனத் தானன தானன — — தந்ததான**

அந்த ராளர்ஒப் பாகிய தீயவர்
தங்கள் வாசலிற் போயவர் நேர்சிறி(து)
அண்டி வாய்திறக் காதருள் வாயென — நம்புவேனை(டு)
அஞ்சல் கூறிய காலம்அ வாறுரு
தொண்டன் நீயெனப் பேசிய வாய்மையும்
அம்பு யாதனத் தாள்புரி தீதின்ம — ழுங்கலாமோ
பந்த வேதனைக் காடத னூடலை
மந்தி நேர்மனத் தாலடி யார்பலர்
பண்டு வாதையுற் றுரெனும் நீதிம — றந்துளேனே
பங்க யாதனத் தான்அழ மோதிய
செங்கை யாலெடுத் தேபெரி யோர்புகழ்
பண்பு நீறுடைத் தாயப னீரிலை — ஒன்றுதாராய்
சந்த மேமிகப் பாடிய வாய்வலி
கொண்டு சாருவுட் போய்அகல் வான்மலர்
தந்த நாதனுக் காதர மாகிய - கந்தவேளே
சண்ட வேகமிக் கார்தரும் ஆகுவில்
நம்பு வார்கள்முற் போய்விளை யாடிய
தந்தி மாமுகத் தானுட னேவரு — தம்பியாவாய்
செந்தண் மேனியப் பாமுருகா வுமை
தந்த பால!வெற் போடுறழ் ஆறிரு
திண்பு யாசலிச் சேவக னேஅயில் - கொண்டதீரா
சிம்பு ளாயவர்க் கோர்குரு வாவரு
புங்க வாஅலைச் சாகரம் ஒலிடு
செந்தின் மாநகர்க் கோயிலின் மேவிய — தம்பிரானே 3

**தந்த தந்தனந் தான தந்தன — — தந்ததான**

அந்து ணுஞ்சிறு சாலி என்றுளம்
நொந்து நொந்தடி யேன்மெ லிந்துன(து)
அன்பர் தம்பணி யேவி ரும்புதல் - வம்புதானோ
அஞ்சல் அஞ்சல்எ னவி ரைந்திரு
செங்கை யின்குறி காண வந்தினி(து)
அன்று விண்டுள வாச கங்கள்ம — றந்துபோமோ

கந்து கங்கரி ஏறி டுஞ்சிலர்
தம்பெ ருந்திரு வேவி ழைந்துயிர்
கன்றி டும்படி சூழ்கொ டுங்கலி - குன்றிடாதோ
கண்பொ லிந்துள தோகை யஞ்சிகி
யின்பு றந்தனில் ஏறி வந்திரு
கஞ்ச மென்ருளிர் தாள்பு னைந்தருள் - இன்றுதாராய்
நந்து டன்சுடர் ஆழி கொண்டவிர்
கொண்டல் அங்கத மீது றுந்துயில்
நண்பன் அங்குவி ணோர்மு னம்பகர் - வென்றியானே
நஞ்சம் உண்டபி ரானி டந்தறு
குங்க ருங்குயில் போலும் அம்பிகை
நங்கை கொங்கையில் ஊறல் உண்டுவ - ளர்ந்தபாலா
சிந்து வெந்தத னூடெ ழுந்துல
கெங்க ணும்படர் மாமு றிந்திரு
சிம்புள் உண்டெனு மாறி லங்கிடல் - கண்டவேலா
தெங்கு டன்பல வாழை யும்பல
வும்ப சுங்கழை யாதி புஞ்செறி
செந்தி லம்பதி வாழ வந்தமர் - தம்பிரானே. 4

**தனதன தந்த தானனத் -- தந்ததான**

பணியர சன்றன் மாமணிச்
சுடிகையி லொன்று பார்மிகப்
பரிசழி கின்ற தீமையைக் - கண்டிலாயோ
பருவதம் எங்கும் ஆடலிட்
டுலவிய கஞ்ச மாமலர்ப்
பதயுகம் நம்பு வார்இனைக் - கின்றதேனே
கணியென அன்றோர் ஏனலிற்
குலவிய பண்பை ஓதுமெய்க்
கவிஞரும் இங்கு வாடியெய்த் - தஞ்சலாமோ
கதிரயில் கொண்டு கோமளச்
சிகிமிசை வந்தெ ணேடுமுற்
கழறிய விந்தை போல்முடித்(து)-அங்கைதாராய்

தணிவறும் வன்சொல் வேடுவச்
சிறுமிமுன் அன்று போய்மனத்
தளர்வொடு கொஞ்சும் ஆர்வமிக்(கு) - ஒன்றுவானே
சரவண சம்ப வாவெனப்
பரவிடும் அஞ்சு காதரத்
தமிழ்முனி விண்ட பாடலுக் - கன்புளானே
திணிபெறு துங்க வேலுடைக்
குருபர என்று பேணும்அச்
சிவனுடன் ஒன்றை யோதும்உத் – துங்கவாயா
செயசெய என்று தேவர்முற்
பகர்பலர் வந்து சூழும்நற்
றிருமலி செந்தின் மாநகர்த் – தம்பிரானே. 5

**தானதன தாத்ததன தந்த தந்தத் -- தந்ததான**

கோலவிழி காட்டியகு ணங்கொள் மங்கைச்
சேனையொடு போர்க்குவரும் வஞ்ச நெஞ்சக்
கோரமத வேட்கெதிர்வ ருந்து மிந்தத் – துன்புறாதே
கோவணமும் நீற்றொளியும் நம்பன் அங்கட்
டாழ்வடமும் ஏற்றருள்வி ளங்கு செம்பொற்
கூறையணி வார்க்குவகை பொங்கு தொண்டிற் –
பிந்திடாதே
சீலமறு பாட்டுரைதெ ரிந்து கொண்டெப்
போதுமிரு தூர்த்தரெதிர் சென்று கெஞ்சித்
தீவினைகொள் வார்க்குள்ஒரு வன்கொல் என்கப் –
புண்படாதே
சேயமயில் மேற்பிரச ணங்கொ டென்றக்
காலமுத லாப்பரவு கின்ற செஞ்சொற்
சீர்சிறிதும் ஏற்றிலைகொல் என்செய் வன்சற் –
றின்றுகேளாய்

சாலஅருள் நாட்டமுறும் அன்பர் தம்பிற்
போயவர்கள் கேட்டபடி யுஞ்செய் தம்பொற்
றுளெனுமெய் வீட்டையும்வ ழங்கு பண்புற்-
றுந்தும்வேளே
தானதன தாத்தத்ன தந்த தந்தச்
சேகிணகி தாத்திமிதெய் என்ற யன்கைத்
தாளம்அரி கூட்டுமுழ வந்த முங்கற் – கொண்டதாளார்
ஆலம்நுகர் தீர்க்கமணி கண்டர் பங்கிற்
பாவையையும் நீத்தடியர் இன்பம் ஒன்றற்
காகவட பாற்றரும ருங்கு றுஞ்சிற் - றங்கர்பாலா
ஆண்மையுறு மாப்படமு னிந்து கும்பற்
றேவர்சிறை நீக்கியருள் வென்றி துன்றுற்(று)
ஆறுபடை வீட்டினுள்உ யர்ந்த செந்திற்-றம்பிரானே. 6

**தனத்தந் தாத்தந் தானன தானன – தந்ததான**

தொடுக்கும் பாட்டுன் றுளிலெ நாளும்அ - ணிந்ததாலே
சுருக்கங் காட்டுந் தாரக ஞானமு - ணர்ந்திடேனே
நடுக்கம் போய்ச்சந் தேகமெ லாமற - இன்றுதானே
நடிக்குஞ் சீர்ப்பைந் தோகையில் ஓர்தரம்–வந்துகாவாய்
மடுக்கண் தோற்றும் பாலக னாகிய – கந்தவேளே
வதைத்துண்(டு) ஆர்க்குந் தீயவர் நாடரும்-விந்தையானே
திடுக்கந் தீர்க்குங் கூரிய வேல்புனை – துங்கமார்பா
திருச்செந் தூர்ச்சந் தாசல மேவிய – தம்பிரானே. 7

**தந்த தானன தானன – – தந்ததான**

கும்ப மாமுனி யாதிய தொண்டர் கூடிநி லாவிய
குன்றி லேகிநின் வார்கழல் – அன்பினாலே
குங்கு மாகர மாயநின் அங்க மேநனி நாடுதல்
கொண்டு வாழ்பெரு வாழ்வைவி – ரும்பிலேனே
உம்பர் சூழ்தர ஓரிரு மங்கை மாரரு கேயுற
ஒண்கு லாவிய நீபம்அ – ணிந்தமார்பூ(டு)
ஒன்றும் வேல்மிளிர் சீர்தர வந்த நாள்அர னோடுசொல்
ஒன்றை யீதென ஓதநி - னைந்திடாயோ.

கம்ப வேழமு காசுரன் வஞ்ச மால்வரை யோடறல்
கண்டு வான்மல ரால்முழு – குங்குமாரா
கஞ்சன் வாய்விட மோதிவி லங்கு போடும்அ நாள்உல
கங்கள் யாவையும் வேறுசெ – யுங்குகேசா
செம்ப யோதரம் ஆறும டந்தை மார்தர மாதுமை
திங்கள் மாமுகம் நாடிவ – ருந்துபாலா
சிந்து வார்திரை யானக ரங்க ளால் மணி வீசிய
செந்தின் மாநகர் மேவிய – தம்பிரானே. 8

தந்தன தனத்தந்தத் – – தந்ததான

கந்தநாண் மலர்ச்செங்கைப்
பஞ்சபா ணனுக்கஞ்சிக்
கங்குலூ டிளைக்குந்துக் – கங்கெடாதோ
கஞ்சன ரியற்றுஞ்சிற்
றங்கமூ டுகட்டுண்டுட்
கன்றியே மனக்கெஞ்சற்(கு)–ஒஞ்சிலேனே
பந்தபா சமற்றம்பொற்
றண்டைசூழ் பதத்தன்பிற்
பண்டுளார் எனச்சென்றிட் - டுய்ந்திடேனே
பன்றிமாய் வுறக்கொன்றிட் (டு)
உம்பர்வா ழவைக்குஞ்சற்—
பண்பையோ திடத்தண்சொற் – பொங்கமீவாய்
தந்தமால் களிற்றங்கக்
கொங்கையாள் உவப்பொன்றத்
தன்கையால் அணைக்குஞ்சித் - தன்குமாரா
சண்டவே கமற்கொம்புச்
செங்கடா வில்உற்றும்பர்த்
தங்கலூ ரருக்கின்பச் – சிந்தையீவாய்
திந்ததா திமித்தொந்தெய்த்
தந்தன வெனச்சந்தச்
செஞ்சொலோ துநட்பன்பர்க் – கன்பனவாய்
சிந்துமோ தொலிச்சந்தக்
குன்றில்ஆ டலிட்டங்கட்
செந்தில்மே வும்உத்துங்கத் - தம்பிரானே. 9

**தந்தத் தானன தனத்த தானன -- தந்தநாறு**

கொங்கிற் சீரிய குழற்பெ ணூரொடும்
வந்தெப் பேர்பெறு சமர்த்தர் மீதுமி
குந்துர்ப் போர்புரி திருட்டு மாரனை -- வென்றுவாழ்வார்
குன்றைப் போலுயர் குணத்தில் ஓர்சிறி
தும்பெற் றேனிலை, தமிழ்க்கு லாவிய
கும்பற் காளெனு மகிழ்ச்சி யோர்களு - டன்குலாவேன்
வங்கிற் றேய்தரு கிழட்டு நாயொரு
சந்தைக் கூடுறில் அதற்கு நேர்துயர்
வந்திட் டூர்தொறும் அலைப்ப தால்மனம் -
நொந்துபோனேன்
வஞ்சர்க் கோர்பகை யெனப்பன் நூல்பகர்
வென்றிச் சீர்திகழ் திருக்கை வேலுடன்
மஞ்சைக் காணுறில் நடிக்கு மாமயி -- லின்கண்வாராய்
பங்கிற் பார்வதி யிருக்கும் ஈசுரர்
செம்பொற் றீவிழி உகுக்க வீழ்பொறி
பங்கக் கேடறு குளத்தி னூடுற -- வந்தபாலா
பஞ்சைத் தேவர்கள் எதிர்த்த வேளையில்
வென்றிட் டேயவர் தமைக்கொ லாதுகொல்
பண்டைத் தானவர் கடற்குள் மாயமு -- னிந்தவீரா
தெங்கிற் பாகலில் இனித்த மாவினில்
மந்திக் கோடரம் உகுத்த காய்கனி
சிந்திப் பூமியை மறைத்த தானபொ -- தும்பரூடே
திங்கட் டேவுடன் வெயிற்க லாதர
னுஞ்சற் றேபுகும் வளர்ப்ப மார்தரு
செந்திற் கோயிலி னிடத்து மேவிய -- தம்பிரானே. 10

**தந்ததனத் தானன தானனா -- தந்தநாறு**

அங்கணமொப் பாகிய பாழ்மனம்
ஒன்றியநிட் டூரர்கள் வாசலில்
அந்திபகற் போயலை தீமைபொ -- ருந்திடாதே

அஞ்சனமிட் டேவகிர் மாவடு
என்ருெளிர்கட் பேதையர் சூழ்மதன்
ஐங்கணைபட் டேயிள மேனித - ளர்ந்திடாதே
கங்கணமுற் ருறிரு மால்வரை
என்றுயர்மற் ருேள்களும் மூவிரு
கஞ்சமலர்க் கேயிணை யானமு - கங்களோடே
கண்டஎழுத் தாறும்வி டாதுமொ
ழிந்ததவத் தோருணர் பாதயு
கங்களுமுற் ருேணம யூரமி - வர்ந்துவாராய்
செங்கணரிக் கோர்துணை யாவரும்
அம்பிகைஉற் சாகம ஞேன்மணி
சிங்கமுடைச் சாமளை பாலமு - துண்டவாயா
செண்டையெடுத் தாடக மால்வரை
யின்றலையிற் சாடிய வீறுறு
திண்புயன்முற் கூறும னேகருள் - நின்றவீரா
திங்கள்முகத் தானையும் வேடுவர்
தம்பரணிற் பேதையும் மேவிய
சிந்துரவெற் பேயென நீடிய - கந்தவேளே
சிந்தையிலெப் போதெதை நாடினும்
அந்தவிதத் தேமகிழ் சீர்தரு
செந்தில்நகர்க் காவல ஞகிய - தம்பிரானே 11

தனனதன தந்த தானன -- தந்ததான

கலியுகமெ னும்பொ லாமையை
நினையுமருள் கொண்டு வாடிய
கவலையொழி கின்ற தோர்தினம் - வந்திடாதோ
கறுவியெதிர் வந்து வாதுசெய்
பரசமயம் அஞ்ச நான்மறை
கழறியம தங்கள் மேலிடல் - கண்டிடேஞே

பலிகொடுத வஞ்செய் வார்தமை
இகழ்தருகு ணுங்கர் வாழ்வது
பரிதியெதிர் முன்குலா விமம் – என்றருதோ
பசுமணிநி றங்கொள் தோகையில்
இருமகளிர் பங்கில் வேல்புனை
பரிசொடுது லங்கி யாளநி – னைந்திடாயோ
மலிதிரைவ ளைந்த சீர்புனை
கடிநகர்பு ரந்த சூர்குலம்
மடிவுறநி னைந்த சேவகம் – ஒன்றுதோளா
வரியளியி ரைந்த கூதள
மொடுகுவளை யுங்கு ராவும்நன்
மணமலிக டம்பும் ஆர்தரு – துங்கமார்பா
புலியதள்அ ணிந்த நாயகர்
நுதல்விழியில் வந்த ஞேரொடு
புகலரிய விஞ்சை ஓதிஉ – யர்ந்தசீலா
புலவர்பல ருஞ்ச தாநிதம்
வழிபடவ ளர்ந்த தாகிய
புகழ்மருவு செந்தில் மேவிய – தம்பிரானே 12

தந்தத் தானன தனதன – – தந்ததானு

கஞ்சப் பூமிசை வளர்திரு என்கச் சீர்பெறும் அரிவையர்
கண்கட் கேமயல் பெருகிவ – ணங்கலாமோ
கன்றித் தாழ்வுறும் இரவலர் – சிந்தைக் கோரணு வளவுசு
கங்கிட் டாவித முயலவி – ரும்பலாமோ
நெஞ்சப் பேயுடன் உலகில லைந்தெய்த் தாயிரம் வகைபடு
நிந்தைக் காளென மிகவும்வ – ருந்தலாமோ
நிம்பத் தார்புனை வழுதியெ னும்பெட் பீகுதும் எனுமொரு
நின்சொற் போல்நட விடஎதிர் – வந்திடாயோ
அஞ்சத் தேறிய பிரமன டுங்கச் சாடிஎ வுயிரையும்
அன்றைக் கீதரு பெருமைபு – னைந்தவேளே
அஞ்சொற் சீர்நிற முழுதுணர் சந்தப் பாவலர் வெருளுமுன்
அஞ்சற் கூறிய பவளம்நி – கர்ந்தவாயா

வஞ்சத் தானவர் அடியொடு துஞ்சப் போர்பொரும்
அயில்கொடு
வண்பொற் றேகையில் இவர்தரு – பண்புளானே
வங்கக் கார்கடல் ஒலிமிகு செந்திற் கோயிலே அநுதினம்
வந்திப் பார்உள மருவிய – தப்பிரானே. 13

தனனதன தந்த தந்த தந்தன – – தந்ததான

அணிநகைது லங்க வந்து கண்கொடு
மனநிலைக வர்ந்து கொண்டு புண்தரும்
அரிவையர்வ சப்பு குந்து ழன்றுடல் – நொந்திடாதே
அறிவையறி யுந்தி றம்பெ றுந்தவ
முனிவரையி கழ்ந்துன் அப்பு யம்பொரும்
அடிகளைம றந்து வம்பில் இங்குதி – ரிந்திடாதே
பிணிபலவ ளைந்து துன்ப மென்றுள
உததியில ழுந்தல் கண்டு மிஞ்சிய
பிழையினரி டந்து ணிந்தி ரந்துவ – ருந்திடாதே
பிறவிவகை யுஞ்ச மன்ற ருங்கொடு
மரணமும்ஒ ழிந்த இன்பம் ஒன்றிய
பிரபலம ணைந்த லர்ந்த செஞ்சர – ணங்கள்தாராய்
கணியுருவு டன்றி கழ்ந்து வன்குற
மகளிடமி ரந்து நின்ற புங்கவ
கருணைபுரி யென்றி றைஞ்சும் அன்பர்கள்-பின்செல்வானே
கயிலைவரை யின்க ணென்றும் அம்பிகை
உடனுறைத ருந்தி கம்ப ரன்றிகழ்
கனல்விழியி டப்பு லிங்க மென்றுபி - றந்தபாலா
மணிநிறமு குந்தன் உம்பர் தம்புடை
யிடைமிகவி ளம்பி டும்பெ ரும்புகழ்
மணமலிக டப்பு டன்று தைந்தபு – யங்களானே
வளையொருதி மிங்க லங்கொ ணர்ந்தெறி
அலைகடலு டன்கு ளிர்ந்த சந்தன
வரைவளமி லங்கு செந்தில் வந்தமர் - தப்பிரானே. 14

தந்தனத் தான தானன — தந்ததான

அம்புயப் பூவிழ் வாழ்இரு மங்கையர்க் கான கேள்வர்அ
டைந்தமெய்ப் பேறு நாடல - றிந்திடாயோ
அம்புவித் தேவர் போல்பவர் வஞ்சகத் தீனர் பாலுளம்
அஞ்சுமிப் பாவ சாலம்ஒ – ழிந்திடாதோ.
நம்பும்உற் சாக நாவலர் நின்புயத் தேழு ளுள்இடும்
நன்றுடைப் பாட லோடிவை - ஒன்றிடாவோ
நந்தணிக் காது ளாருடன் அன்றுரைத் தாய்எ ணேர்சொலே
நன்கெனக் கோது மாறுது - ணிந்திடாயே
கொம்புடைத் தான மேடம தொன்றில்அக் காலம் ஏறிய
குங்குமக் கோல மேனியி - ளங்குமாரா
குன்றிடத் தோர்ம காகதை முன்பொறித் தீடில் சீர்புனே
குஞ்சரத் தோட நாளிக லுங்குழலா
சிம்புளைப் போல வேயில குந்திறற் சேவல் மேவிய
திண்புயத் தேவை வேலும்அ - ணிந்தவீரா
செம்புகழ்ச் சீலர் யாவரும் வந்துவிட் டேகி டாதுறை
செந்திலிற் றேவர் பேணிய - தம்பிரானே. 15

தந்தத்தா னனதன தானதன தானதன -- தந்ததான

தங்கத்தா லேசமைவ தாகியகி ரீடம்நிகர்
கொங்கைச்சீர் தோய்தருமி னேயெனநி லாவுமவர்
தங்கட்காம் ஏவல்களி லேமுயல்வ தால்மிகமெ –
லிந்திடாதே
சந்தப்பா ஆயிரம ணேகரம தாநுவலி
னுஞ்சற்று ணுலுமகி ழாதமுழு மூடரெதிர்
சந்தித்தா காயம்வரை நீடியபொய் பேசிமனம் -
நொந்திடாதே
அங்கத்தே நீறணிகி லாதசமண் வாதைகெட
வந்திட்டோ னேயனைய பாவலன்இ நாளொருவன்
அன்பர்க்கோர் தாயெனவு லாவுநலம் நாடுநர்த –
ளர்ந்திடாதே

அங்கைக்கூர் வேலொடுக லாபமயி லேறியிரு
மங்கைக்கூ டேபவள மால்வரையெ ஞறிலகி
அந்தத்தோ டாதிநடு வானஒரு தாரகம்வி-ளம்புவாயே
சங்கப்பா வாணர்துயர் தீர்தரமுன் ஊமையுரு
வம்பெற்றோ னே!மறையொ டாகமும் ஓதுமிரு
தண்டைத்தா ளா!உமையொ(டு) ஆரல்மட வாரமுதம்-
உண்டவாயா.
சண்டிக்கோ மாளிகளில் ஓர்தலைவ ஞமென்உ(ள்)ளும்
வந்துற்றோர் ஞாயமதை யேயளவில் போதுபகர்
தண்பொற்பார் வாய்முருக னே!பலபல் கோடிமலை
கொண்டவேளே
சிங்கத்தோல், ஆனையுரி, பாய்புலியின் ஈருரி,வெள்
என்பொப்பா மேலவர்சொல் சீர்பிறவும் மேயபரர்
சிந்தைக்கோர் தீபமனை யாய்எனுமு னேஅகம-
கிழ்ந்துளானே
தென்றற்கால் ஊருமலை நாதன்முத லோர்களுணர்
சொந்தத்தே வா!மகிமை நீடுகவு மாரர்வரு
செந்திற்கோ லாகலவி சாகஇமை யார்பரவு-தம்பிரானே.
16

காப்பு – சந்தமாலை – வண்ணப்பாவாலாகிய துதிப்பாடல் எனவும், அழகிய மாலைபோன்ற சந்தப்பாடல் எனவும் கொள்க.

சிந்து – கடல். வல்லவை - விநாயகரது தேவி. சப்பு - பரமசிவன்.

1. பைங்கிளி – அருணகிரிநாதர். குஞ்சரக்கும்பு – யானைக்கூட்டம், கந்தரத்துஉந்து உத்துங்கன் – மேகத்தை வாகனமாவுடைய இந்திரன். அம்பினிற்பொங்கு - கடலில் உண்டான. நச்சுஅங்கி - விடமாகிய நெருப்பு. சந்தனக் குன்று - திருச்செந்தூர்.

2. வங்கத்தே - ஓடத்தினிடமாக. மங்கை - மச்சகந்தை. மூதண்டம் – ஆகாயம். சிங்கக்காளி – சிங்கவாகனமுடைய உமாதேவி. ஒருவன் – அருணகிரிநாதர் பாசறை – சமர்க்காகத் தங்கிய இடம். திருச்செந்தூர்.

3. அந்தராளர் இனமாறித்தோன்றிய மக்கள். அக்காலம் அவ்வாறு உறு – முற்பிறவியில் அருணகிரிநாதராயிருந்தவன் என்று முருகன் தன்னைக் கூறிய குறிப்பு பண்டு – முன்பு,சாரு - கிளி,வான்மலர் – பாரிசாதம், சிம்புள்– ஆயவர் - சரபவடிவெடுத்தசிவன்.

4. அந்து உண்ணும் சிறுசாலி - நெல்வண்டால் உள்ளீடற்ற நெல். கந்துகம் – குதிரை. அங்கத மீதுறும் துயில் - நாகத்தின் மீது உறங்கும்மால். தறுகும் - தங்கியுள்ள.

தந்தன தந்தன தந்தத் தந்தத் — தந்ததான

மங்கைய ரின்பம்வி ரும்பிக் கெஞ்சிப் - புண்படாதே
மந்திர தந்திரம் நின்பெட் பின்றிக் - கொண்டிடாதே
சங்கைமொ ழிந்துழல் வம்பர்க் கஞ்சிக் - கும்பிடாதே
சந்தத முந்தமிழ் பொங்கச் செஞ்சொற் - றந்துகாவாய்
பங்கய மின்கண வன்செப் புஞ்சொற் - றுன்றும்வீரா
பந்தமொ ழிந்தவர் நெஞ்சிற் சிந்திக் - குங்குமாரா
செங்கைஇ லங்கயில் வென்றித் துங்கக் — கந்தவேளே
சிந்துமு ழங்கிய செந்திற் செம்பொற் — றம்பிரானே. 17

---

5. பணி அரசன் - பாம்பரசன் (ஆதிசேடன்) உத்துங்கம் — மேன்மை.

6 நம்பன் அம்கண் தாழ்வடம் - உருத்திராக்கமாலை. செம்பொற் கூறை - கல்லாடை. அரிகூட்டும் முழவம் தழங்கல்–திருமால் செய்யும்மத்தள ஓசை தருமருங்கு - ஆலமரத்தடியில்

7. வதைத்து உண்டு ஆர்க்கும் தீயவர் - கொன்று ஊன்உண்டு உவக்கும் கொடியோர்

8. குங்குமாகரம் - குங்குமக் குவியல் போன்ற திருமேனி. வேழமுக அசுரன் - தாருகன். மால்வரை — கிரவுஞ்சம், பயோதரம் - தனப்பால்.

9. ஒஞ்சிலேனே — நாணமடையனே, பன்றிமாய்வுற — திருமால் கொண்ட வராக அவதாரம்.(அந்த வராகத்தைக் கொன்றவர் முருகன் என்பது வரலாறு செங்கடா — ஆட்டுவாகனம்.

10 வங்கு - சொறிநோய், மஞ்சை - மேகத்தை, குளம் — சரவணப் பொய்கை. பாகலில் — பலாமரத்தில், கோடரம்- குரங்கு, பொதும்பர் — சோலை கலாதரன் - சூரிய கிரணம்.

11. ஆடகமால் வரை — மேருகிரி. திண்புயன் — உக்கிரகுமாரன்.

12. இமம் - பனி

13 நிம்பத்தார் — வேப்பமலர்மாலை; வழுதி - பாண்டியன்; அஞ்சம் — அன்னம்; வங்கம் — மரக்கலம்.

14. உததி - கடல்; கணி - வேங்கைமரம்; திகம்பரன் — சிவன்; புலிங்கம் - பொறி; வளை — சங்கு.

15 இருமங்கையர் — திருமகள், கலைமகள்; நந்து - சங்க குண்டலம்; மேடம் — ஆடு; குஞ்சரம் - யானை (விநாயகர்).

16. தென்றற்கால்...........நாதன் தென்றல் தருப்பொதியமலையினரான அகத்தியர்

17. சிந்து - கடல்.

தந்தனத் தனன தானன — — தந்ததான

மந்தரக் குவடு போலொளிர் கொங்கையிற் சிறிது காணுற
வந்துமுற் சருவு மாதரை - நம்பிடாதே
வஞ்சகத் தொழில்வி டாதகு ணுங்கரைப் பெரிதுநாடிவ
ணங்குமற் பரையெ நாளும்வி — ரும்பிடாதே
கந்தரத் துதவு சீர்திகழ் செங்கைவித் தகனெ ணவுல
கஞ்சொல்மெய்ப் புகழின் ஆவல்ம — றந்திடாதே
கண்கள்மிக் கிலகு தோகையில் வந்தெனக் கினிய வாழ்வையு
கந்தளித் தருளு மாறுநி — னைந்திடாயே
குந்தம்விட் டெறியும் ஏமனும், அம்புயத் தயனும், வேளொடு
* கொன்றமைத் தமர்செ யாதரு — ளுங்குமாரா
கொன்றையைப் புனையும் நாதர்ம னங்களிப் புறவிண் மேல்வளர்
குன்றினத் தினில்எ லாமும்ந — டஞ்செய்பாதா
செந்தமிழ்க் கிரியின் மாமுனி வன்றனக் கருள்செய் தீடறு
திண்புகழ்ப் பெருக லால்மகி - ழுங்குகேசா
செங்கனற் கடவுள் ஈயவ ருந்தகர்ப் பரியு லாவிய
செந்திலுக் கரச னாகிய — தம்பிரானே, 18

தானதந்தன தான தானன — — தந்ததான

ஆலமுண்டபி ரானும் ஆழ்கடல்
மீதுகண்டுயில் வானும் ஏழிசை
ஆரணம்பகர் வானு(ம்) மேகம்இ — வர்ந்துளானும்
ஆயிரங்கண்வ லாரி யோடுள
தேவருஞ்சபை யூடு பேசிடும்
ஆண்மைகொண்டுகு லாவ நாடல்அ — றிந்திடாயோ
கோலமிஞ்சிய தோகை மாமயில்
மீதிரண்டுமி ளுரும் வேலொடு
கூடஒன்றிய சீர்கு லாவிட - வந்துமேனாள்

18 கவிவாணன் — அருணகிரிநாதர். * எமன் கொன்று, பிரமன் — படைத்து; மன்மதன் போர் செய்யாமல் என்பதாம்.

கோபுரந்தனில் ஏறி வீழ்கவி
வாணனன்றுயு மாற வாவொடு
கூறுமொன்றையெ னேடும் ஓதஇ – சைந்திடாயோ
பாலனென்றிகழ் சூர னுதியர்
வேருடன்கெட மோதி யேபுகழ்
பான்மைகொண்டவி சாக னேபல - குன்றில்வாழ்வாய்
பாரதந்தனை யோதும் வேதவி
யாதன்முன்சலி யாது கோடொரு
பாதிகொண்டுயர் மேரு மேல்வரை – தந்தியோடே
சாலஅன்றிகல் வேல னே!உமை
யாள்பயந்தகு மார னே!குரு
சாமியென்றினி தோது வாரைம – றந்திடானே
சாகரம்பெரி தோலம் ஓலமெ
னுமுழங்கொலி போல வேஒரு
தாழ்வில் செந்திலில் வாச மாகிய – தம்பிரானே. 19

தந்தா தனந்த தந்த – – தந்ததான

தந்தாவ ளஞ்சு மந்த வன்கோ டிணைந் தெழுந்து
தண்சீர்பொ லிந்தி லங்கு - கொங்கைமானர்
தஞ்சேனை யின்க ணின்று வெம்போர் தொடங்கு கின்ற
சண்டாள அங்க சன்க – ரும்பினலே
வெந்தாகம் நொந்து மன்ற என்பால் விரைந்து வந்து
விண்டாடும் அந்த ரங்கம் - வம்புதானே
வெண்சேவ லம்புள் ஒன்றும் நின்கேத னம்பு கழ்ந்து
மிஞ்சார்வ மொன்றை நன்கு – தந்திலாயோ
கந்தா!அ ரன்பயந்த மைந்தா!வி ரிஞ்சன் அஞ்சல்
கண்டாய்!மு குந்தர் தங்கை – அங்கைவாழ்வே
கண்கோடி கொண்டகன்ற பைந்தோகை யின்கண் அன்பர்
கன்றுவ ணந்து லங்கும் - வென்றிவேளே
சிந்தாகு லந்தவிர்ந்து பொன்பூமி யின்கண் உம்பர்
சென்றுளும் விந்தை கண்டு (உ) - யர்ந்தவீரா
செங்கேழ்அ ணைந்த விர்ந்த சந்தாச லங்க மழ்ந்த
செந்தூர்வி ளங்க வந்த - தம்பிரானே. 20

---

20 தந்தாவளம் - யானை கேதனம் - கொடி. கேழ் - நிறம்.

தனனதான தான தான தந்த தந்த -- தந்ததான

தலையினூட நாள்கு ரூவும் அம்பு யன்கை
உதவுமேனி யூடு நான்உ மூன்று மூன்று
தவமிலாத மூடர் போல இங்க ழுந்தல் - நன்றதாமோ
சகளரூபம் நீற தான பின்பும் வென்றி
மருவுபோர்செய் வீர மாரன் வந்து வந்து
சலசம்ஆதி யாய பூவொர் ஐந்தும் இங்கு - சிந்தலாமோ
முலைநிலாவை நேரும் ஓரி ரண்டு வெண்பல்
வெளியிலேகு லாவும் வாய்கொள் அந்த கன்சொல்
மொழிகொடேகு வார்கு ரோதம் நன்கு ணர்ந்தி -
ரங்கலாமோ
முகுளநீல மோடு வாரி சம்பு னைந்த
கரமினார்கள் பாக மாக, வஞ்சர் அஞ்சும்
முனைகொள்வேலொ டோர்ம யூர மென்ற தன்கண் -
வந்துகாவாய்
அலையெலாமும் ஆயர் வாழ்இ டம்பு குந்து
கவருமாயன், ஆதி நார ணன்,ப டங்கொள்
அரவமீதி லாடு வான்,வி ரும்பும் அன்பர் -
பங்கில்வாழ்மா(து)
அழுதுவாடும் வேலை சேலை தந்த கொண்டல்,
உததிமீது தேர் கடாவு துங்கன், வம்பர்
அவையிலேகி மீளு மால்உ டன்பி றந்த - தங்கைபாலா
வலைகுலாவு காது ளான்,வி டம்பு னைந்த
களன்அநாதி நாதன், மாதி ருந்த பாகன்
மலமில்யோகி,ஆல நீழல் கொண்டி ருந்து - ணர்ந்தபாதா
வனசமாதர் நாளு மேவு பண்பி சைந்து
குலிசவாணன் ஆதி யோர்கள் கண்டுள் ஒஞ்சும்
மகரவாரி ஓதை நீடு செந்தில் வந்த - தம்பிரானே, 21

21. குருவு மனமெலிந்த சகளரூபம் - உருவம் அழிந்த பின்பும் (மன் மதன் செய்யும் போர்) சலசம் தாமரை, முகுள.........மினார்-வள்ளி- தெய்வ யானை என்பவர் கையில் நீலோற்பலமும், வள்ளிகையில் தாமரையு முள்ள குறிப்பு. குலிசவாணன் - வச்சிரமுடைய இந்திரன்,

தனனதன தானதந்த தந்த -- தந்தநாண

கனகமக மேருவென்றெ ழுந்து
மதனதுகி ரீடமென்ற விர்ந்து
கமலமுகை யோடுகும்பம் அஞ்ச - வென்றுபோர்சால்

களிபெறும தாசலங்க ளென்று
முகபடம தோடிலங்கு கின்ற
கனதனமி ணரிடம்பு குந்து - நொந்திடாதே

பனக(ம்)மதி, நீர்,எலும்பு, மண்டை
இதழி,முழு நீறணிந்த நம்பர்
பரிசிலணு வாயினும்பொ ருந்து - கின்றமேலோர்

பணிவிடையி லேமனந்து ணிந்து
தவறுதல்உ ருவணம்பு ரிந்து
பழுதில்கவு மாரர்ஒன்றும் நின்ப - தம்பெருேனே

தினகரர்கள் யாவருந்தி ரண்ட
தெணநிலவு சீர்கொள்அங்க தங்கள்
செறிதருபு யாசலங்கள் கொண்ட -- கந்தவேளே

சிவைகவுரி ஆயி,அம்பை வஞ்ச
மயிடமுகன் ஆவியுண்ட நங்கை,
திரிபுரை,வி லோசனங்க மழ்ந்த - செங்கையானே

சினகரம்நி லாவுகுன்ற னந்தம்
உடையகும ரா!முரண்தொ டர்ந்து
திருமலையில் வீழல்கண்டும் முன்பு -- வந்திலானே

திரையொலிகு லாவுசெந்தி லின்கண்
வருமடியர் ஆகுலங்க ளைந்து
சிறுவனெனும் நாமமும்பு னைந்த -- தம்பிரானே, 22

22. பனகம் --பாம்பு இதழி -- கொன்றை, தினகரர் - சூரியர்கள், அங்கதம் தோளணி. புயாசலம் - தோள்களாகிய மலை. விலோசனம் - கண் சினகரம் -- கோபுரம்.

தான தானன தந்தன தந்தன — — தந்ததான

கோடி கோடிம தன்கணை சிந்துதல்
போல மோகமி குந்தும னங்கவர்
கோதை மாரைவ ணங்கிய ணைந்துமெ — லிந்திடாதே
கோப சாகரம் ஒன்றிய அந்தகன்
ஏவும் வேலைபு ரிந்துதி ரிந்துள
கோர தூதர்ப யங்கரம் நெஞ்சில்நி — னைந்திடாதே
வாடி நேரில்இ ரந்தவர் தங்கலி
தீரு மாறுத வுங்குணம் இன்றிய
வாழ்வு ளார்மனை யின்கண்நு ழைந்துவ - ருந்திடாதே
மாழை மால்வரை யென்றெளிர் செஞ்சிகி
மீதி லேறிஇ ரண்டும டந்தையர்
வார மோடரு (கு)ஒன்றுற வந்துபு - ரந்திடாயே
பாடி ஞனுடன் அன்றுந டந்தமு
ராரி, ஆழிய ணிந்தமு குந்தன்ஓர்
பாவை கோவெனு முன்கலை தந்தவன் - உம்பராவார்
பால்மு ளுள்மொழி யும்புகழ் கொண்டவி
சாக னே!பல குன்றம ணங்கமழ்
பாத வேடுவ னென்பவர் பின்புல - வுங்குகேசா
தேடி ஏனலி டஞ்சிறு பெண்குயில்
போலு மாதைவ ணங்கிய வண்புகழ்
சேரு மோகன தந்திர மிஞ்சிய - கந்தவேளே
சேணில் நீடிய ஐந்தரு வின்புடை
நாளு மேவியி ருந்தும கிழ்ந்துயர்
தேவர் பேணிய செந்திலில் வந்தமர் — தம்பிரானே. 23

23. மாழைமால்வரை - பொன்மலை (மேரு) பாடிஞன் — திருமழிசை யாழ்வார் பாவை - துரோபதை

தந்தனத் தத்த தானன -- தந்ததான

மந்திரப் பித்து மேலிட நொந்திளைத் திட்ட நாளையில்
வந்தஅச் சித்து மேவரி -- தென்றுநோவேன்
வந்தனைக் கொத்த சீரிய செஞ்சொல்விற் பத்தி தோய்தரு
வண்புகழ்ப் பத்தி தீதுறில் -- என்செய்வேனான்
இந்திரப் பட்டம் ஈயினும், வம்பெனத் தட்டி, நீள்பவம்
இன்றிநிற் பற்றும் வாழ்வைவி - ரும்பிலேனோ
எண்கணற் குட்டு சீர்திகழ் செங்கையிற் றொட்ட நீறதை
என்றனக் கிட்டுன் வார்கழல் -- அன்புமீவாய்
தந்திரப் புத்தி யால்மிகும் வம்பிழைத் திட்ட சாரணர்
தங்களைச் செற்ற மேன்மைக -- மழ்ந்தவாயா
தண்டெடுத் துக்க டாவில்வ ருந்திறற் றுட்டன் ஆவித
டிந்தமெய்ச் சித்த னார்விழி -- தந்தபாலா
திந்திமித் தித்த சேகிண என்றசொற் கொக்க ஆடிய
செஞ்சிகிப் புட்க வாமிகை -- கொண்டவீரா
திண்டிறற் சத்தி வேலைவ ணங்குநர்க் கிச்சை போலருள்
செந்திலிற் செட்டி யாகிய -- தம்பிரானே. 24

தனதனதனத் தந்தனந் தானன -- தந்ததான

மதனனைவெருட் டுங்கொடுஞ் சாயகம்
அனையவிழியைக் கொண்டுவெம் போர்பொரும்
வனிதையர்தமைக் கெஞ்சுகின் றேனுளும் - நின்றிலாயேல்
வலியவலியச் சந்ததந் தேசிகன்
முதலினரெனச் சிந்தையின் பால்மிக
வருவதெவர்செப் பென்றவண் கூறலும் -- வம்புதானோ
இதமொழியுரைக் கின்றபண் பானதும்
அறிகிலர்தமுற் சென்றுநின் றேலிடும்
எளிமையைவிலக் குந்திறன் சேர்கரம் -- ஒன்றிலாயோ
எனதெனல்அனைத் துந்தருஞ் சீரிய
உணர்வினையளித் தும்பினும் காதலின்
இடையுறவிடுக் கின்றதென் பாவம்அ -- றிந்திலாயோ

சததளமலர்ப் புங்கவன் கோவென
　அலறிடஇடிக் குங்குணந் தோய்தரு
　சரவணனெனக் கும்பிடும் பேரைய – கன்றிடானே
　தளர்வுறநரைத் (து)அங்கையின் கோலுடன்
　இருமலும்விளைத் து(உ)ண்டியுண் டேல்உயிர்
　தறுகும்என்அவத் தங்கொடென் தாயெதிர்–சென்றதேவே
உதகமகளைத் தன்சிரம் சூடிய
　பரமனைவணக் குங்குதன் தேவர்கள்
　உரிமையனெனக் கண்டுவிண் டார்கவி – துன்றுதோளா
　உயரருணையிற் றெண்டன்முன் பாடிய
　தமிழுறுகளிப் பொன்றுதண் கார்கடல்
　ஒலிமிகுதிருச் செந்தில்வந் தாடிய – தம்பிரானே. 25

**தனனதன தத்ததன தந்தான தானதன — தந்ததான**

அரிவையர்ம யற்கடலி டந்தாழு மூடர்களில்
　முதன்மைபெறும் அற்பனையி ரங்காத லோபரிடம்
　அநுதினம்ந டப்பவனை நின்பேர்சொ லாதளவில்
　　– வம்புதானே
　அறைதருகு ணக்கனைம டங்காத கோபமிக
　மலிவுறுபி ணக்கனைஅ றந்தீதெ ணுஇகழும்
　அசடருள்ஒ ருத்தனைம னம்போன தீநெறியி –
　　டஞ்செல்வோனும்
விரிதொழில்வ ளப்பனைவி தங்கோடி யானசுவை
　மருவியதி ருப்புகழ்சொ லுஞ்சாரு ஆகுமென
　வெகுதரம்உ ரைத்துளபெ ருந்தேவன் யாவன்? அவன் –
　　எங்குளானோ
　வெறிதருபு னற்கொடுசெ யும்பூசை நேயமதும்
　உடையஒரு பத்திநித ரும்பால தால்உவகை
　மிகைகொளுனை விட்டொருவர் என்பால்அ வாறுரைவி
　　— ளம்புவாரோ

25. சாயகம் - அம்பு, சததளமலர் – ஆயிரம் இதழுடைய தாமரை. உதக மகள் - கங்கை, அவத்தம் – அபத்தம் – (பொய் உரை) சாரு – கிளி.

கரிமுகஅ ரக்கனொரு குன்றோடு தூளிபட,
அரிமுகமி கக்கொள்ஒரு வன்சாக, வாள்மருவு
கரமொடுக டற்கிடையெ ழுஞ்சூரன் வீறழிய –
வென்றவேலா
கருணையில்க டுத்தமுறு சண்டாளர் ஏவவரும்
அலகைகள்அ னைத்தையுமு னிந்தேந லோர்மனது
களிபெறவ மைக்குமொரு வன்றூது போய்வரவி –
டுங்குகேசா
திரிபுரமெ ரித்தபர மன்,காளி நாணநடம்
இடுபதயு கத்தமலன் அன்றால நீழலிடை
செயுமுயர்த வப்பயனெ னும்பால னேஅடியர் –
சொந்தமாவாய்
செயசெயவெ னப்புலவர் கொண்டாட நாகரிக
மிகுதமிழ்அ கத்தியனெ னுஞ்சீல மாதவர்கள்
திருவருள்பெ றக்குலவு செந்தூரில் மேவிமகிழ் –
தம்பிரானே. 26

**தய்யத் தந்தனந் தன்னன தானன – தந்ததான**

சைவத் தொண்டருக் கின்னமும் வாதனை – மிஞ்சிடாதே
தவ்வைப் பண்புடைப் புன்மத வாணர்கள்–இன்புறாதே
ஐவர்க் கஞ்சுமெய்ப் புண்ணிய மேன்மைகு – லைந்திடாதே
அல்லற் றுன்பொழித் துன்னருள் மாரிபொ–ழிந்திடாயே
தொய்வற் றுந்துமைக் கண்முலை மாதர்இ – ருந்தபாகா
தொல்லைச் செந்தமிழ்ச் சொன்மொழிப் பாவலர் -
தங்கள்கோவே
தெய்வக் கும்பலுக் குண்மிகு சீர்புனை – கந்தவேளே
செல்வச் செந்திலிற் சண்முக னாகிய - தம்பிரானே. 27

27. தவ்வை - மூத்தாள். தொல்லை - பழமை. ஒருவன் – வீரவாகு தேவர்.

தந்த தந்த தந்த தந்த – தந்ததான

கண்டு மின்க ரும்பும் ஒஞ்சும் மென்சொல் விண்டு வந்து நின்று
கண்கள் கொண்டு ளங்க வர்ந்த – வஞ்சமானார்
கங்கு லின்கண் அங்க சன்பொ ருங்க ளம்பு குந்த விந்தை
கண்டி டைந்துன் அன்பை நன்கு – நம்பும்நாயேன்
விண்டு வும்பு கழ்ந்த நின்பெ ருந்தி றம்பு கன்ற தொண்டர்
மிஞ்சு குன்றி னந்தொ றுந்தி - ரிந்துயேனே
மென்க டம்ப லர்ந்த திண்பு யஞ்சு மந்த அஞ்சு கங்கொள்
வென்றி ஒன்ற விஞ்சை ஒன்றி - யம்புவாயே
தண்டு கண்டி குண்ட லம்பு னைந்து திங்கள் என்றி லங்கு
தண்பொ ருந்த வந்தென் நெஞ்சில் - நின்றதேவா
சஞ்ச லந்த ழைந்த உம்பர் சிந்தை யின்பம் ஒன்றி விண்த
லங்கொ ளுந்தி றம்பு ரிந்த – கந்தவேளே
திண்டு மிண்டு துன்றும் வம்பர் அஞ்ச அன்று குன்றை வென்ற
செண்ட ணிந்தி கம்பு ரந்த – துங்கவீரா
செம்பொ னம்ப லங்கொள் சங்க ரன்றன் அங்கி
யங்கண் வந்து
செந்தி லின்கண் என்றும் நின்ற – தம்பிரானே. 28

தனதன தத்த தந்தன – – தந்ததான

அரவம றைத்த திங்களின் மகிமைமு ழுக்க மங்கிய
அடிமைதொ டுத்த செஞ்சொல்அ – ணிந்திடாயோ
அருணைந கர்க்குள் வந்தொரு புலவனி சைத்தி டுந்துதி
அனையக வித்தி றஞ்சிறி – துந்தராயோ
புரவலர் முற்சொ லும்பல திருவின ரைப்பு கழ்ந்தவர்
பொருள்பெற நத்து கின்றகு – ணங்கெடாதோ
பொருநையபி டத்தென் நெஞ்சகம் அறியள டுத்தி யம்பிய
புதுமொழி மெய்ப்ப டும்படி – கண்டிடாயோ

28. ஒஞ்சும் நாணும்படி, அங்கசன் - மன்மதன், அஞ்சுகம் – கிளி, செண்டு - உக்கிரகுமாரனாகிய காலத்துக் கொண்டிருந்தது.

சரவண மிக்க டர்ந்துள மடுவின்அ கத்த லர்ந்துயர்
சலசம லர்க்குள் அன்றுறை – யுங்குமாரா
தனதன தத்த தந்தன வெனநட மிட்டி லங்கிய
தமறிய வெற்பு றழ்ந்தசி – கண்டியானே
இரவல ருக்கி ரங்கிய கவுரிமு லேத்த ழும்புறும்
இறைவர்த மக்கும் ஒன்றைமொ – ழிந்தவாயா
எழிலியு வப்பு றும்பல பொழில்வளம் உற்ற செந்திலில்
இருவர்ந டுப்பி றங்கிய – தம்பிரானே. 29

**தந்தத் தனதன தானன – – தந்ததான**

அங்கைக் கரிநிகர் பூண்முலை மங்கைப் படைநடு வேமலர்
அம்பைக் கொடுசம ராடும்அ – னங்கனாலே
அஞ்சிப் பொருள்மயல் மேலிட நொந்திட் டுழல்வுறு
வேன்உன
தன்பர்க் கடியவ னாகிவி – ளங்குமாறே
கொங்கைக் கிளிபொரும் வேடமி னுஞ்சிற் றனமென வானகர்
கொண்டுற் றவளும்நி லாவும – ருங்கிலேடோர்
குன்றைப் பொருமயில் வேலும்இ லங்கச் சிகிமிசை
தோணிமி
குஞ்சத் துவகுண ஞானம்வ – ழங்குவாயே,
தங்கைக் களவறு சேலைவி–ரைந்தக் கணம்அருள் வான்உயர்
தங்கப் புவியினர் பால்நுவல் – பண்புளானே
தண்டைக் கழலத னல்வினை துஞ்சப் புரிகுக னேமுதிர்
சங்கப் புலவர்சி காமணி – என்றுவாழ்வாய்
செங்கைத் துணைமிசை மாதுமை கொண்டுற் றுளமகிழ்
பாலக !
சிம்புட் கிணைபடு சேவல்இ – ருந்ததோளா
தெம்பிற் பெரியவர் சூழ்தரு சந்தக் கிரிவள மேவிய
செந்திற் குருபர னாகிய – தம்பிரானே. 30

29, திங்களில் - நாகத்தால் மறைக்கப்பட்ட சந்திரன்போல். புது மொழி-தன்னை முன் பிறயில் அருணகிரிநாதரான கிளி யென்ற அநுபவம். சரவணம்-தருப்பை, தாமரை.

30. சிம்புள் - சரபம். தங்கை - துரோபதை.

**தந்தந்தன தந்தந் தனதன -- தந்தநா**

கஞ்சங்கயல் அம்பென் றிலகிவி
டங்கொண்டமு தஞ்சிந் தியஇரு
கண்டுன்றுமி ளப்பெண் களைநனி - கெஞ்சிடாதே
கங்கின்றிய இன்பந் தருபல
சந்தங்குல வுஞ்செந் தமிழிசை
கண்டன்புசெ யுந்தொண் டினரைவெ - குண்டிடாதே
அஞ்சம்கிளி யென்கும் பறவையி
வர்ந்திங்குல வும்(பு)உன் துணைவரொ(டு)
அந்தந்தரு சண்டன் பகைமைவி - ளைந்திடாதே
அஞ்சிந்திய முங்கொன் றறிவைய
றிந்தெங்கும்நி றைந்தொன் றுவதல(து)
அங்கிங்கெனும் வம்பின் றியதெனும் - ஒன்றையீவாய்
தஞ்சஞ்சர ணஞ்சந் ததமுனை
நம்புங்குடி யென்றங் கமரர்கள்
தண்டஞ்செய வுஞ்சென் றவுணரை - வென்றவீரா
தண்பைம்புனம் ஒன்றுங் குறமகள்
முன்சென்றொரு கொஞ்சங் கிருபைசெய்
தந்தம்புரை யுங்கொங் கையிலணை - என்றவேடா
நஞ்சம்பரு குஞ்சங் கரரொடு
கொஞ்சும்பிடி யின்செங் கையில்வளர்
நண்புந்தனம் உண்குங் களியும்அ - மைந்தபாலா
நந்துங்கய லுஞ்செந் துவரொடு
சிந்துங்கடல் மிஞ்சுங் கடல்வளம்
நன்கொன்றிய வண்செந் திலில்அமர் - தம்பிரானே. 31

31. கங்குஇன்றிய - அளவில்லாத. அஞ்சு இந்தியம் - பஞ்சேந்திரியம்; மெய் - வாய் - கண் - மூக்கு - செவி என்பன.

தனனதந்த தத்தத் தனந்த -- தந்ததான

நவைதவிர்ந்த முத்துக் கலந்த
மணிவடங்கள் இட்டுப் பிறங்கும்
நகிலமங்கை யர்க்கிச் சைகொண்டு - பின்புபோயோர்
நகைதுலங்கி டச்சற் றிரங்கும்
அலர்சொரிந்த மெத்தைக் குள்வந்து
நறியதற்ப லத்தைக் கொடென்று – கெஞ்சலாலே
சவையறிந்த பித்துற் றிடைந்து
கலவியின்ப மிக்குற் றயர்ந்து
சகலருஞ்சி ரிக்கச் சினந்து - நொண்டிபோலே
தடிசுமந்து வெட்டிட் டபஞ்சின்
நரைமலிந்து செத்துக் கிடந்து
சவமெனுஞ்சொல் பெற்றிட் டுமங்கு - முன்புவாராய்
குவைபடும்பொ ருட்பெட் டகங்கொள்
அரசர்கண்டுவெட்கத் தகுந்த
கொடைவழங்க ருட்சித் தமைந்த – கந்தவேளே
குலிசமன்ற வத்திற் றிகழ்ந்த
மகள்வருந்தி டச்சிக் கடைந்த
குழலுறுங்கு றத்திக் குளன்பு – கொண்டகோவே
எவைவிரும்பு பத்தர்க்கும் அந்த
வணம்நலங்கி டைக்கச் செய்கின்ற
இயல்புடன்பல் வெற்புச் சியின்கண் – நின்றதேவா
இயல்வளம்பெ ருத்துத் திரைந்த
கடலலம்பு பொற்புற்ற செந்தில்
இறைவனென்றி ருக்கத் துணிந்த – தம்பிரானே 32

தந்த தனன தனன தனனதன -- தந்ததான

அம்பொ னகரில் அரசாள் பவனும்அலர்
கஞ்ச மலரின் மிசைமே வியவிதியும்
ஐந்து படைகள் புனைதோள் முரகரியும் – மன்றினூடே

32 நகிலம் - தனம் 33. முரகரி - திருமால்,

அந்தி மதியம் அவிர்வார் சடையசைய
மங்கை மகிழும் நடமா டிடும்அரனும்,
அந்த ரரும்நன் முனிவோர் முதலினரும் – அஞ்சுமாறே
வெம்பொ(ன்) னலர்கள் அடியோ டறஉதிரம்
மிஞ்சி உததி நிறமா றிடஅமர்செய்
வென்றி மருவும் அயில் வேலினைமிகவும் – நம்புநாயேன்
மென்கை யதனில் இலைநீ றுதவி,விழி
துஞ்சு கனவில் ஒருஞா யமும்விரைவில்
விண்ட பெருமை மறையா தொளிர்வதினி – எந்தநாளோ
பைம்பொன் முதல எனநூல் பகர்மதில்கள்
வெந்து பொடிய நகைகூர் பவர்தமது
பங்கில் அமலை தருபால் அமுதமிக - உண்டவாயா
பஞ்சு நரையும், வளைகூன் முதுகும்,ஒரு
தண்டும் இருமல் முதலா கியஅளவில்
பண்பும் இலக வனவே டுவர்சிறுமி – முன்செல்வானே
செம்பொன் மலையை அதுவாய் விட,உலகர்
பஞ்சம் ஒழிய, மகவான் வெருள,அடர்
செண்டு குலவு திணிதோள் வழுதியென – வந்தவீரா
சிம்பு ளதனை நிகர்சே வலின்உருவம்
ஒன்ற வரையும் உயர்கே தனம்நிலவு
செந்தி நகரில் விளையா டியசிறிய – தம்பிரானே. 33

தனன தானன தந்தன தந்தன – – தந்ததானு

பவள மால்வரை என்றொளிர் நின்றிரு
உருவை நாடிவ ணங்குந ரும்பல
பகைவ ரால்மெலி கின்றது கண்டும்இ – ரங்கிலாயே
பழுதிலாதசெ ழுந்தமிழ் கொண்டுனை
இடைவி டாதுபு கழ்ந்தவர் முன்சில
பகரு மாறுந டந்திட நெஞ்சில்நி – னைந்திலாயே

33. வெம்புஒன்னலர்கள் – கொடிய பகைவர்கள். பைம்பொன்........... மதில்கள் - பொன், வெள்ளி, இரும்பு இவற்றாலான மூன்று மதிற் கோட்டையுள் வாழ்ந்த திரிபுரத்தசுரர் உடம்புணவு - ஊன். வாய்விட – அழும்படி.

தவள வாணியும், அங்கிறி றம்பெறு
கமல மாதும்,மி குஞ்சுமை கொண்டயர்
தரையு மார்வமு றும்படி வென்றிமு – யன்றிலாயே
சமய கோடியுள் ஒன்றன் உ டம்(பு)உண(வு)
அயில்கி லாதன மிஞ்சலின், உண்பவை
தழலி னூடுறு பஞ்சில்அ ழிந்திடல் – கண்டிலாயே
கவள யானைமு கம்பெறு புங்கவன்
அரனை யேவலம் வந்திடும் அன்றொரு
கனியி னல்விளை யும்பகை யின்பயன் – நன்குதேரார்
கவிகள் கோடிவி ளம்பினும் மந்திரம்
முழுது மோதியு மென்பயன் என்றுணர்
கருணை வாரியெ னுந்தவர் சிந்தையி – டங்கொள்வானே
திவள நீறணி யுந்தவர் தங்களை
இகழ்பொ லார்பல ருங்கெட அன்றொரு
சிறிய வாய்கொடு செந்தமிழ் விண்டஇ – ளங்குமாரா
சிவபி ரான்அழல் அம்பகம் முன்தரு
பொறிக ளாவரு பண்புணர் நெஞ்சினர்
திருவி ழாமிகு செந்திலில் நின்றுயர்,- தம்பிரானே. 34

தானனத் தனந்த – – தந்ததான

சீதளக் கடம்ப மாலையொத் தசெஞ்சொல்
தேடிநிற் புகழ்ந்தும் – இந்தவாறே
தீவினைப் பயன்க ளானதுக் கம்வந்து
சேர்தரப் பயந்த – ழுந்துவேனோ
நாதத்த் துவர்தொ டாதுநிற்கும் உன்றன்
நாண்மலர்ப் பதங்கள் – என்று சேர்வேன்
நானெனப் பகர்ந்து வாதிடத் துணிந்து
நாயெனத் திரிந்து – நொந்துபோனேன்
வேதனைச் சினந்து லோகமுற் றும்நன்கு
வேறியற் றும்விந்தை - கொண்டபாலா
வேலையிற் பிறங்கு மாவினைப் பிளந்து
வேரறக் களைந்த – வென்றி வேலா

34. திவள - மிகுதியாக, அழல் அம்பகம் – அக்கினிகக்ண.

வாதமிட் டடர்ந்த சாரணக் கணங்கள்
மாய்வுறப் பகர்ந்த – செம்பொன்வாயா
மாகரைப் புரந்த சீர்பொறுத் தசெந்தில்
வாழ்வெனச் சிறந்த – தம்பிரானே. 35

**தனனதன தனனதன தந்தத் தனத்ததன – – தந்ததானா**

அமரர்களும் அறிவரிய வஞ்சத் தொழிற்பலவும்
முயலுமட மகளிரெதிர் கெஞ்சித் தவித்துருகி
அணையின்மிசை அவருதவும் இன்பக் கடற்கிடைய –
மிழ்ந்திடாதே
அரசர்முத லியபொருள்வ ளம்பெற் றபற்பலரை
மகபதிவி சயன்அரியெ னுஞ்சொற் படித்துனருள்
அதனைவிழை தருமவரை நிந்திக் கும்அற்பரொடி –
ணங்கிடாதே
பமரமிகை மொகுமொகென உண்டிட் டிசைக்குமது
மலர்வகைகொ டுனைநிதம்வ ணங்கித் தமிழ்ப்புலவர்
பலர்வளைய நடுவினில்வி ளங்கித் திருப்புகழ்பொ -
ழிந்திடேனோ
பசியமர கதமயிலில் உம்பர்த் தலத்தில்உள
களிறுகொடு வருமகளும், வென்றிச் சிலைக்குறவர்
பரணிலுறு சிறுமியும்.இ ணங்கத் திருக்கைஅயில் –
கொண்டுவாராய்
குமரகுரு பரமுருக குப்பத் தில்உற்றுவரு
முனிவனிகர் பெரியர்உணர் கந்தப் பமத்தமலர்
குலவுசடை முடியிறைவர் கண்பெற் றபுத்திரன்எ –
னுஞ்செவேளே
குமரிபக வதி,அமலே, எண்கைச் சமர்த்தி,அடல்
மயிடமுகன் மிசைநடமு யன்றிட் டசத்தி,ஒரு
குழையினிடை மதிவரஎ றிந்துட் களித்தவள்சு -
மந்தபாலா

35. சாரணக்கணம் - சமணக் கூட்டம்.
36. மகபதி - இந்திரன்,

தமரவர்க ளொடுசமணர் மங்கக், கழுத்தலையில்
அவர்குரவர் குடர்விழிபி துங்கிக் கிடக்க,முதிர்
தமிழ்மதுரை வளநகர்ம கிழ்ந்தெக் களிப்படைய -
வென்றபாலா

தனனதன தனனதன தந்தத் தனத்ததன
எனஅருணை கிரிஅனையர் செஞ்சொற் கவித்தொகுதி
தருதொனியின் மிகைநிலவு செந்திற் பதிக்குளமர் -
தம்பிரானே. 36

**தனத்தானன தானன தய்யன – தந்ததானு**

தவப்பேறணு வாயினு மெய்திலன் – வஞ்சமானுர்
தமக்காகிய வேலைகள் செய்பவர் – பின்புபோவேன்
அவப்போதுடை யார்களை நல்லுற – வென்றுசேர்வேன்
அதட்டாவரு காலனை வெல்லுவ – தெந்தவாறே
குவட்டாடிய சீரொடு பெய்கழல் – கொண்டபாதா
குகுக்கூவென ஓலிடு புள்ளுறை – கின்றதோளா
சிவப்பாகிய தாமரை ஒல்கு(ம்)மு – கங்களானே
திருச்சீரலை வாயினில் வைகிய - தம்பிரானே, 37

**தானதத்தந் தானன – – தந்ததானு**

காமனுக்கும் பாரதி கேள்வனுக்கும் போர்பொரு
காலனுக்குங் கோபமி – குந்ததாலே
காசினிக்கண் பாழ்படும் நானுனக்கன் பாகிய
காரணத்தன் ருனென – என்றுவாழ்வேன்
நீமனத்தின் பால்வெகு கோலமுற்றன் றேதிய
நீதியிற்சந் தேகம்நெ – ருங்கலாமோ
நீபமொக்கும் பாடல்சொ லாதுனைக்கொண் டாடிய
நேயருக்கும் பேறுவ – ழங்கிலாயோ
கோமளக்கன் றேஅர ஞர்தமக்கன் றேர்மொழி
கூறும்உத்துங் காஉமை - அன்புளானே
கூதளத்திண் டோள்வன வேடுவர்க்கஞ் சாதொரு
கோதையைக்கொண் டோடிவ – ருங்குகேசா

தேமலர்த்தண் சாரல்கள் தோறும்நித்தம் போய்வரு
தேவெனிற்சந் தோடமு – றுங்குமாரா
தீபமொக்குங் கூரிலே வேலுடைக்கந் தாஅருள்
சேர்திருச்செந் தூர்வளர் – தம்பிரானே, 38

தத்தன தந்ததன தான – – தந்ததான

முத்தைநேர் வெண்பல்உறு மாதர்
இச்சையால் நொந்துமனம் வாடி
முத்தர்மீ துஞ்சினவு தீமை – கொண்டிடாதே
மொய்த்தநீ பங்குரவம் நீலம்
வெட்சிபோ லுந்தமிழ்வி னோதம்
முற்றும்ஓ தும்புலமை யாசை - குன்றிடாதே
தத்தைபோ லுஞ்சிலர்சொல் பாடல்
உட்கொள்சீர் கண்டுமகிழ் சீலர்
தக்கநூல் வம்பரொடு பேசி – அஞ்சுறாதே
சச்சிதா னந்தவடி வாகி
நிற்கும்நீ யின்றுமயில் மீது
சத்திவேல் கொண்டெனது நேரில் – வந்திடாயே
எத்தையார் நெஞ்சினிடை நாடி
நத்தினு லுந்தளர்வு றாமுன்
இட்டுலா வும்பெருமை தோய்த – றுங்குலா
எட்குள்மே வுந்தயில மாம
தொக்கவே எங்கும்நிறை வாயும்
எட்டுரு பங்கொள்பர மேசர் – தந்தபாலா
சித்தையே சுஞ்சிதடர் நாணும்
வெற்றிதோய் கின்றகவு மாரர்
செட்டிதான் என்றிடினும் ஆர்வ – மிஞ்சுதேவா
திக்கெலா முங்குளிகை யோடு
சுற்றியே வந்துபல கோடி
சித்தர்வாழ் செந்திநகர் மேவு – தம்பிரானே, 39

39. தத்தை - கிளி (அருணகிரிநாதர்), எட்டுருபம் மண், நீர், நெருப்பு, காற்று - வெளி என்பவை.

**தனத்தந் தனத் – தந்ததான**

இருக்கின் றலைப் பொருட்கண் டுனக்(கு)
இனிக்கின் றசொற் - கொண்டுபாடா(து)
இருக்குங் குணத் – தெனக்கென் றெடுத்(து)
இசைக்கின் றசத் - தட்பொய்தானு
அருக்கன் றழற் பெருக்குஞ் சிவப்(பு)
அனைத்துங் கலக் - கின்றசீர்தோய்
அருட்குன் றெனச் சிகிக்கண் சிரித்(து)
அயிற்கொண் டுசற் - றிங்குவாராய்
தருக்குந் திருட் டரக்கன் றனைத்
தகர்க்குந் திறற் - செங்கையானே
தமிழ்ச்சங் கமுற் றவர்க்கன் றுமெய்ந்
தவப்பண் பளிக் - குங்குமாரா
திருக்குங் கறைத் துணைக்கொம் புடைச்
செருச்செந் தகர்க் – கந்தவேளே
திரைச்சிந் தொலித்(து) உயர்த்துங் கரைத்
திருச்செந் திலிற் - றம்பிரானே. 40

**தந்ததன தானதன தத்ததான – – தந்ததான**

மந்திநிகர் தீயவர்த மைப்பல்வாறு
கெஞ்சிஅவர் வாயிலினி டத்தில்ஏகி
வந்தனைசெய் பாவலவர் ஒத்துநான்வ – ருந்தலாமோ
வண்புகழ்கெ டாஅருணை யிற்குலாவி
நின்றமுது கோபுரமு கப்பைநாடி
வந்தஅடி யேனுடன்இ சைத்தவாறும் – வம்பதாமோ

40. இருக்கின்தலை - வேத முதல் ( பிரணவம் ). செருச்செந்தகர் - சிவப்பு நிறமான சண்டைக் கடா.

41. முதுகோபுரம் - வல்லாளன் கோபுரம் (அதன் வடபக்கமுள்ள முருகன். அருணகிரிநாதருக்கருளியவன். அங்கு தனக்குக் கிடைத்த அநுபூதியின் குறிப்பு)

தந்திகள னேகம்வெரு ளச்செய்ஆண்மை
கொண்டுமிளிர் சீயமென உத்திவாத
தந்திரரெ லாரையும்வெ ருட்டுமேன்மை - துன்றுமாறே
தங்கமுட னேமரக தத்தை நேரும்
அந்தமுறு தோகைமயி லிற்கைவேல்கொள்
சந்திரதி வாகரர்கள் ஒத்தெனேர்து – லங்குவாயே
இந்திரகு மாரியைம ணத்தும்,வேடர்
தம்பரணின் மீதுறுக றுத்தபேதை
யின்சமயம் நாடிஅள வற்றகோல - முங்கொள்வானே
எண்டிசையு ளார்களும்வ ழுத்துசூரன்
அன்றுமக ராலயம்அ தற்குள்ஓட
எஞ்சலறு போர்புரிச மர்த்தனை – கந்தவேளே
திந்திமிதெய் தாவெனந டிக்கும்ஈசர்
பங்கில்உறை வாள்முலைம ணக்கும்ஆறு
செம்பவள வாய்கொளும்ஒ ருத்தனும்இ – ளங்குமாரா
சிந்துதிரை வாரிதிய டுத்துநீடு
சந்தவரை யால்அதிவ ளப்பமேவு
செந்தில்நக ரேஉயர்வெ னச்சொல்வார்கள்–தம்பிரானே.
41

தந்தன தனத்த தானன – – தந்ததான

பங்கய மலர்க்குள் வாழ்இரு மங்கையர் தமக்கு மால்கொடு
பைந்தமிழ் தொடுத்துன் மீதில்அ - ணிந்திலேனே
பன்றிஅ யம்ஒப்ப வாம்மிரு கங்களை வதைக்கு மீனர்சொல்
பஞ்சைநெ றியைச்ச தாமுனி – கின்றிலேனே

41. சந்திரதிவாகரர் - சந்திரன் போன்ற முகங்களும், சூரியன் போன்ற முடிகளும், மணத்தும்– மணந்திருந்தும், மகராலயம் - கடல்.

42. அயம் – ஆடு, பஞ்சை நெறி - அற்பமுமயம்.

வெங்கரி களைக்கொல் வீறுறு சிங்கம தைஒத்த வீரர்கள்
வென்றியை நினைத்து நாளும - கிழ்ந்திலேனே
விண்தலர் துதிக்கு(ம்) மாலென அங்கத மிதித்த தோகையில்
வெண்பொடி நிறைத்த மேனிது - லங்கவாராய்
சங்கம தில்உற்ற பாவலர் அன்றிகல் விளைத்த போதவர்
தம்பகை தவிர்த்த மேன்மைபு - னைந்தகோவே
சண்டனை யுதைத்து வேதியன் மைந்தனை யளித்த நாயகர்
தந்தழல் விழிக்கண் ஆதியில் - வந்தபாலா
செங்கயல் பொறித்த கேதனன் - என்றுரு வெடுத்தொர் மால்வரை
சிந்திட அடித்த சேவகம் - ஒன்றுளானே
சிந்திசை தொடுத்த நாவல ரும்புகழ் பொறுத்து வாழ்வுறு
செந்தில் நகரிற்கு லாவிய - தம்பிரானே. 42

தானதன தந்தனத் தாத்த - - தந்ததானா

பாவமட மங்கையர்க் கேற்ற வாறுபகர் கின்றபொய்த் தூர்த்தர்
பால்மிக நடந்திளைத் தாற்றல் - குன்றுவேனோ
பாயுடையர் தங்கள்சொற் கேட்ட தீயவர்சொ லும்பிழைப் பாக்கள்
பாகமெனும் வம்பரைத் தாக்கி - வென்றிடேனோ
நீவலிய வந்தெனக் காப்பல் ஆயிரம் விதஞ்சொலித் தேற்றும்
நீதியை மறந்துவிட் டேக்கம் - மிஞ்சலாமோ
நீலகிரி யென்றநற் றேற்ற மேவுமயி லின்கண்மெய்க் காட்சி
நேயமொடு தந்தெனைக் காப்ப - தெந்தநாளோ
யாவரும்வி ரும்பருட் கீர்த்தி வாசமலி சந்தனத் தாக்கம்
ஏமநதி யொஞ்சுசெப் பாற்றொ(டு) - ஒன்றுசீரால்
ஈடில்மல யந்தனிற் சேர்த்த மேலவர் கணந்தொழத் தேக்கும்
ஈசனிகர் கும்பன்முற் போற்ற - நின்றதேவே

42. அங்கதம் - பாம்பு. வேதியன் மைந்தன் - மார்க்கண்டேயர். கயல் கேதனம் - மீன் கொடி. (உக்கிரகுமாரபாண்டியன்). மால் - கல்வி, செல்வம் என இவற்றின் மீதுள்ள விருப்பம்.

43. பாயுடையர் - சமணர். பாகம் - சுவையானது. ஏமநதி - பொன்னிறு (காவிரி). செப்பாறு - தாம்பிரபரணி. மலயம் - பொதியை.

சேவலணி யுங்கரத் தேற்றம் மேவியக டம்ப!விற் போர்செய்
சீயமுகன் அஞ்சமிக் கார்த்த – விந்தையானே
தேவர்பர வுந்திறற் கார்த்தி கேயகுக செந்தமிழ்ச் சேர்த்த
சீலமுறு செந்திலைக் காத்த – தம்பிரானே. 43

தனந்த னந்தன தனதன தனதன – – தந்ததானா

முரண்டு வஞ்சக முதலிய பிழைபல
விதங்க ளுங்குடி கொளுமன முடையவர்
முகஞ்சி னந்துரை பகரினும் இதமொடு – கெஞ்சலாமோ
முதிர்ந்த செந்தமிழ் நயமுழு மையும்இனி
துணர்ந்து கொண்டவர் மிசைவரு மிடியினை
முனிந்து வென்றிட விழைதரு நினைவு(ம்)ம – ழுங்கலாமோ
திரண்டு குன்றென எழுமுலை அரிவையர்
வசம்பு குந்தவர் பகர்தரு பணிவிடை
செயுங்கு ணுங்கர்க ளொடுபுவி மயலில்அ-ழுந்தலாமோ
சிவந்த பங்கய மலர்நிகர் உனதிரு
பதங்க ளுந்தலை மிசையணி தரும்ஒரு
தினம்பி றந்திட எனும்நினை வதனைய - றிந்திடாயோ
இரண்டு திண்புயம் உறுகரு மலையென
வரும்பெ ருந்தகு வனையொரு நொடியிடை
இறந்தி டும்படி பொரும் அயில் மருவுபு – யங்களானே
இலங்கை யென்றுள நகரியி னிடைமதி
யுடன்செ ழுங்கதிர் நுழைவுற விடுதிறல்
இசைந்த புங்கவ னுடன்வரும் ஒருசிறு -தங்கைபாலா
சரண்டு லங்களண் அறுபல மலையினும்
நடம்பு ரிந்தருள் குருபர எனமொழி
தரும்பெ ருந்தவர் தமையொரு கணமும்அ–கன்றிடானே.
சலந்த ரன்றனை வளைகொடு வகிர்தரு
பரம்ப ரன்றழல் விழிதரு குகஅருள்
தழைந்த செந்திலில் அரசென நிலவிய-தம்பிரானே. 44

**தனனதன தனனதன தனதான தந்தன – தந்ததான**

தவளநிற மலிவுபெறு திருநீறும் ஐந்துமுகன்
விழியில்வரு மணியும்அன லுறழ்தானை யுங்கொடுயர்
தவமுயலு மறிஞரது மனமான கஞ்சமலர் – வெம்புருதே
தரளநகை மடமகளிர் பிறகேதி ரிந்தவர்சொல்
பணிபுரியு மனிதர்களை மகவான்ம தன்பெருகு
தனிகன்அலை கடலில்விழி துயில்மால் எனுங்கவிஞர்
- இன்புருதே,

அவரவர்தம் வினையளவில் உடலீயும் அம்புயனும்,
மலர்கள்கொடு பொருதுதுயர் தரும்வேளும், அண்டமுக
டதிரவரு மயிடமிவர் எமராய னுந்திரிவி - தஞ்செயாதே
அருள்வலிமை பெறமிகவும் முயல்வேன்மு னங்கலப
மயில்முதுகில் இருமகளிர் அருகேயி ருந்துமகிழ்(வு)
அடையுநல மிலகவிதிர் வடிவேலு டன்சிறிது
-வந்திடாயே

கவளமென இகலிவரும் அனலாசு ரன்றன்உடல்
அதனைநுகர் பெருமைதிகழ் பெரியோன்ஒ ரைந்துகர
கமலமுறு கணபதி,பின் வருபார தந்தனையோர் –
குன்றின்மீதே
கடுகிவரை தருகடவுள், வடைதோசை பொங்கல்பொரி
விடலைபய றுடியல்முதிர் இளநீர்க ரும்புபல
கனியனைய பலவும்அருள் பவர்வாழ்வு றும்படிசெய் –
தும்பிதோழா

சிவன்அமல பரமவுன நிலைநால்வர் அன்றுபெற
இனிதருள்செய் குரவன்வட மரம்நேர்கு ருந்தையிடை
சிறிதமரு முதல்வன்,அழல் விழியூடு வந்துவளர் –
கின்றசேயே
திகழ்கனக வரையைஅடர் செழியாஅ மண்கயவர்
நசியவிடு கவிதைபொழி புலவா!ந லங்குலவு
திருவினொடு கலைமகளும் அகலாத செந்தில்வளர் –
தம்பிரானே. 45

45. தனிகன் – பெருஞ் செல்வன் (குபேரன்); வடமரம் – ஆலமரம்.

தந்த தானன தாந்தன — தந்ததான

வஞ்ச மீறிய மாந்தர்கள் - பின்செலாதே
மங்கை மார்முலை தோய்ந்துமெ - லிந்தடாதே
பஞ்ச பாதக மாம்பிணி - துன்றிடாதே
பைம்பொன் மாமயி லேய்ந்தெதிர் - வந்துகாவாய்
நஞ்சம் ஆர்பெரு மான்தர வந்தபாலா
நம்பு வார்மனம் நேர்ந்தவி — தஞ்செய்வேலா
செஞ்ச ரோருக மாஞ்சர — ணங்களானே
செந்தில் மா நகர் ஆண்டருள் — தம்பிரானே. 46

தான தந்தத் தானன — — தந்ததான

மாதர் தம்பொற் பூண்முலை நாடும் நெஞ்சத் தால்மிக
வாடு மென்சொற் சூடவி - ரும்பிடாயோ
மாச றுஞ்செப் பாறத னூடி ணங்கிக் கூறிய
வாய்மை யொன்றைக் கூடம — றந்துளாயோ
நீத மின்றிப் பூமியை ஆளும் வம்பர்க் கேவல்செய்
நீசர் நிந்தித் தாலும்மு - னிந்திடாயோ
நீயி ரங்கித் தோகையின் மீது வந்துற் றுயெனில்
நீடு மின்பப் பேறுபொ — ருந்திடேனோ
சூத மென்றப் போதுரு வான வஞ்சத் தோன்உடல்
சோரி சிந்தச் சாடிய - வென்றிவேலா
சூழும் இண்டைத் தார்புனை நாதர் சங்கக் காதிடை
சோர்வில் ஒன்றைக் கூறிம - கிழ்ந்தவாயா
ஈத லென்கைக் கோர்பகை யான வன்கைப் பூரியர்
யா வருங்கிட் டாநிலை - நின்றுளானே
ஏச றுஞ்சொற் பாவலர் வாழ்வெ னும்பொற் பார்தலின்
ஈடில் செம்பொற் கோவில்கொள் - தம்பிரானே. 47

47. சூதமென்று – மாமரமாக சோரி இரத்தம். பூரியர் – அற்பர்.

தனனதான தந்தான — — தந்ததான

மயிலைநேர்சொ லுஞ்சாய லொடுகுலாவு மின்போலும்
மடமினார்பெ ருங்காதல் - கொண்டதாலே
வறுமைநோய்மி குந்தூர்கள் தொறும்விடாத லைந்தோடி
மறுகினாலும் நின்பேர்மொ - ழிந்திலேனே
அயிலின்நேய மிஞ்சாண்மை யுதவும்வீர மொன்றாலென்
அயர்வெலாம றந்தார்வம் - ஒன்றிலேனே
அருணையூரில் முன்தோணல் எனையலாமல் இன்றாகில்
அகிலமேசும் வம்பூட - முந்தலாமோ
சயிலகோடி கொண்டாடல் மறையொடாக மந்தேடு
சரணமேவு கந்தாஎன் - அன்புளானே
தமநியாச லம்போலும் வலியசேவல் ஒன்றேசை
தருவதாய திண்டோள்கொ - ளுங்குகேசா
எயில்கள்நீற வென்றார்ஓர் தவசிவாழ என்றீடில்
எமனைமோதி டும்பாதர் — தந்தபாலா
எழிலிஓவ ருஞ்சோலை மருவுசீர்கொள் செந்தூரில்
இடைவிடாது றுஞ்சீலர் — தம்பிரானே. 48

தனனதன தந்த தானன — — தந்ததான

கமலமல ரின்க ணேமலர் குவளைகுமு தங்கள் போலொளிர்
கவின்மருவு கண்க ளால்முதிர் — அன்பர்மீதே
கருணையும்வ ணங்கி டாதிகழ் கொடியவர்கள் தங்கள் மீதெரி
கனலும்விடு கின்ற பான்மைம - றந்திலாயேல்
எமதினம்வ ருந்தி ஊர்தொறும் அலைதொழிலும் உண்கொ ணாதன
எனும்நிணம் அருந்து வார்களி — யுங்கொள்வானேன்
இலகயில்பு னைந்து தோகையில் இருமகளிர் பங்கில் நீதினம்
எனதெதிர் விளங்கி யாளவி - ரும்புவாயே.

---

48. அயிலின் நேயம் - வேற்பூசையின் விருப்பு. தமநியாசலம் — பொன் மலை. எயில்கள் நீற - மதில்கள் வேகும்படி. எழிலி — மேகம்.

அமலசிவ சங்க ரேசுரர் முறையுடன்வ ணங்கும் நாள்அறி
வரியபொருள் என்ற தாரகம் – விண்டவாயா
அமரர்தரு பெண்கு ருவிட வனமதில்ந டந்து போய்மயில்
அனையகுற மங்கை தாள்கள்ப – ணிந்துசேர்வாய்
சிமயமுனி வன்செய் சீரிய தமிழ்நய முணர்ந்த மேலவர்
தெரிதரு குணங்க ளாயிரம் - ஒன்றுதேவா
சிவசமய முன்சொல் மூவிரு வகைநெறிக ளும்ப ராவிய
திருமருவு செந்தில் மேவிய – தம்பிரானே. 49

**தனனதான தந்தத் தனந்தன – – தந்ததான**

கருணையேதும் இன்றிப் பிணம்பல
நுகரும்ஈனர் தங்கட் குள்அஞ்சிய
கவலைதீர்வ தென்றைக் கெனுந்துயர் – கண்டிலாயோ
கவிகள்பாடி அங்கிக் குள்அம்பர
முதலவாய அம்பிற் சொரிந்தவை
கழிவுறுதெ னுஞ்சொற் றுணிந்துவி – ளம்பிலாயோ
அருணையூரில் வந்துற் றருந்தமிழ்
கொடுபல்வாறு சந்தச் செழுங்கவி
அறைகுஞலன் என்றெற் பகர்ந்ததும் – வம்புதானோ
அளவில்வேத முஞ்செப் பிடும்புகழ்
புனைசரோரு கங்கட் கிணைந்துள
அடிகள்சூடி யின்பப் பெருங்கட – லுந்தராயே
தருமராசன், வன்கைப் பெரும்கதை
புனையும்வீமன் நஞ்சுட் கொளும்பரர்
தமைவிலால்அ டர்ந்திட் டவன்,பரி–விஞ்சைதேர்கோ
சகலஞாய முங்கற் றுணர்ந்துள
இளவலாகும் ஐம்பத்தர் பங்கினள்
சலனமாமுன் அன்றைக் கிரங்கினன் - விண்டசீலா

49. குருவிட - மனமெலியும்படி. சிமயமுனி – பொதியமலைக் குறுமுனி.

50. அங்கி, அம்பரம் – நெருப்பு, கடல், ஆறு இவற்றில் தாம் விட்ட கவிகள் - சரோருகம் – தாமரை (பாதங்கள்).

செருவில்வேடர் கொம்பைத் தொடர்ந்(து)அவள்
உதவுமாஅ ருந்திப் புணர்ந்துள
சிறுவனேயெ னுஞ்சொற் பகர்ந்திலர்-முன்செலாதாய்
செறியும் வாழை மஞ்சட் கரும்(பு)அமை
கமுகுதாழை இஞ்சிப் பசுந்தழை
திகழ்வதாய செந்திற் குர்வந்தமர் -- தம்பிரானே, 50

**தந்தன தனதன -- தந்ததான**

இந்திரன் முதலினர் தங்குறை முழுதற
என்றொரு மடுவிடை - வந்திலாயோ
எண்கணன் அலறமு னிந்தர னதுசெவி
யின்புற ஒருமொழி - விண்டிலாயோ
தந்தியு(ம்) மலையும ரும்படி பொருதரி
தன்படை யடைவது – கண்டிலாயோ
தண்டையும் அரவமும் ஒன்றிய திருவடி
தண்டமிழ் வலியொடு தந்திடாயோ
மந்திர முழுமையி னுந்திகழ் திருவருள்
மங்கைதன் அமுதம்நு – கர்ந்தவாயா
வண்டின மருவுக டம்பொடு கிளியுறும்
வண்புயம் ஒருபனி - ரண்டுளானே.
திந்திமி திரிகிட என்றணி நடம்நவில்
செஞ்சிகி முதுகில்இ – வர்ந்தவேளே
தெண்டிரை மணியெறி யுங்கடல் வளமலி
செந்திலில் அமர்தரு - தம்பிரானே. 51

**தந்த தந்தன தத்த தானன -- தந்ததான**

சந்திரன்றனை ஒத்த மாமுக
விம்ப மொன்றிந டிக்கு மாதர்கள்
தஞ்சொல் கொண்டலை தற்கு நாணமில் – வம்பர்பாலே

---

50- செருவில் - போர்க்குரிய வில். கரும்பு அமை – கரும்பும்மூங்கிலும்

51. எண்கணன் – பிரமன். அரிதன்படை - திருமாயன் சக்கரம். (சூர சங்கார‌த்தின்போது வருதல்)

சந்த தஞ்செல விட்ட நீயினி
என்றுன் அன்பர்கள் பக்க மேவி,இ
தம்பெ றும்பல சொற்கள் பேசும்ந - லஞ்செய்வாயோ
பந்தி கெண்டபு யத்தின் மீதுறும்
அஞ்சு கந்தனை ஒப்ப தாகிய
பண்பன் என்றகி லத்து ளார்பகர் — கின்றதேனே
பண்டு விண்டப டிக்கென் நேரினில்
வந்து நின்(று)இலை வைத்த நீரருள்
பங்க மிஞ்சியி னைக்கும் வாதைஅ — றிந்திலாயோ
கொந்தி சைத்தக டப்ப மாலிகை
என்றி லங்குத மிழ்ச்சொல் பாவலர்
குன்றி னந்தொறும் மெச்சு சீர்திகழ் — கந்தவேளே.
குந்தி மைந்தர்வி டுத்த தூதென
அன்று சென்றர வுய்த்த தோர்கொடி
கொண்ட வன்சபை மெச்ச மீள்பவன் - முன்சொல்சீலா
செந்தி னங்களை நத்தி னூடும்நி
றைந்த விந்தைஅ ருச்சு னாதியர்
திண்கை கொண்டுண ரச்செய் தார்விழி — தந்தபாலா
செங்க ரும்புவெ டித்த தால்வழி
யும்ப சும்புன லுற்ற வாவிகொள்
செந்தி லம்பதி யிற்கு லாவிய — தம்பிரானே. 52

**தந்த தானதன தானதத்த தந்த — — தந்ததானா**

ஐந்து பூதமும்இ லாதிருக்கும் அங்கு
நின்ற தானமுதல் மூலசத்தி யென்றும்
அந்த மாயையும்இ லாதவத்து வென்றும் — இந்தவாறாய்
அன்பர் கூறும்இரு பேதமற்ற தென்றும்
ஒன்ற தாய்அளவில் கேள்வுமுற்ற தென்றும்
அம்பு யாதனன்அ நாள்பிதற்ற நின்ற - விஞ்சையூடே

52. அஞ்சுகம் - கிளி, குந்தி மைந்தர் — பாண்டவர்கள். ஆதியர் - அருச்சுனன், பாண்டியன் இருவரும் வில்லாலும் பிரம்பாலும் அடித்தபோது யாவர் மீதும் பட்ட அடி.

உந்தும் நீ,உனைய லாதுமற்றோர் தஞ்சம்
இன்று, வேதமுடன் ஆகமத்தும் இந்த
ஒன்றை யேபகர்வ தாமெனத்து ணிந்து -
கொண்டுளேன்யான்
ஒண்க லாபமதன் நீழலிற்றி கழ்ந்த
செங்கை வேலொடுகு லாவிவச்சி றங்கொள்
உம்பர் கோன்முதலி னோர்மிகப்பு கழ்ந்த-வென்றியீவாய்

சந்து நாறியப யோதரத்த ணங்கு
பங்கில் வாழவும்வில் வேடர்மெய்த்த வங்கள்
தந்த பேறனைய பேதைமுற்ப ணிந்து - கெஞ்சுமோகா
தண்டை வார்கொலுசு போரொலிச்சி லம்பு
வென்றி தோய்கழல்கொள் பாதம்நத்து மன்பர்
தங்கள் மேல்வெகுளு வார்குடற்பு னைந்த – விர்ந்தவேலா

சிந்து ரானனவி நாயகற்கி சைந்த
தம்பி யேஅளவில் கோடிவெற்ப றிந்த
சிங்க மேயிணையில் சேவல்வைத்தி ருந்த - திண்கையானே
செம்பொன் மாமதிளின் ஞாயிலேப்பொ தும்பர்
சிந்து தேன்மகர மூடுபொற்ப மைந்த
செந்தின் மாநகரின் வாழ்வினுக்கி சைந்த - தம்பிரானே. 53

**தந்தன தானதத்த – – தந்ததான**

தங்கமக மேருஒத்த கொங்கைமட மாதர்இச்சை
தங்குமன தூடிருக்க – வந்திடாயோ
சஞ்சலம்அ றுதசித்தம் ஒன்றும்அடி யேன்இழைத்த
சந்தமொழி மாலையைப்பு – னைந்திடாயோ
சங்குமுடன் ஆழிவைத்த திண்கரமு ராரிபெற்ற
தந்திரமி நாளுநறச்செய்(து) - உம்பரூடே
சந்திரனை நீரைநெய்த்த கொன்றையுட னேமுடித்த
சங்கரனில் வாழவைப்பன் – என்றதாரோ

53. சந்து நாறிய - சந்தன மணம் கமழ்ந்த. பயோதரம் - தனம்
சிந்துரானனம் – யானைமுகம்- ஞாயில் – மதிலின் ஒரு அங்கம

கொங்கவிழும் நீபம்வெட்சி தண்குரவம் ஆதிமொய்த்த
குன்றநிரை யேயெனப்ப – டர்ந்ததோளா
கொஞ்சுகிளி மேனியிற்பு குந்தமரர் ஊர்மலர்க்கொ
ணர்ந்தகவி வாணன்மெச்சும் – விந்தையானே
செங்கமல மீதிருக்கும் அந்தணனை மோதலிற்சி
வந்தகரம் ஆறிரட்டி – கொண்டசேயே
சிந்தையுலை யாதபத்தி துன்றுநர்அ னேகர்நத்து
செந்திலபி மானமுற்ற – தம்பிரானே. 54

**தனனதன தனனதன தனனதன தனனதன**
**தந்தான தத்ததன தந்தான தத்ததன – – தந்ததான**

கருணன்அடல் விசையன்மக பதிமதனன் அளகைஅர
சன்போலு மற்றையவ ருங்கேள்வி யிற்பெரிது
தளரஇல கியபுகழ்கொள் புனிதனெனன் முதலியவி
தம்பாடி நித்தமும்ந டந்தேப டிக்கமுயல்
கவிஞர்கரு தியகொடையில் அணுவளவும் உதவுகிலர்
பொன்பூமி முற்பகர்பெ ருஞ்சீர்ப டைத்துமகிழ்(வு)
– ஒன்றலாமோ
கருணைமலி வுறலின்உயிர் முழுதும்ஒரு சமமெனநி
னைந்தேந டக்கும்உணர் வுந்தேவர் பெற்றுமகிழ்
திருவும்நிலை யலமலைகள் தொறும்நடனம் இடும்இருப
தந்தான்நி லைத்ததென நம்பாண்மை முற்சொல்பல
களியுமுழு மதியனைய பொடிபரமன் விழியின்மணி
செந்தானை யொத்தபிற வுந்தோயும் முத்தர்கள்வ
– ருந்தலாமோ
பொருதிரையின் வளமருவு கடலில்நிறை புனல்பருகி
விண்தோய்மு கிற்கெதிர்ம கிழ்ந்தாடல் இட்டரவம்
முழுதும்அல மரஅகவி யிசைபயிலும் அரமகளிர்
கண்டுடில் வெட்கமுற மென்தோகை அக்கமிகு
பொலிவிலக விரியுமெழில் இசையவரு மயில்முதுகில்
என்தாய ருட்களியு டன்பாலி ருக்கவிதிர்
— வென்றிவேல்சேர்

54 **அந்தணனை - பிரமதேவனை**

புயநிரையும் வனசமலர் அனையமுக வரிசையு(ம்)மெய்
குன்றுத பத்தர்உண ருந்தாளும் மற்றும்உள
கவின்விழிகள் முதலியபல் அவயமும் மணிபலவும்
என்பார்வை யிற்றிகழ வந்தாயெ னிற்சகல
புவனமும்நின் அடிமையென எனையறியும் இசைநிறுவி
இங்கேஉ டற்கெடுதி ரும்பாத முத்தியும்அ-டைந்திடேனு
பருமலைய தெனும்நெடிய சிலைபுனையும் இறைவர்,அர
வம்பூணும் நட்பர்பிர மன்கோ வெனக்கதற
ஒருதலையை நொடியினிடை உணவுகொள உதவுகலம்
என்றேந கத்திடைக வர்ந்தார் நினைக்கரிய
பரிசுடைய முதல்வர்பொது விடைநடனம் இடுகடவுள்
கண்பேணி முற்றருகு ழந்தாய்எ னிற்புளகம்-மிஞ்சுவானே
பகவதி,அ மலை,கவுரி, திரிபுரை,இ மயமலைத
ரும்பேதை, சித்தர்கள்தொ ழுந்தாய்,ப ழிக்கரிய
நிறையுடயள், இமகிரண மதியமென ஒருகுழைஎ
றிந்தேஒ ருத்தனைவி ரைந்தாத ரித்தபரை,
பணிலமணி தருசெவிகள் நிறையும்அமு தனையமொழி
விண்டேயு றுக்குமவள் தன்பால்கு டித்துவள-ருங்குகேசா
தெருளுமுனி வரர்துயரம் ஒழியவென வெகுவடிவு
கொண்டாடும் அச்சுதன்ஓர் ஐந்தாயு தக்குரிசில்
குருகுலம(ன்) னவர்பொருத களமதனில் ஒருகசைகொ
ளுஞ்சூதன்,'வெற்றிமலி சங்கூத லிற்பகைவர்
திரள்அவசம் உறவும்விடு கபடநட முகில்அமரர்
தம்பால்உ ரைத்தபுகழ் கொண்டேக ணிக்கரிய
- குன்றில்வாழ்வாய்
சிவசமயம் நிலைபெறமுன் அமணரொடு பொருதகுக
செந்தாம ரைத்தடம தன்பால்உ ருக்கொடுயர்
குமரகுரு பரமுருக குறவர்இதண் உறுசிறுமி
தன்பால்இ ரக்கமனம் ஒஞ்சாமு ழுக்கிழவ
தினகரனும் மதியும்வலம் வருபெரிய சிகரிதிகழ்
செந்தூரி னிற்றினமும் நின்றேஎ மக்கருள்செய் –
தம்பிரானே. 55

55. கருணன் - கர்ணன். அளகை அரசன் - குபேரன்.

**தன்னன தாத்தன தந்தத் தானத் – தந்ததான**

மும்மல நோய்க்கிடை வெம்பிப் பாழிற் - புண்படாதே
முன்னவர் நூற்களை நிந்திப் பாரைச் - சந்தியாதே
பொய்ம்மலி தூர்த்தர்கள் தஞ்சொற் கேள்வித் – துன்புறாதே
பொன்மயில் மேற்றினம் வந்துற் றோகைப்-பண்புதாராய்
கைம்மலை மாய்த்தொரு குன்றைச் சாடுத் – துங்கவேலா
கன்னல்வில் வேட்குயர் செம்பொற் றேகக் - கந்தநாதா
செம்மலர் தூற்றியும் வந்திப் பாருக் – கன்புளானே
தென்னவர் போற்றிய செந்திற் கோயிற்–றம்பிரானே. 56

**தனானன தானத் தந்தந் – – தந்ததான**

பருவமட மாதர்க் கன்புற் றுருகுமெனை வாழ்வித் துன்றற்
பணிபுரிகு வாருட் டுன்றக் - கண்டிடாயோ
பகையசுரர் மாளக் கொன்றிட் டுயரும்வடி வேலைக் கெஞ்சிப்
பரவுமவர் ஏவற் றொண்டுற் - றுய்ந்திடேனோ
குருவெனமு னுள்செப் புஞ்சொற் பழுதுபடு மாகிற் சிந்தைக்
குறைதவிரு மோனட் டங்கத்(து) - ஒன்றுதாராய்
குறமகளும் வானத் தற்பொற் பிடியும்இரு பாகத் தொன்றக்
குலவியக னைச் சிந்திக் – கின்றிலேனோ
கருணைமுகி லேமற் கொம்புத் தகர்நடவு வாய்பச் சங்கக்
கலபமயிலா!வெற் பந்தத் – தென்றும்வாழ்வாய்
கரிவரத மால்பிற் றங்கைக் கொருபுதல்வ னேபொய்ப் பொங்கக்
கலிபுருட னுற் றஞ்சக் – கண்டுளானே
திருடனென நூலிற் சொன்றிட் டவனையும்வி டாமற் றன்கைச்
சிறுகிளியெ னைக் கும்பெட்(பு) – ஒன்றுவானே
திருவருள்வி னோதப் பண்பர்க் குரிமைதரு கோயிற் சந்தச்
சிகரிவளர் சீலச் செந்திற் – றம்பிரானே. 57

---

55. பொடி – திருநீறு. அக்கம் மிகு – கண்களையுடைய தோகை. ஒருத்தனை அபிராமபட்டரை. பணிலம் சங்கு ஐந்தாயுதம் – சங்கு, சக்கரம், கோதண்டம், வில், அம்பு என்பன திருமாலுடையது. கசை கொளும் சூதன்– தேர்ப்பாகனுகிச் சாட்டையுடன் வந்த மால். இதண் - பரண்.

57. பச்சங்கம் – பச்சையான உருவம் (மயில்). வெற்பந்தம் - மலைஉச்சி

தந்தனத் தானன தந்தன -- தந்ததான

பந்தமிகச் சூழ்தலில் நொந்துனை
நம்புதவத் தீடுகு லைந்துயர்
பண்பினரைத் தூடண முஞ்செயும் – வம்புறுதே
பண்டைவினைக் காடுப டர்ந்தும
டந்தையருக் கேவல்பு ரிந்துப
யங்கரநிட் டூரந மங்கைபு – குந்திடாதே
செந்தமிழுற் சாகந லம்பெறு
தொண்டர்களைச் சேரும்ந லங்கொடு
தென்றல்வரைக் கோன்மகி ழுந்தகை - ஒன்றுமாறே
திந்திமிதித் தாவென நின்றுந
டம்பயில்பொற் றேகையில் வந்துசி
வர்தகமுற் றுமரை தந்துபு - ரந்திடாயே
சுந்தரருக் காமுனம் அங்கொரு
பெண்கொடிமுற் றாதுந டந்தவர்
துங்கவிழிப் பாலக னென்றுவ - ருங்குகேசா
தும்பிமுகத் தோர்தமை யன்பகை
கொண்டுலகைச் சூழும்வி தம்பகர்
தொண்டரையெப் போதும்நி னைந்தும - கிழ்ந்துளானே
சிந்தனையிற் சேவல்வ ரைந்தபெ
ருங்கொடிநட் பேகுடி கொண்டுள
தெம்பினருக் கானந லங்கள்பு – ரிந்தவேளே
செம்பொன்மணிக் கோயிலு டன்கமழ்
சந்தனவெற் பால்வள மிஞ்சிய
செந்தில்நகர்க் காண்மைவ ழங்கிய - தம்பிரானே. 58

தந்ததனத் தானத் தானத் -- தந்ததான

அம்புறழ்கட் சேனைப் போருக்
கின்புறுமுற் சாகத் தானுக்(கு)
அஞ்சுமெனைக் கூவிப் பேசச் – சிந்தியாயோ
அம்புவியிற் கோறுற் றானைத்
தின்பவர்செத் தேகச் சாடற்(கு)
அந்தகனைப் போலக் கோபிக் – கின்றதாரோ

பம்புகடற் சேர்சொற் பாடற்
றந்தடிமைச் சீரோப் பாநற்
பண்பிலதைத் தாபித் தாலற் - குன்றுருதோ
பைம்பொன்மணிக் கோலத் தோகைச்
செஞ்சிகியிற் றேனுற் றீகைப்
பங்கமறுத் தாள்கைக் காகக் - கெஞ்சிலேனே
சம்புநுதற் றீயிற் றேணிக்
கும்பமுனிக் கோர்சொற் கூறித்
தண்கமலத் தோனைப் பேதிக் - குங்குமாரா
சண்டையிடற்(கு) ஓடிச் சீறிக்
கொண்டெதிர்மற் சூரைக் கீறித்
தங்கநகர்க் கோனுக் கார்வப் - பொங்கமீவாய்
சிம்புள்வலிச் சேவற் றோளிற்
கொஞ்சுகிளிப் பாடற் சூடிச்
செஞ்சரணத் தேயித் தாழ்சொற் - றுன்றவாழ்வாய்
சிந்துமலர்ச் சோலைச் சாரற்
சந்தவரைச் சீலக் கோயிற்
செந்தில்நகர்க் காவற் காரத் - தம்பிரானே. 59

**தந்த தானன தானன தனன — — தந்ததான**

பந்து நேர்முலை மாதர்கள் நடுவிற்
சென்று போர்பொரும் வேள்புனை வரிவிற்
பஞ்ச பாணவி னோதமென் உணர்வைச் — சிந்திடாதே
பண்டு நாய்நரி பூனைய தெனவுற்(று)
அந்த வாசனை யால்நிணம் நிகர்துர்ப்
பண்ப ருர்கள்வி காதமெய் திடலிற் — புண்படாதே
ஐந்து மாமுக னாகிய அழல்வெற்
பின்கண் நீடிய கோபுர மதில்உற்(று)
அன்று கூறிய தோர்மொழி பிழைபட்(டு) - எஞ்சுருதே
அங்கை வேலுட னேமயில் முதுகிற்
செம்பொன் மால்வரை போலெதிர் இலகுற்(று)
அன்பர் சேகர னாகிட ஒருசொற் — றந்திடாயே

தந்து போலிடை யாள்உமை தவளச்
சிங்கம் ஊர்பவள் மாதவ னதுநற்
றங்கை யாம்மக மாயிதன்அமுதுட் – கொண்டவாயா
தஞ்ச மாமெனும் வேதியன் மகிழச்
செங்கண் ஏமனை மோதிய சரணச்
சங்க ரேசுர ஞர்நுதல் விழிமுற் - றந்தபாலா
சிந்து தேன்மழை யேநிகர் மதுரச்
சந்த மோதிய பாவலர் உவகைச்
சிந்தை யூடுகு லாவிய பவளக் - குன்றுபோல்வாய்
செண்டு வேல்வளை சேர்புய வழுதிக்(கு)
இன்ப மாகிய நாடதில் முதன்மைச்
செந்தின் மாநகர் மேவிய அருமைத் - தம்பிரானே. 60

**தந்த தந்தனத் தானன தானன – – தந்ததான**

பண்டு வந்தெனக் காஒரு வாசகம்
விண்ட துண்டதைத் தேறிலன், மாதவர்
பண்ப றிந்ததிற் றேய்கிலன், நீயினி – என்செய்வாயோ
பங்க யங்களிற் சேர்இரு மாதர்கள்
கண்பொ ருந்தருட் சேர்தர மால்கொடு
பங்க மிஞ்சியெய்த் தேனிதை நீயறி – கின்றிலாயோ
தொண்டு கொண்டுனக் காளென வாழ்பவர்
தம்பெ ரும்புடைக் கூடுகு லாவுறு
துங்க முந்திருப் பூசனை வாழ்வும்வி – ரும்பிலேனே
சுந்த ரன்றனக் காவொரு தூதென
முன்செ லுந்திருத் தாளினர் காதிடை
சொன்ற வொன்றையெப் போதிலெ னேடும்வி –
ளம்புவாயோ

கண்டு கண்டுனைப் பாடிய பாவலர்
சிந்தை யின்கண்ளக் காலும்நி லாவிய
கஞ்ச மென்பதத் தேபனி நீபம — ணிந்தவேளே
கங்கை தந்தநற் சேயல தோர்பரம்
இன்றெ னுந்திறற் ரேய்கவு மாரர்கள்
கன்றும் உண்பவர்க் காகிய வாறுசெ — யுங்குகேசா
திண்டு மிண்டுடைச் சூர்முத லாகிய
அண்டர் தங்களைச் சாடிய வேல்உறு
திண்பு யங்களிற் சேவலும் ஓர்கிளி - யுங்கொள்வானே
செண்ட லர்ந்தகைக் காரிகை யாரரு(கு)
ஒன்றி நின்றுவப் பாகவி ஞூர்புகழ்
செந்தி லம்பதிக் கோவிலில் ஆடிய — தம்பிரானே. 61

தந்தன தந்தத் தானன — — தந்ததாரு

மந்தர மென்கத் தோணிய கொங்கையி லங்கத் தோதக
வஞ்சமு யன்றிட் டேயணு - கும்பொய்மானர்
வங்கண மிஞ்சித் தோய்தலில் நொந்துட லங்கெட் டாயிரம்
வன்பிணி துன்றிப் பாயில்வி — ழுந்ததாலே
தொந்தர வும்பெற் றோர்கள்,பி றந்தவர் பங்கிட் டோர்நிகர்
தொந்தர்சொ லுஞ்சொற் றீயும — லிந்துவீணே
துன்பம டைந்தப் பாவெனு மென்சொல்ப கர்ந்தெய்த் தாவிதொ
லைந்தெரி யின்கட் போமுன்இ — ரங்கிஆள்வாய்
கர்தர நஞ்சத் தார்புலி யுங்கரி யுஞ்செற் றோர்சிவை
கண்குளி ரும்பொற் பார்தலை — என்புதோலார்
கம்பறல் கொன்றைப் பூமதி வெண்பொடி பன்றிக் கோடுர
கம்புனை பண்புற் றோர்தர - வந்த பாலா
விந்தர முங்கிக் காலிகள் கன்றொடு துன்புற் றோடுமுன்
விண்தொடு குன்றைத் தோள்மிசை—கொண்டசீர்சால்
விண்டுஇ றைஞ்சற் காகிய செந்திலி டஞ்சித் தாடியென்
வெண்டமி ழுஞ்சற் றேபுனை — தம்பிரானே. 62

**தானன தந்தனத் தந்தன தந்தன — — தந்தான**

பாதக மிஞ்சுபொய்ப் பண்பர்த ரும்பொருள்
ஆவல்மி குந்தவர்க் கின்பமு றும்படி
பாடிய லேந்திளைக் கின்றபெ ரும்பிழை—வந்திடாதே

பானலி சைந்தமைக் கண்கொளு மங்கையர்
ஏவல்பு ரிந்தளிக் கும்பல்இ ரைந்துள
பாணம்வி டுங்கரத் தங்கசன் முன்புமெ—லிந்திடாதே

நீதம றந்தடுக் கின்றவர் தங்களை
வாதைசெ யும்பிணக் கொன்றிய புன்குண
நீசர்க ருங்குடைக் கண்புவி மங்கைவ — ருந்திடாதே.

நீலநெ டுங்குவட் டின்பொலி வொன்றும
யூரம தன்புறத் தென்சிறு கண்கள்முன்
நீவரு கின்றதற் கிங்குமு யன்றிடல் — கண்டிலாயோ

சூதமு றிந்தலை பொங்கமு றுங்கடல்
நீரும்வ றந்தடற் சிங்கமி வர்ந்தெதிர்
சூரனு மஞ்சிடச் சண்டைசெ யுந்திறல் — வென்றிவேலா

சூலமு றுங்கரத் தந்தகன் மங்கியோர்
பாலன்ம கிழ்ந்திடற் கண்டுள சந்திர
சூடன(து) அம்பகத் தின்பொறி யென்றுபி — றந்தசேயே

தீதக லுந்தமிழ்ச் சங்கம்உ யும்படி
ஊமையெ னும்பெயர்க் கொண்டும்வ ருங்குக
சேவல ணிந்தகைக் கந்த!அ மண்கெட — வந்தசீலா

தேவரும் ஐம்பொறித் துன்பம்ஒ ழிந்துயர்
மாதவ ருந்துதித் தன்புசெ யும்படி
சீர்மலி யுந்திருச் செந்தில்உ கந்தருள் — தம்பிரானே 63

---

62. மந்தரம் — ஒரு மலை, தோதகம் - வருத்தம் வங்கணம் — நேசம். தொந்தர் — உறவினர். கந்தரம் — கழுத்து. கம்பு அறல் — சங்கு கங்கை. உரகம் - பாம்பு. விந்தர் - யாதவர். காலிகள் - பசுக்கள்.

தானதன தந்த தந்த தந்த -- தந்ததான

கார்குழலில் வண்டு கிண்டு கின்ற
பூவையர்வ சம்பு குந்து மூன்று
காமனைவ ணங்கி நெஞ்ச யர்ந்த - பண்பினாலே
காசுபர மென்ற வஞ்சர் தங்கும்
வாசலில்ந டந்துன் அன்பர் தங்கள்
காதையைம றந்து வம்பி லிங்க - முந்தலாமோ

ஏர்குடிகொ ளுங்க டம்ப லர்ந்த
பாதமலர் என்சி ரம்பு னைந்துன்
ஈரிருபு யங்க ளின்க ணென்றும் - வென்றிவேலால்
ஏதமுமு துங்க ளைந்து பின்பும்
வேறுடல்பொ ருந்தும் வம்பொ ழிந்த
ஈடுறுசு கம்பொ லிந்த செஞ்சொல் - இன்றுதாராய்

ஓர்குருப ரன்பல் குன்றில் நின்று
நாடகமு யன்ற கந்தன் அன்றி
ஓதரிதெ னுந்தொ ழும்பர் பங்கில் - என்றும்வாழ்வாய்
ஊமையுரு வஞ்சு மந்து சங்க
நாவலவர் கொண்ட சண்டை குன்ற
ஊறுதவிர் தந்தி ரம்ப யின்ற - விந்தையானே

சீர்குலவு தெங்கி னஞ்செ றிந்த
சோலையிடை கண்டு யின்ற மந்தி
சேண்முகில்வ ருந்தி றந்தெ ரிந்தும் - அஞ்சுறாதே
தேன்விடுப ழங்க னிந்த பைந்தண்
வாழைமட லின்கண் ஒன்றல் கண்டு
தேவர்புகழ் செந்தில் வந்த மர்ந்த - தம்பிரானே 64

---

63. பானல் - கருங்குவளை. மயூரம் - மயில். சூதம்,- மாமரம். ஊமை உருத்திர சன்மர் என்ற முருகன் அவதாரம்.

தனாதன தந்தன தந்தன தந்த தானன – தந்ததானே

மலரடி தஞ்சமெ னுஞ்சொல்ப கர்ந்த வாவொடு
பரவிவ ணங்கிநெ ருங்கினும் வம்பில் ஊடல்செய்
மகளிர்த ருஞ்சுகம் நன்றென நம்பு வாரொடி -
ணங்கிடாதே
மகமுதிர் இந்திரன் அங்கசன் அம்பு ராசியில்
விழிதுயில் செங்கண்மு குந்தன்எ னும்பல் பாடல்கள்
மனிதரி னுங்கடை யென்றுழல் வம்பர் மீதுப-கர்ந்திடாதே
சலசமி ருந்தவி ரிஞ்சன்வ ரைந்த பாழ்விதி
வலியொடு பைங்கிளி யின்கண்வ ரும்பொ லான்விடு
சரமும்அ டங்கொள்ச மன்புனை தண்டும் வாதனை –
தந்திடாதே
தமநிய சுந்தரம் ஒன்றுசி கண்டி மீதிரு
வனிதையர் பங்கில்அ மர்ந்திட வென்றி வேல்கொடு
தனதன தந்தன வென்றுந டஞ்செய் தேஎன்முன் -
வந்துகாவாய்
பலபல மந்திர தந்திர விஞ்சை யாம்உயர்
பிரணவம் ஒன்றிம ணங்கமழ் செம்பொன் வாய்கொடு
பரணிலி ருந்தக ருங்குயில் தந்த மாவைய-ருந்துவோனே
பணிலம ணிந்தசை யுஞ்செவி கொண்ட நாயகர்
தரளவ டம்பொரும் வெண்பல்அ மைந்த கோமள
பகவதி யென்றும்அ மைந்தொளிர் பங்கு ளார்தர –
வந்தபாலா
திலகம ணிந்தகு ளங்குல வுந்து ரோபதி
தரையில்வி ழுந்துபு ரண்டழு முன்பு சேலைகள்
திரள்பட அன்றுத வும்பக் வன்ச கோதரி - அன்புளானே
திரைபொரு சிந்துவ ணங்கிய சந்த ஞசல
மகிமையி சைந்துயர் உம்பர்பு கழ்ந்து பேசிய
திருவொடி லங்கிய செந்திலில் என்று(ம்) மேவிய -
தம்பிரானே. 65

65. அம்புராசி – கடல். தமநியம் – பொன். சிகண்டி – மயில். தரளவடம் – முத்து வரிசை. குளம் – நெற்றி.

**தாந்தா தந்தத் தனதன தனதன — தந்ததாஞ**

வேம்பா குஞ்சொற் கயவர்கள் மனையில — லைந்திடாதே
வேண்டா நெஞ்சத் தரிவையர் மயலிடை - நொந்திடாதே
சாம்பா டொன்றித் தழல்நடு வுடலமெ - ரிந்திடாதே
தான்ரு னென்றெப் பொருள்களும் இலகவி - ளங்குவாயே
பாம்பார் தொந்திக் கரிமுக னுடன்வரு — தம்பியானுய்
பாஞ்சா லன்புத் திரியுணர் அருளினன் — விண்டசீலா
தேம்பா கொஞ்சத் தகுதமிழ் மயல்மிகை - கொண்டவேளே
சேந்தா செந்திற் பதியினின் மருவிய - தம்பிரானே. 66

**தந்ததனா தந்ததன தந்தனு தந்ததன — — தந்ததாஞ**

பொன்பணிய ணிந்தபிடி யென்றுலா வுங்கபட
மங்கையர்த ருங்கலவி யின்பம்நா டுஞ்சிறிய
புந்தியிடை நின்சரண முங்குலா வும்படிபு -
ரிந்திடாயோ
பொங்குகட லென்றகலை கொண்டபா ரின்கண்உள
மைந்தர்பலர் என்றனைநின் அன்பனே யென்றசொல்பு
கன்றிடுதல் கண்டுவைகை யின்கண்மூழ் கும்பெருமை -
தந்திலாயோ
மன்பதையு டன்பல்உயிர் நொந்துவா டுங்கொடுமை
என்றுதொலை யுந்தவமு திர்ந்துளார் தம்புடைவ
ருந்தினம்ள தென்றுனைநி னைந்துவா டுங்குணம -
றிந்திலாயோ
மங்களந டம்பயில்சி கண்டிமேல் வெண்களிறு
தந்தமக ளுங்குறவர் கொம்பும்ஆர் வங்கொடும
ருங்கிலுற மின்புரையும் வென்றிவேல் கொண்டெனது -
முன்புவாராய்.

67. மன்பதை மக்கள்

துன்பமிக உம்பர்கொள அன்றுசா டுந்தகுவர்
தம்பிணமி தந்துகட லுஞ்சிவீ ரென்றிடமெய்
துன்றியபெ ருந்தவர்ம கிழ்ந்துநேர் கும்பிடவி -
ளங்கும்வீரா
சுந்தரியு டன்குமரி யென்றபேர் கொண்டஇரு
பெண்கொடிக ளுந்தமது தந்தையா கின்றஅரி
சொன்றபடி முன்றவமு யன்றதால் வந்துபுணர் -
துங்கமார்பா
தென்பருவ தந்தனில்இ சைந்துவாழ் கும்பமுனி
தந்ததமிழ் கொண்டுதுதி விண்டுபே ணும்புனிதர்
சிந்தையில்நி னைந்தபடி என்றும்ஈ யும்பழமை -
துன்றுதோளா
செம்புநதி யுந்துபுனல் வந்துபா யும்பணையில்
வெண்பணில முங்கயலும் வந்துலா வும்பொருவில்
செந்தில்நக ரந்தனிபு ரந்துவா ழும்பெரிய - தம்பிரானே.
67

**தந்ததன தந்ததன தான - - தந்ததான**

வம்புரைபி தற்றுமத வாதர் தங்களைம தித்துவெகு வாக
மண்டலம திற்றமிய னேன்வ - ருந்தலாமோ
மன்றிடைந டித்தபெரு மானை நம்பிமது ரைப்பதியி லேமுன்
வந்தவனை ஒத்தகவு மாரன் - எங்குளானோ
பம்புகட லிற்கிளியும் நானும் உன்றனைம தித்துவிட லான
பைந்தமிழி னைத்தரின் அலால்உன் - வென்றிமேலோ
பண்டொருமு னிக்கெதிரென் வாயில் வந்தகவி
முற்றுமுன தாய
பண்பினைஉ ரைத்தமொழி தானும் - வம்புதாமோ
கம்புறுசெ வித்துணைகொள் ஆதி நம்பர்பர விப்பணியும்
நாள்சொல்
கண்டுரையி னைக்கிளியி னோடும் - விண்டவாயா

68 கம்பு - சங்கு. கஞ்சனை பிரமனை.

கஞ்சனைம லைக்குகையி னூடு வன்சிறையில் வைத்தளவில் பேத
தண்டனம்இ யற்றிவிளை யாடும் – விந்தையானே
செம்புனல்கு டித்தபல பேய்க ளுஞ்சொலிந டித்தபுகழ் கோடி
திண்புயம திற்குலவும் வீறு – கொண்டவேளே
சிந்தையில்நி னைத்தவரம் யாவும் அன்பரடை யத்தருவ தாய
செந்தில்நக ரிக்கதிப னை – தம்பிரானே. 68

### தனதந் தானன தானன – – தந்ததான

இதமொன் றுயினும் ஓதிலர் மனையின் பால்அலை வேன்மொழி
இனிதென் றுலும்நின் வார்செவி - கொண்டிடாதோ
எனையன் றேயரு ணைபுரி தனில்வந் தோனென ஓதினை
இறையுங் கூடமெய் வாழ்வருள் - கின்றிலாயே
சுதனென் றேயெனை நீஒரு தரம்வந் தோ திலை யோஅது
சுரரும் பேசிடு மாறுவி - ளங்கொணாதோ
சுபசிங் காரம னோகர மயிலின் றேகையில் வேல்கொடு
சுரதந் தோய்மட வாருடன் - என்றுநேர்வாய்
கதவெஞ் சூர்உரு வாகிய மரமுந் தானவ ரோடலை
கடலுந் தீயெழ மோதிய – வென்றிவீரா
கமடந் தான்நிலை பேரலின் அகிலங் கோவெனும் நாள்அடு
கரிபின் றேணிய தோழன்எ – னுங்குமாரா
புதனுந் தோல்விய தாம்இயல் உணருங் கீரன்முன் வாய்விடு
பொழுதங் கோர்முது பேயுயிர் – உண்டதீரா
புயலுந் தாருவும் ஓரிரு நிதியுந் தோய்நகர் வாழ்பவர்
புகழ்செந் தூரினில் மேவிய – தம்பிரானே 69

---

68. செம்புனல் – இரத்தம் 69 கத - கோபமுடைய கமடம் – ஆமை தாரு – கற்பக மரம். இருநிதி – சங்க நிதி பதும நிதி.

**தந்ததன தந்த தானன — — தந்ததான**

ஐந்துவத னங்கொள் ஈசனும் அங்கவன்அ ணைந்த மாதரும்
அம்பரம தன்க ணேவிழி — துஞ்சுமாலோ(டு)
அம்புயமி ருந்த பாவையும் அம்புவிம டந்தை தானும்நல்
அந்தணர்தொ ழும்பி ரானும்அ - வன்றன்நாலு(டு)
உந்துமறை விண்டு பாவலர் தங்களிட முஞ்ச தாநிதம்
ஒன்றிவளர் கின்ற வாணியும் — ஒண்பொனூர்வாழ்
உம்பர்பல ரும்பல் கோடிம தஞ்சொலவி ளங்கும் யாவரும்
உன்றன்உரு வன்றி வேறிலை — என்கைவீணே
கொந்துமலி தண்கு ராஅவர் திண்புயம ணிந்த வேலொடு
குன்றினம்அ டங்க ஏகிவ - ருங்குகேசா
குஞ்சரமு ழுங்கு சாரல்வ னந்தனிலி ருந்த மாதொடு
கொஞ்சிமகி ழுங்கு ழைலம்இ-சைந்தவேளே
சிந்துரஅ ணங்கின் வார்புனை கொங்கையில்ம யங்கு மாமயல்
சிந்தையுள டங்கு மாறுபு — ரந்தசோரா
செங்கயல்ம லிர்த சீர்வயல் பங்கயம லர்ந்த சீர்திகழ்
செந்தில்நக ரம்ப ராவிய — தம்பிரானே. 70

**தான தந்தன தத்த தானன — தந்ததான**

மாத வம்புரி தற்கு ளாவல்உ
ளாரில் இங்குந டிக்கும் வீணனை
மாதர் கொங்கைவ னப்பு நாடிம - யங்கலாலே
மாச டைந்தம னத்தி னேனைநின்
நாம மொன்றும்வ முத்தி டாதவர்
வாசல் கண்டும்இ ரக்கு மூடனை — உம்பர்நேர்சேர்
காதல் கொண்டும கத்தில் ஆடுகொல்
வார்சொ லுஞ்சொல் விருப்பு ளேனைவி
கார மிஞ்சும்உ டற்கொள் வேனையி — கழ்ந்திடாதே
காவி கண்டிவெ ளுத்த நீறணி
மேன்மை தந்தும னத்தி னூடுபல்
சார ணங்கள்உ ரைத்து ளாய்அவை — வம்புதானே

70. சோரா - கள்ளத்தனம் உடையவனே.

போத னஞ்சவு றுக்கி வார்கடல்
போல மும்படி குட்டி யேதனை
பூண வும்புரி பொற்பு மேயபு - யங்களானே
பூத லந்தனில் அற்றை நாள்இசை
நார ணன்செய்த வத்தி னல்வரு
போர்வி ரும்புத கர்க்க டாவிய - கந்தவேளே
சீத சந்திர னைத்த ணிருட
னேய ணிந்தச டைப்ப ராபரர்
தேவி கொங்கைய ளித்த பாலமு - துண்டவாயா
சேல்உ றுங்கழ னிக்குண் மாமது
ஓடை சென்றுவ ரப்பை யூறுசெய்
சீர்கொள் செந்தில்ந கர்க்குள் மேவிய - தம்பிரானே 71

தனன தந்தன தந்த தானன — தந்ததான

களப குங்கும மும்பொ னுடையும்
அணித ருங்கவின் ஒன்று பூரண
கலச மென்றெளி ரும்ப யோதர - மங்கைமாரே
கடவு ளென்றும லர்ந்த பூவணை
மிசையி ருந்தும கிழ்ந்து தோய்தரு
கலவி அந்தர ரும்பெ றுநலம் — என்றுவீணே
தளரும் வம்பரை நம்பி நாடொறும்
அலைத ருந்தொழி லின்றி மாதவர்
தமைவ ணங்கிய தொண்ட னுகிவி — ளங்குமாறே
தமிழை முன்தரு கும்ப மாமுனி
அனையர் சிந்தைய றிந்த தாகிய
சரண பங்கயம் ஒன்ற பேறுவ — ழங்கிஆள்வாய்
பளப ளென்றுது லங்கும் வேல்கொடு
சிறக றைந்தபெ ரும்புள் ஓலிடு
பருவ தம்புரை கின்ற தேரிலி — ருந்தவீரா
படர்த ருஞ்சடை நம்ப னுர்நுதல்
விழியில் வந்தபு லிங்க மாயொளிர்
பவள மொஞ்சுகு ழந்தை யாகிய — கந்தவேளே

72. சிறகறைந்த பெரும்புள் — சேவல்.

அளவி லன்பர்வி ரும்பு மாறெளி(து)
இகப ரந்தரு நண்ப னேமுதிர்
அருள்வி ளைந்தக டம்ப னேபல – குன்றுளானே
அருணை யம்பதி வந்த மாதவ
னிகர்தொ ழும்பர்வி யந்து பாடலின் ,
அதிவ ளம்புனை செந்தில் மேவிய - தம்பிரானே. 72

**தனான தான தந்த தனதன தனதன – – தந்ததான**

கபட நாட கஞ்செய் திடுமட மகளிர்சொல்
நிசமெ னுவி ரும்பி அணைமிசை அவர்தரு
கலவி யால்மெ லிந்து பலபல பிணியில – ழுந்திடாதே
ககன வாணர் தங்கள் உணவினும் உயர்கவி
பொழியும் வாய்ச மைந்த புலவர்கள் வரினும்ஓர்
கடுகு போலுமம்பொன் உதவிடும் நலமிலர்-பின்செலாதே
சபல மீறும் நெஞ்சம் உடையவன் எனஉல(கு)
இகழு மாற னந்த விதநடை முயலுறு
தவறு சூழ ஒன்று(ம்) முடிவில தலமரல் - மிஞ்சுறாதே
தனன தான தந்த தனதன வெனநடம்
இடும யூர மென்ற பரியினில் அயில்கொடு
சகள மாய வும்பர் அனைவரும் வளைதர - வந்துகாவாய்
சுபகு ணைல மொன்று குறுமுனி யிருசெவி
குளிர மூல பென்ற பிரணவ ரகசிய
துரிய ஞான விஞ்சை யருளிய பெருமை,க – மழ்ந்தவாயா
சுகியன் ஏல வுண்டை யவல்பொரி கடலையென்
அமுது தோசை சுண்டல் இடுபல பயறிவை
தொலைவி லாத ருந்து மழகளி றுடுதுணை – வந்தவேளே
உபய பாத பங்க யமும்அல தொருநிலை
சுருதி கூற லின்றென் நிசமுணர் தகையினர்
உரக பூட ணங்கொள் சிவனென மிளிர்வது-கண்டவேளே
உததி நீர்பொ தும்பர் முகில்பல பறவைகள்
முரசம் நீடு சந்த வரைதரும் அருவிசெய்
ஒலிய முத செந்தில் வளநகர் தொழவரு–தம்பிரானே. 73

73. உணவு - தேவாமுதம். உரகபூடணம் – பாம்பாபரணம்.

தந்த தந்தனத் தானன — — தந்ததான

சந்த முத்தமிழ்ப் பாடல்கள் விண்டு வக்குமெய்ப் பாவலர்
தங்கள் சொற்படிக் கேவல்பு – ரிந்திடாதே
சந்தை யிற்குழுப் போல்வரு பந்தி னத்தினுக் கா(ம்)மிகு
சஞ்ச லக்கடற் கூடுத - யங்கலாமோ
மந்த ரக்குவட் டோடுறழ் சுந்த ரத்தனப் பாவையர்
வங்க ணத்திலெய்ப் பாரும்இ – கழ்ந்துளாரே
வண்டு மொய்த்திசைத் தாடிய கொன்றை முத்தருக் காடிய
வண்பொ ருட்டெளித் தாரகம் – இன்றுகூறாய்
வெந்த ழற்குழிக் கூடெழு செந்த கர்ப்பரிச் சேவகன்
வெண்ட கைத்திறற் சேவல்இ – ருந்ததோளான்
விண்டு மெச்சிடப் போர்பொரு திண்டி றற்புயச் சேயென
விண்டி டச்சலிக் காரொடு – சென்றுமீள்வாய்
சிந்த னைக்கும்எட் டாநிலை நின்ற வத்தெனத் தேறுநர்
சிந்தை யிற்குள்உற் றேயும்இ – லங்கிடாதாய்
தெண்டி றற்புனற் சாகரம் நந்தி னைத்தொடுத் தேயெறி
செந்தி லுக்குரித் தாகிய – தம்பிரானே. 74

தனான தத்த தந்த தனான தத்த தந்த
தனான தத்த தந்த தனான தத்த தந்த
தனாதனான தத்தன தத்த தந்த
தனாதனான தத்தன தத்த தந்த — — — தந்ததான

அயிலை யொத்த கண்கள் தவள மொத்த வெண்பல்
அமுத மொத்த மென்சொல் முதலெ டுத்தி யம்பும்
அவைமுழுது முற்றசீர் பெற்ற திங்கள்
நிகர்சொலுமு கத்திலே கொச்சி மஞ்ச
ளினைய ரைத்தி சைந்த தயிலம் விட்ட ளைந்த
தனைமி கப்பு னைந்து புனல்வி டுத்த லம்பி
இசையுமொரு பொட்டுமே லிட்டு வந்து
தெருவிலொரு சற்றுமார் பைத்தி றந்தும்

74. பந்தினம் – உறவினர்கள். தழற்குழி – ஓமகுண்டம்.

அலைத லுற்ற னங்கன் மலரி னுக்கு டைந்த
இளைஞர் கிட்டல் கண்ட வுடன்ம றைத்தொ துங்கி
அவர்தமையி ழுத்துநா ணிச்சி னுங்கி
உயிர்வரைப றிக்கும்வே சைக்க ணங்கள் – பின்செலாதே

அறிவு சற்று மின்றி உடலை முற்றும் நம்பி
விதிவி லக்கொ ழிந்து பொருள்வ ளர்க்கும் வம்பர்
அணுவளவு மிட்டுண மற்ற னுந்தி
பெரிதெனவ ளர்க்கும்நா யொத்த வண்டர்
இயலி சைக்கு மன்றி நடன வித்தை யென்ற
இயல்பி னுக்கி சைந்த வளமை யுற்ற சிந்தொ
டெவணெவணி யற்றுபா டற்கும் வென்றி
பெறுமவர்பு கழ்ச்சிகூ றிற்பி ணங்கும்
அசடர் முற்று மிந்த வகையி கழ்ச்சி கொண்ட
அலர்க ளைத்தொ டர்ந்து நயமி கப்ப கர்ந்துன்
அருள்பெறுவி ருப்பிலா மற்றி ரிந்து
கெடுமதிப டைத்துளா ரொத்தி றந்து – வெந்திடாதே

சயில முற்று முன்றன் இடமெ னத்தி ரிந்து
பலவி தத்தொ ழும்பர் வளைத ரப்பு குந்து
தமிழ்கொடுது திந்துஞண் மைக்கி சைந்த
படிசெயல்வி ளைத்துலோ கத்தி லெங்கும்
உயிர்வ தைத்த ருந்தும் மடம றக்க ளைந்து
சமணர் முற்சொ லும்பல் சமய ரைக்க டிந்துள்
உவகையொடு சித்தகோ டிக்கு ளுஞ்சொல்
பெருமைகொடு சத்திவே லைச்சி கண்டி
தனைநி னைக்கு மன்ப ரனைவ ருக்கு மின்ப
மலித ரப்பு ரிந்து பிறவி யற்றொ ழிந்து
தகைமலிக டப்பமீ றப்பு னைந்த
திருவடிநி ழற்சூள்வாழ்க் கைக்கி ரங்கல் – கண்டிடாயோ

75. முரகரி - திருமால். இந்துகனல்அருக்கன் – சந்திரன் நெருப்பு சூரியன், கடுக்கை - கொன்றை. தொண்டன் – கவிராச பண்டிதர். பணி – காளிங்கனை பாம்பு. பொதுவன் நடுநிலையுடைய கண்ணன். மாவை – சூரனை மாமரத்தை வகுள மலர் - மகிழம்பூ பொலநகர் – பொன்னகர் (சுவர்க்கம்).

தமிய னிச்சை யொன்று கனவி னிற்றி னம்பல்
வடிவெ டுத்து வந்து மிகமி கச்சொ லுஞ்சொல்
சதியெனநி னைத்திலேன், நிச்ச யங்கள்
எனுமுறுதி பற்றினேன், மெய்த்த வஞ்செய்
உணர்வு சற்று மின்றி உளம னுக்க ளுன்றன்
நினைவு பித்த மிஞ்ச லெனஅ லைக்கு கின்ற
ஒருபொழுது சற்றுபே தித்தி சைந்து
மறுபடிது ணிச்சலா கிப்பொ யென்ற
சனியு னுக்கு மிந்த வலியி ருக்கு தென்றோர்
நகைந கைப்ப துண்டு, சருவ சித்து மொன்று
தருபவென முற்சொல்வே தத்தை நம்பில்
இதுவுமுன்வ ழக்கதே சற்றி ரங்கி – வந்து காவாய்

கயிலை வெற்ப சைந்து கிடுகி டுச்க வன்கை
இருப தைக்கொ டன்று தொடும்அ ரக்க னைந்து
கதறிடமி தித்தபா தத்தர், செங்கண்
முரகரிய ழைத்தபூ சைக்கி ரங்கி
உலக ளிக்கும் வென்றி மருவு சக்க ரஞ்செய்
தருள்க ரத்து நம்பர் புலியி னைச்சி றந்த
ஒருவரையெ னக்குலா வுற்ற தந்தி
யினையெளிது ரித்தவீ ரத்தர், இந்து
கனல்அ ருக்க னென்ற விழிப டைத்தி ருந்த
முதல்வர், வெற்ப ணங்கு புணர்பு யத்த லர்ந்து
கமழ்தருக டுக்கையார், முற்கு னிந்து
தொழஒருமு டிப்பையோ திப்புரந்த - விந்தையானே

கவிதொ டுத்த தொண்டன் ஒருவ னைத்தொ டர்ந்து
வழிந டப்ப தன்றி அமுத மைத்து மிஞ்சு
கருணையுட னிட்டுளாள், பச்சை மின்கொல்
எனுமெழில்ப டைத்ததாய், சத்தி, அம்பை,
உரகம் முற்றும் நன்கு பரவு மொற்றை யங்கை
விரலி னுக்க மைந்த பணியெ னப்பு னைந்த
உமைகவுரி, முத்தமா லைக்கி சைந்த
நகையினள், மு னைத்தகூ லத்தி விண்ட

கமல முற்றி ருந்த இருவ ருக்கு(ம்) மிஞ்சு
பெருமை பெற்ற நங்கை, கவுணி யக்கு ழந்தை
களியொடுகு டித்தபா லுற்ற கொங்கை
யுடையவளெ னச்சொல்வேல் வைத்து யர்ந்த-
செங்கையானே

மயிலி னுக்க மைந்த இறகி னைப்பு னைந்து
பணிமி தித்து நின்று நடமி யற்று கொண்டல்
வளையினையெ டுத்துவாய் வைத்த கங்கொள்
இகலவர்தி டுக்கமா கப்பு ரிந்த
பொதுவ னச்சு தன்றன் மிசையெ திர்த்த தந்தி
யினைநொ டிக்கு ளங்கை கொடுவ தைத்து வந்த
புனிதனொரு கொக்கின்வா யைப்பி ளந்து
சகடறவு தைத்துவா னத்தெ ழுந்த
மருதி னைப்பி ணங்க ளெனவி ழுத்த டிந்து
கனியி னுக்கோர் கன்றை எறித ரத்து ணிந்த
வயவன்முன்அ ழைத்தஆ னைக்கி ரங்கும்
முரகரிது திக்கமா வைப்பி ளந்த – துங்கவீரா

வரத முற்ற செங்கை அபய மொப்ப வந்தொர்
வகையு ணர்த்தி நெஞ்சம் மகிழ வைத்த கந்த!
வகுளமல ரிட்டதோ ளற்கு ளொஞ்ச
மிகுமெழில்ப டைத்தநீ பப்பு யங்கொள்
புலவ முக்க ணன்றன் மகவெ னப்பி றந்து
பொலந கர்க்கு ளும்பர் துயர றக்க ளைந்த
புரவலஅ ளப்பில்பா டற்ப கர்ந்த
கிளியினைவ ழுத்துவா ருக்கு மின்பம்
வரவ ழைக்கும் நண்ப மறம கட்கு மம்பொன்
வளந கர்க்கு ளன்று வளர்கொ டிக்கும் நெஞ்சம்
மகிழ்வுறஅ னைப்பவா ஒப்பில் செந்தில்
அதிபதியெ னச்சொல்வா ருட்க வின்ற -
தம்பிரானே. 75

தந்தாத்த தாத்த தய்ய – தந்ததானு

கண்டேய்க்கும் வார்த்தை சொல்லும் - வஞ்சமானுர்
கண்காட்ட வேட்கை கொள்ளும் - நெஞ்சராவார்
தொண்டேற்று நாட்டம் நல்கி - விஞ்சையாலே
தொந்தார்த்த மோட்சம் எய்த – வுஞ்செய்வாயோ
பண்தேக்கு பாக்கள் வெளவு – கந்தவேளே
பைங்காட்டு வாழ்க்கை வள்ளி - அன்புளானே
திண்தேர்க்கொள் போர்க்கு வல்ல - வென்றிவீரா
செந்தூர்க்கு வாய்த்த நல்ல – தம்பிரானே. 76

தந்த தத்ததன தந்த – – தந்ததானு

கஞ்சம் உற்றவனே, மின்கொள் கொண்ட லொப்பதனே, நஞ்சு
கண்ட மட்டமைய உண்டும் – வஞ்சமாய்லூர்
கங்கை வைத்தவனே, உந்து தென்றல் வெற்பினனே, மிஞ்சு
கண்ப டைத்தவனே,உம்பர் – கும்பலோடே
அஞ்ச லிட்டருள்பு ரிந்த நின்ச பைக்கருணை யின்கண்
அன்று தித்தவனும் வந்த – பண்பிஞலே
ஐம்பு லக்கொடுமை துன்றி – நொந்தி ளைத்தயரும் என்றன்
அன்பி னைக்கொளினும் வென்றி – குன்றுருதே
வெஞ்ச ரத்தவுணர் மங்க வன்ச மர்த்தொழில்பு ரிந்த
விந்தை யைப்புகலு மன்பர் – நெஞ்சில்வாழ்வாய்
வெண்பொ ருப்பனைய தந்தி தந்த வுத்தமிவ ருந்த
வெம்பு சொற்குறம டந்தை – கொங்கைதோய்வாய்
செஞ்ச மர்க்களநி ணங்கள் உண்டு கெக்கலிகொள் கின்ற
சிந்து டற்கழுது நம்பு – துங்கவேலா
செந்தி லுக்கிணைவி ளம்பில் அங்கி யிற்சினவு தொண்டர்
சிந்தை யிற்குடியி ருந்த – தம்பிரானே. 77

76. பண்தேக்கு – இசைமிகுந்தது. 67. கழுது - பேய்க்கூட்டம்.

**தனன தந்ததன தனதன தனதன -- தந்ததான**

உனைம றந்துலகில் உளமனை பொருள்சதம்
எனநி னைந்துமகிழ் வுறுபல கயவர்தம்
உறவு கொண்டவர்கள் பிறகலை வுறுமட - மிஞ்சுருதே
உததி யுண்டுமறு படிவிட வலகுறு
முனிபு ரிந்ததவ மகிமைய தெனமிக
ஒளிர்த ருந்தமிழின் உயர்வுணர் கிலரெதிர் - அஞ்சுருதே
பனைவ ளைந்தனைய கரமத களிறுறழ்
புலவர் தம்புடையில் அரியென உலவிய
பழைய தொண்டர்பெறும் வலிமைகொ டடிமைவி-
ளங்கவேநீ
பசிய பொன்புரையும் எழின்மயில் முதுகினில்
இரும டந்தையர்கள் அருகுற அயில்கொடு
பரிதி அம்பரம தனில்வர லெனவரல் - என்றுகூருய்
தினையி ளங்கதிர்கள் கவர்தரு கிளியினம்
ஒருவி டுங்கவணை(டு) ஒருபரண் மிசையுறு
சிறுமி யின்சிமிழை நிகர்துணை முலைவரு - டுங்கையானே
திசைய டங்கவழி படஅமர் பொரும்ஒரு
குமரி கண்டுதலை குனிதர எதிர்வரு
செழியன் மைந்தனென வடமலை அலறமு - னிந்தவீரா
இளைய தென்றெவரும் அறிவரு பிரணவ
ரகசி யம்பகர்சண் முககுரு பரனென
இளிதி றைஞ்சுமவர் பகைமுழு தழியஅ - டுங்குணலா
எழில்ம லிந்தபொல நகரியின் அமரர்கள்
துயர்க ளைந்தசுரர் குலமற முனிதலின்
இணையில் செந்தில்வள நகரிடை வதிதரு - தம்பிரானே.
78

**தனன தந்ததன தந்தன தானன -- தந்ததான**

அறிவ றிந்தமக வென்றுள பேறடை
பவர்பெ ரும்புடையில் என்றனை யினிய
அவர்க ளும்புகவி டும்படி நீநினை - கின்றிலரயோ

அநுதி னந்தவள மிஞ்சிய நீறரன்
விழியு மிழ்ந்தமணி கொண்டுசெய் தாழ்வடம்
அழல்நி றங்கொள்கலை துன்றினர் கூடுவ-தெந்தநாளோ
பறிப டுந்தலையு றுஞ்சம ணாதியர்
கொடுமை நன்றெனநி னைந்திடு தீமைகள்
பலசெ யுஞ்சிதடர் தம்பெரு வாழ்வுகு - லைந்திடாதோ
பருவ தந்தொறும்ந டந்திடு தாள்மலர்
அலது கும்பிடவி ரும்புகி லாரது
பணிபு ரிந்தழிவ ரும்புகழ் கோடிபு - னைந்திடேனோ
மறிய ணிந்தகர நம்பர்,ச தாசிவ
சகள புங்கவர்,பு ரம்பொடி யாகிட
மகிழ்தி கம்பரர்,தொ ழும்பொழு தோர்பொருள் -
விண்டவாயா
வனச புங்கவன்அ ழும்படி மோதியும்
இருப தங்களில்வி லங்கிடும் ஆண்மையை
மலைதொ றுஞ்சொலிவ ணங்குநர் ஏவல்செ - யுங்குமாரா
வெறிமி குந்தளவில் வண்டிசை பாடிய
குரவ முங்குவளை யும்பனி நீபமும்
வியனு றுந்தமிழும் ஒன்றிய தோள்நிரை-கொண்டவேளே
விகட தந்தியுடன் வந்தவ னேவிரி
ககன மங்கையர்தொ ழுங்குக னேஅருள்
விரவும் வென்றிதரு செந்திலின் மேவிய - தம்பிரானே. 79

தனனந் தனதன - - தந்ததானா

களபங் கமழ்முலை மடமங் கையர்புரி
கபடங் கருதிமெ - லிந்திடாதே
கருனன் பொருகொடை யினரென் றொருசிறு
கடுகுந் தருகிலர் - முன்செலாதே
அளவின் றியகவி பொழியும் புலவர்தம்
அவையின் பெருமைம - றந்திடாதே
அகவும் பசுநிற மயிலின் புறமதில்
அயில்கொண் டெனகுமுன் - வந்திடாயே

சுளகென் றெளிர்இரு செவிகொண் டவனது
துணையென் றிடினு(ம்)ம - கிழ்ந்துளானே
சுரருங் குறவரும் உதவுஞ் சிறுமியர்
சுரதம் பெருகிய – கந்தவேளே
வளமொன் றியபல பலகுன் றினும்நிதம்
மருவும் பெருமைக - மழ்ந்தபாதா
வயிரம் புனைமக பதியும் புலவரும்
வருசெந் திலில்வளர் – தம்பிரானே. 80

**தந்தனத் தந்த தானன – – தந்ததான**

கொம்புடைக் குன்றம் நேர்முலை
மங்கையர்க் கென்றும் ஏவல்செய்
குண்டரைக் கண்டு பேசிய – லைந்திடாதே
கொன்றுடற் கொண்டு கூறுசெய்(து)
உண்டுவக் கும்பொ லார்நெறி
குன்றுறக் கொண்ட ஞாயம - றந்திடாதே
பைம்புனற் கங்கை மாதுறை
செஞ்சடைத் தந்தை யாரொடு
பண்டுரைக் கின்ற வாசகம் – ஒன்றினாலே
பங்கயத் தின்கண் வாழ்பிர
மன்கையெட் டுந்த ராவரு
பந்தமற் றுன்ற னோடுக – லந்துயேனோ
தம்புகழ்ப் பொங்க மேலென
வம்பிழைக் கும்பல் பாவலர்
சங்கமுற் றன்றொ ராடல்பு – ரிந்தசேயே
சண்டையிட் டுந்து சூர்இரு
துண்டுபட் டும்ப ரார்அயில்
சஞ்சலந் துன்ப மாறமு – யன்றவீரா

80. சுளகு-முகம். 81. கஞ்சன் ஊர்-பிரமன் பதியான சத்தியலோகம். மாமன் - அம்மான் (வள்ளித்தாயுடன் பிறந்த பிரமன் மாமன் என்ற முறை) 82. வேள்வி நட்பன் - மகபதி (இந்திரன்)

தெம்புமிக் கொன்று(ம்) மாமனை
னுந்திறற் கஞ்சன் ஊர்வரை
சென்றழிக் கின்ற நாரணன் – விண்டசிலா
தென்றல்வெற் பின்கண் வாழ்முனி
வன்றவப் பண்பு போல்வளர்
செந்தமிழ்ச் செந்தின் மேவிய – தம்பிரானே. 81

தானதத்தந் தானதத்த – – தந்தநாறு

காமனுக்கும் பூவிடத்து வேதனுக்கும் கோபமுற்று
காலனுக்குந் தாழவிட்டி – ருந்திடாதே
காதகச்சண் டாளஅற்பர் வாழ்மனைக்கும் போய்இனித்த
காதைநித்தம் பேசிமெச்சல் – கண்டிடாதே
தாமமைக்கும் பாடலுக்கும் மால்கொள்பொற்(பு)ஒன்
றீடில்வித்தை
சார்தவத்தன் போர்நகைக்க - வுஞ்செயாதே
தாகமிக்குண் டாகஅற்றை நாளுரைக்கும் பான்மையிற்செய்
தாமதப்புண் பாடொழித்து - முன்புவாராய்
வேமழற்கண் தோயும்நெற்றி யார்கலக்குங் கோதையைக்கை
வேலெனக்கொண் டாடும்வெற்றி - துன்றுதோளா
மேருவைச்செண் டாலடித்து வாரியைப்பொங் காதடக்கி
வேள்விநட்பன் போய்ஒளிக்க – வென்றவீரா
கோமளச்சிங் காரமுற்ற வேடுவப்பெண் காதல்மொய்த்த
கூதளத்தண் தார்எடுத்த – ணிந்தமார்பா
கூவொலிச்செஞ் சேவல்வைத்த கேதனத்திண் தேரைஒத்த
கோபுரச்செந் தூர்படைத்த – தம்பிரானே. 82

தனனந் தானன தனத்த தானன – – தந்ததாறு

பிறழுஞ் சேல்பொரும் விழிச்சி மார்இள
நகையுந் தோய்தர உரைக்கும் வாய்மொழி
பெருகுங் காதலில் விடுக்க வாடிமெ - லிந்ததோடே

83. பிரசம் – தேன். மூவிருபொறி – ஆறெழுத்து, அயத்ததோ – மறந்து விட்டதா. மணந்த - சம்பந்தர் செய்த மணம்.

பிரசந் தோய்மலர் குவித்து மூவிரு
பொறியுங் கூறிநின் வனப்பை நாடுதல்
பிழையென் றுயினும் வெறுத்த நாளில்இ - கழ்ந்திலாயே
உறவன் றுனென நினைக்கு மாறெணில்
கனவின் பால்வெகு விதத்தில் ஆயிரம்
உரைவிண் டாய்அவண் நடத்தி டாதும - றைந்ததேனு
உலகந் தானும்நின் அடிக்கண் மால்கொடு
திரிகின் றேன்என உரைக்கும் வீறுமுன்
உதவும் பான்மையும் அயத்த தோநெறி - ஒன்றுதாராய்
துறவின் சீரியர் தமக்கும் வேடம
தெனில்வம் பேபுனை பவர்க்கும் ஏய்வல
தொடர்கின் றுரேவ ரெவர்க்கும் வீடுபொ - ருந்துமாறே
துறைவண் காவிரி வளர்த்த நாடதில்
இலகுங் காழியி னிடத்தி லேயொரு
சுரிமென் றுழ்குழல் வனப்பி னுளேம - ணந்தபாலா
மறமிஞ் சாணவ அழுக்கி னுல்எதிர்
இகலுஞ் சாரணர் தமைக்கொல் பாவல
மலைமின் பாலினர் நுதற்க ணூடுபி - றந்தவாழ்வே
மயிலுஞ் சேவலும் வளர்க்கும் வேடுவன்
எனுமன் போர்களும் மகிழ்ச்சி கூரருள்
மலிசெந் தூரினில் வசிக்கு மேலவர் - தம்பிரானே. 83

தந்னைத் தனந்த தந்த - - தந்ததான

சந்தனக் குழம்ப ணிந்த கொங்கையைத் திறந்து வந்து
சண்டனிற் கொலுங்கு ணங்கொள் - கண்களாலே
சஞ்சலத் தழுங்கல் கண்டு பொன்பறித் தணைந்த ணைந்து
சண்டையிட் டிகழ்த்தொ துங்கும் - வஞ்சமானுர்
தந்தமர்க் கொர்அன்ப னென்ற லைந்திடத் துணிந்த வண்டர்
தஞ்சநட் பரென் றிசைந்து - முன்றிடாதே
தண்டைபொற் சிலம்ப ணிந்த பங்கயப் பதம்பு னைந்து
தந்திரத் தைவென்ற மந்தி - ரந்தராயே

83 ஏய்வல - பொருந்தாத

சுந்தரக் கடம்ப லர்ந்த,திண்புயத் தைநம்பும் அன்பர்
துன்பனைத் தை யுங்க ளைந்தி - டுங்குமாரா
தொந்தமுற் றுவன்கு ரங்கி,னங்தொழத் திகழ்ந்த கொண்டல்
சொன்றிடத் தகும்பெ ருந்தி – றங்கொள்வானே
செந்தமிழ்ச் சுகம்ப கர்ந்த, சந்தம்நத் திடுந்தொ ழும்பர்
சிந்தையிற் றினம்பி றங்கும் - விந்தையானே
தெண்டிரைக் கணங்கள் வந்து சங்கைவிட் டெறிந்திரைந்த
செந்திலிற் சிறந்த தொண்டர் - தம்பிரானே. 84

தந்ததன தானா தனத் – – தந்ததானா

எண்கணுடைப் போதா விதிக்
கின்றவினைப் பேயால் இளைத்(து)
இங்கயர்வுற் றேன்நீ யிதைக் - கண்டிலாயோ
என்கனவிற் றானே யுதித்
தும்பலசெப் பாயா கில்எற்(கு)
இந்தவிதப் பேரா சைமுற் – றுங்கொல்கூறாய்
தண்கமலப் பூமேல் வசிக்
குந்திருவொப் பார்பாழ் மயற்
சஞ்சலம்விட் டால்மா தவப் – பண்புறேனோ
சந்தமொழிச் சீர்தோய் தமிழ்ப்
பைங்கிளியைப் போல்வாழ் புகழ்த்
தந்தருளற் கோர்வே ளைசற் - றிங்குவாராய்
ஒண்கயிலைக் கோமான் அரக்
கன்கதறத் தாளால் அடக்
கும்பரன்,முற் கோவால் அளிக் – குங்குமாரா
உம்பரழப் பேய்போல் அதட்
டுந்தகுவர்க் கோர்காலன் ஒத்(து)
உந்துமெழிற் றேரே றிமுற் – சென்றவீரா

85. அரக்கன் – இராவணன், கோவால் – கண்களால்.

திண்கரவெற் பாலோர் குறப்
பெண்கதறித் தோள்சேர் தலிற்
சிந்தையுவப் போனே திறற் – றுங்கவேலா

செம்புநதிக் காலால் வளப்
பம்பொலிபொற் பார்சீ தளச்
செந்தில்நகர்க் கோலாகலத் – தம்பிரானே. 85

**தனதன தத்த தந்தன தானத்த தந்தன – தந்ததான**

அரியவி டத்தை உண்டருள் ஈசற்கும், இன்றமிழ்
உதவுபொ ருப்பில் வந்தமர் வானுக்கும், வண்புகழ்
அருணை நகர்ப்பெ ரும்புல வோனுக்கும் அன்றுமொ –
ழிந்ததாம்ஓர்

அதிசய முற்ற மந்திர மூலத்தை யென்சிறு
செவிகளி டத்தி னுஞ்சொலி நீவைத்த வெண்பொடி
யதையுமெ டுத்த ணிந்தடி யாருட்பு கும்படி -
கண்டிடாயேல்

விரியும லர்ச்சொ ரிந்தெதிர் வேளுக்கும் எண்கரம்
உடையவி திக்கும், அங்கியை யேயொத் தெழுஞ்சடை
மிளிர்தர வெற்பில் வந்தடர் காலற்கும், இங்கினி –
என்செய்வேன்நான்

விரைகமழ் பச்சி ளம்பொழில் சூழ்பொற் பமைந்துயர்
திருமலை உச்சி யின்கண்அ நாளுற் றுருண்டிடில்
வெருகழு குக்கு டம்புத வாமற் புரந்தது – மங்கலாமோ

சரியணி கைத்தி கம்பரி நீலச்சி கண்டியை
அனையநி றத்தி அம்பிகை ஞானச் செழுங்கனி
தருகரு ணைப்ப சுங்கிளி நேர்சொற் சொலுஞ்சிவை –
தந்தபாலா

சரவண மிக்க டர்ந்துள வாவிக்குள் உம்பரும்
அரனும்இ ழைத்தி டுந்தவ மீறற் றெரிந்தொரு
சலசம திற்கி டந்திரு கால்இட் டுதைந்தழும்-
விந்தையானே

86. சரி – வளையல், வெற்பில் - மலைஒத்த உருவுடன்,

பரிபுர மிக்க லம்பம காசித்தர் கண்டுளம்
மகிழும லைக்க ணந்தொறும் ஆடிப்பு கழ்ந்தவர்
பவமொழி யச்செய் கின்றவி ஞேதத்தை நம்புநர் –
சிந்தையானே
பகையசு ரக்கு லங்கெட வேல்விட்ட திண்புய
நிரையிணை ஒத்த சந்தன மால்வெற் பிசைந்(து)அகல்
பரவைய டுத்த செந்திலே நேசிக்கும் அன்பர்கள் –
தம்பிரானே. 86

**தய்யானத் தந்தன தன்னன – தந்ததான**

மெய்வேதத் தன்பர்கள் தம்மையும் - நிந்தியாதே
வில்வேளுக் கஞ்சிய புன்மைபொ – ருந்திடாதே
எவ்வேளைக் கெங்கெவண் எண்ணினும் – அந்தவாறே
எய்தார்வப் பண்புற நின்னருள் - தந்திடாயே
கைவேழத் தின்றுணை யென்னவ – ருங்குகேசா
கல்லாலிற் புங்கவர் நண்ணிய – கந்தவேளே
செவ்வேல்வைக் குங்கிரி யன்னபு - யங்கொள்வானே
தெய்வீகச் செந்திலில் மன்னிய – தம்பிரானே 87

**தந்தனத் தானன தந்த – தந்ததான**

கண்டினைப் போல்உரை விண்டு
வந்தடுத் தாசைபொ ருந்தல்
கண்டுசற் றூடியி ணங்கு - கின்றமாதர்
கண்கொள்வெற் பாமிரு கொங்கை
யின்கண்எப் போதும்இ ருந்து
கன்றுமிப் பாதக நெஞ்சம் - உய்ந்திடாதோ
எண்டிசைப் பாலும்வி ரிந்த
பைந்தகைத் தோகையி சைந்த
இன்குரற் கார்மயிலின்கண் - வந்துமேனுள்

86. மலை போன்ற தோள் என்பதை, தோள் போன்றது சந்தன மலை என்று கூறியதறிக. பரிபுரம் - சிலம்பு, புயநிரை - தோள்வரிசை.

எண்கணற் சிறி,வி லங்கு
டன்குகைக் கூடழ வுஞ்செய்(து)
இண்டைநட் பாருடன் விண்ட - ஒன்றை ஓதாய்
தண்டிகைக் காவலன் என்று
வந்துமுக் காலுமொ ழிந்த
தண்டமிழ்ச் சீருரை நம்பல் - கண்டுளானே
சங்கடத் தால்அழு தன்று
கெஞ்சும்நற் கீரனொ டங்கு
தங்கும்நட் போரையும் முன்பு – ரந்த வேலா
திண்டிறற் சேவல்வ ரைந்த
மென்றுகிற் கேதனம் ஒன்று
செங்கரத் தானென நம்பி - னுந்தளானே
தெண்டிரைச் சாகரம் வந்து
வந்திளைக் காதுவ ணங்கு
செந்திலிற் சூரனை வென்ற – தம்பிரானே, 88

**தந்தனத் தனதன — தந்ததான**

புன்பவப் பிணியுள – தென்றும் உட் கருதிலர்
புண்படப் பொருதல்வி – ழைந்திலேனோ
புந்தியொத் துயர்திறல் – ஒன்றுமெய்ப் புலவர்கள்
பொன்கலிக் கிறுதிபு – ரிந்திடேனோ
என்பதைத் திருமகள் – என்றுருக் கொளநுவல்
இன்சொல் முத் தமிழ்விர - கன்கொல், வேறோ
என்றுபற் பலர்சொல - நின்கலைத் தொகுதியில்
என்றனக் கொருசிறி(து) – இன்று தாராய்
மன்பதைக் கிடைபல - இந்திரக் கடவுளர்
வந்துபத் திகள்செய - நின்ற தேவா
வண்டமிழ்க் கடலருள் – கும்பனுக் களவறு
மந்திரத் துயிரைமொ – ழிந்தவாயா

---

88. தண்டிகை - பல்லக்கு. தன் அநுபவம் ஒன்றின் கருத்து. கலைத் தொகுதியில் என்றதனால், முருகன் கலாமிசமாக, ஞானசம்பந்தர் தோன்றினாரேயன்றி. முருகனே பிறந்தானென்பதல்ல என்று விளக்கினார்.

89. என்பதை - என்பு அதை, எலும்பை (பூம்பாவையை)

தென்பகைக் கலமரு – மைந்தனுக் கருள்புரி
செம்பதத் தினர் பெற – வந்தபாலா
தென்றலிற் கனியுதிர் – பைம்பொழிற் றிரள்உயர்
செந்திலுக் கிசைவுறு – தம்பிரானே. 89

**தந்தன தத்தந் தனதனனத் – தந்ததான**

கும்பமு னிக்கன் றருள்புரிதற்
கண்டுனை மெச்சும் புலர்மகிழக்
குன்றம னைத்துந் திரிதரலைச் – சொன்றிலேனோ
கொன்றிரை யுட்கொண் டிடுமடமைப்
பண்புற வெட்கம் பயமிலர்முற்
கொஞ்சுத மிழ்த்தண் கவிபகர்தற் (கு) - ஒஞ்சிலேனோ
பம்பர மொக்குந் துணைமுலையைக்
கொண்டும யக்குஞ் சிறுமியர்பொய்ப்
பந்தமி குக்குஞ் சிலருடனுற் - றஞ்சலாமோ
பைம்பொன்ம ணிக்குன் றுறழ்மயிலிற்
செங்கதி ரொக்குங் கவினிலகப்
பங்கிலி ருக்கின் றவரொடுசற் . றின்றுவாராய்
சம்பர னைக்கொன் றுயர் மதனப்
புங்கவ லைக்கண் கொடு கொலும்அச்
சங்கர னுக்கும் பிரணவஅர்த் - தஞ்சொல்வோனே
சந்திர வட்டம் பொரும் வதனத்(து)
அம்பிகை மிக்கின் புறமடுவிற்
றண்கம லத்தின் செழுமலரிற் - றுஞ்சுவானே
செம்பது மத்தன் பெரிதலறிக்
குஞ்சியு டைப்பொன் றலைகவிழச்
சிந்தையி னிற்கொஞ் சமுன் முனிவைக் - கொண்டசேயே
திங்கள னைத்துந் திருவிழவுற்(று)
உம்பர்வ ழுத்தும் புகழ்பெறுநற்
செந்தில்ந கர்ச்சுந் தரமுருகத் - தம்பிரானே 90

89. தென்பகை - எமன், மைந்தன் - மார்க்கண்டர்
90. குஞ்சி - குடுமி.

தனா தானதன — தந்ததான

அருகா தியர்பரம் - எனவோ திடும்நெறி
அடியோ டறநின்மு - கங்களாலே
அருளோ டவிர்தரும் - இருமூ விதநெறி
அழியா துயரவி - ரும்பிலேனே
ஒருகா லமு மயில் — மிசைவே லுடன் என(து)
உளமா மலரினும் — வந்திலாயே
உன(து)ஆள் எனுமொழி - பிழையா மெனில் மிக
உலகோ திடும்விதம் — என்கொல் கூறாய்
முருகா அரனருள் — புதல்வா உமையவள்
முலையூ றியஅமு — தங்கொள்வானே
முடைநா றியவண - சரமான் உறுபரண்
முனமோர் கிழமுனி — என்று போனாய்
பொருகால் வலியுறு — குருகே றிய கொடி
புனைசீர் குலவுபு — யங்களானே
புகழால் இணைதவிர் — அலைவாய் நகரிடை
புலவோர் தொழவரு - தம்பிரானே.

தனனதந்த தனனதான — தந்ததான

அறமுயன்றுன் அருளை நாடும்-மகிமைகொண்ட தவமுளார்கள்
அடி பணிந்து குடியிரார் இ — டஞ்செலாதே
அழகிருந்த கமலமான - முகமிலங்க வருமினார்கள்
அரசன் அங்கை மலரினல் மெ—லிந்திடாதே
இறகணிந்த பெருமையால் முன்-ஒருமுகுந்தன், இகலுவார்கள்
இரியவென்று மகிழுமாறு — கண்ட சீரோ(டு)
எழிலிலங்கு மயிலின் மீது - குலவி நின்று கமழ்பனீரின்
இலை பொதிந்த தவள நீறு — தந்துகாவாய்

90. குருகு சேவல், கால்நகத்தால் போரிட வல்லதாகும்.

குறமடந்தை மருவுமேனல் - அதில் முதிர்ந்த கிழவனுன
குமரனென்று பரவுவார்கள் - சிந்தையானே
கொடுமை மிஞ்சு சமணமூடர் – பொதுவில் விண்ட பெரியவாது
குலையவென்று வழுதியூர்பு - ரந்தபாலா
முறம்விரிந்த செவிகொள்ஆனை - யொடுபிறந்த முருகனேஎன்
முரணறிந்து முனிவிலாத - விந்தையானே
முகுள கஞ்ச மலியும்வாவி - இலகுசெந்தில் நகரின்மேவி
முழுதுணர்ந்த புலவனுன – தம்பிரானே 92

தனத்தானன தானன – தந்தானா

வினைப்போ கமதால்வரும் – உடற்கே யிரைதேடிநின்
விறற்கூ றியபாடல்உ-ணர்ந்திடாதே
விதுப்போ லொளிர்மாமுகம்-உடைப்பே தையர்மாயையில்
விழற்கே யெனை நீவிடல் - என்சொல் கூறாய்
தனைத்தான் உணர் மேலவர் – புகழ்க்(கு) ஆ வல்கொளாதவர்
தமைப்போல் இறவாமுன்இ - ரங்கியாள்வாய்
தனித்தோர் கனவூடொரு – விதத்தா டிய பேரருள்
சழக்காய் விடுமோவென – அஞ்சலாமோ
தினைக்கா னிடை வாழ்ஒரு-குறப்பா வைமுனேகிய
திருத்தாள் மறவாதவர் – பங்கில் வாழ்வாய்
திருக்கா கிய கோடுறு–தகர்க்கா னுறுமாதவர்
திகைத்தோ லிடஏறிம – கிழ்ந்த வீரா
முனைக்கூர் நெடுவேலினை – எடுத்தேஒரு மாவினை
முறித்(து) ஏதமில் வாகைபு – னைந்ததாலே
முதற்சீ லம் நிலாவிய - திருச்சீ ரலை வாயிடை
முழுச்சே வகனாகிய – தம்பிரானே. 93

தானதனந் தானன தானன – தந்ததான

காரணமுங் காரிய மானதும் - நாடியறிந் தோர்சபை யூடொரு
காலமுமொன் றேன்,மட மாதர்கள் - விண்டவாறே
காசினியின் பால்முயல் வேன்முழு - மூடர்கள்பின் போய் அவர் தேடிய
காசைவிழைந் தாய்குவன், வேணவி-தங்களாயே

ஆரணமுன் பாகிய நூலினம் – ஓதிடவுங் காமிய வேள்வியில்
ஆடுகொலும் பாதக ரோடும்இ, ணங்குதீயேன்
ஆகிலும்நின் ருள்பணி வாரென - வேடமணிந் தேன்அத
ஞலெனை
ஆளநினைந் (து)ஓர்தரம் வேலோடு - முன்புவாராய்
நாரணனன்(று) ஆழியை யேவவும் - ஆனைமுகன் தோளணி
யாகிய
ஞாயமறிந் தோரணு வேணும்(ம) - லைந்திடாதே
நாகமுடன் சீயம தோடலை – வாரியுடன் சூரெனு மாவுடன்
நாசமுறும் போர்புரி வீரம்இ - சைந்தவேளே
வாரணம் நின்றேலிடு கேதனம்-நீடியசந் தாசலம் நாடொறும்
வாழியெனும் பேரறி வாண்மைத - ருங்குகேசா
வானவரும் பூரண யோகுணர்-மாதவரும் பேணிய சீர்கொடு
மாசறுசெந் தூரினில் வாழ்பவர் – தம்பிரானே 94

அதிவித விகசித அபிநய மொழிகளில்
மயில்குயில் கிளிஅமு தனையவை யுடையவர்
அலைகட லுண்டுவிண் மேல்வரு கார்முகில்
புரையும்நி றங்கொடு நீடிய கோதையர்.
அம்பரம் அயில்கணை வகிரும்வ டுத்துணை
அந்தகன் விடம்அமு தனையவி ழிச்சியர்,
அற்புத தந்திர கோகிலம் எனுமொரு
நட்புவி ளங்குவ தாமுக மதியினர்,
அணுகிச் சருவிப் பலபொய்த் தொழில் கொடு
பொருளைக் கவர்தற் கிதமிக் குணர்பவர்,
ஆடுமாடென முறைகள்த விர்த்தநு
போகலீ லையில் முயலும் இடக்கினர்,
அந்தரர் அஞ்சும் பண்பொன் றுந்தவ
புங்கவர் கெஞ்சுந் தெம்புங் கொண்டவர்,

94. ஆனைமுகன் – தாருகன், நாகமுடன் - கிரவுஞ்சமென்ற மலையோடு சீயம் - சிங்கமுகன், வாரணம் – சேவல்.

95. அம்பரம் - கடல் வகிரும்வடு – பிளந்தமாவடு.

அறிவைம யக்குவ தாங்க(ள்) ளொடுபுகை
தருபுனல் பற்பல ஊன்கொ டுணுமவர்,
அத்தத் தைக்கைக் குட்கொட் டித்தரு
முற்செட் டிக்கொத் துச்சொற் செப்புநர்,
அங்கண மொத்துள நாற்ற மொடுபல
புண்சொரி மொய்த்துள பாழ்த்த உடலினர்,
ஆண்வே ழம்பெறு கொம்புகொல்? இருமலே
தாஞே என்றுவி ளங்கிடு முலேயினர்,
அத்தையின் மகளினே ஒத்தே சற்றும்உள்
வெட்கமி லதுதழு விக்கூ டத்தகும்
அன்பார் வத்தினர், எனநா டகமிடு
சண்டா ளக்கணி கையர்மா மயலிடை
அண்ணிய கொடுமையி ஞல்உன தடியவர்
தம்மவை நடுஅணு நேரமு மருவில(து)
அந்தத் தெமன்எனும் வெய்யன்வி டுத்திடும்
வன்கட் கொடியவர் கைவசம் உற்றபின்
அருநர கிற்சந் தேகமி லாவணம்
விழுமவ ரைக்கண்(டு) ஆசிகள் கூறிமெ - லிந்திடாதே

அரையிடை அணிதரு கலேயொரு சிறிதுமி
லதுகுடை திரிவிதம் இயைதர அலர்மிசை
அணிதிகழ் பைந்தண்அ சோகடி மேவிய
கடவுளும் உண்டென வாதுசெய் சாரணர்,
அம்புய மலரினன் முரகரி ருத்திரன்
என்பவர் வதிதரு மரநிழ லிற்பிணம்
அத்தனே யுந்தின லாமெனும் விதிபகர்
புத்தன்உ ளன்,பர மாயவன் அவனென
[1]அனேயைக் கொலவுற் பவமுற் றிடுசிலர்
பகர்சொற் கருதிக் கெடுபொய்ப் பிடகர்கள்,

1. பவுத்த குருவாக வருபவர் பிறத்தல் கூடாதென்ற குறிக்கோளுடன் கருவுற்றுள்ள சிசு பிறக்க நேரும்போது தாயின் வயிற்றைக் கீறி யெடுத்துச் சிசுவை வளர்த்து. பின் குருவாயேற்பரென்பது கருத்து. ''தாயுயிர்க்கு எமனும் தன்மைப் பவுத்தர்" என வேறோரிடத்தும் இவா கூறுகிருர், இம்முறையினுல் தாயின் இறப்பைக் கருதுவதில்லே. பௌத்தரியல்பு.

ஆசி லாதது கரும மதிற்கொலை
வேள்வி யேஉயர் வெனுமுயல் அற்பர்கள்,
அம்பர மெங்கெங் குந்துன் றுபல
பண்டமு மிஞ்சும் பொங்கந் தங்கிய
அணுவின மொய்த்தலின் ஆர்ந்த தெனலுடன்
எதிர்மறை கற்றிறு மாந்த நடையினர்,
[1]அத்தத் தைச்சுற் றத்தைச் சர்க்கரை
ஒத்துத் தித்திக் கச்சொற் சொற்றிடும்
[2]அங்கனை யைச்சிறு சேற்றில் அளைதரு
மைந்தர்களைப்பெறும் வாழ்க்கை அறமிகும்
ஆபா சந்தரு புன்பிணி கலிநிகர்
தாழ்வூ டொன்றுதல் முன்புரி பவமென
[3]அக்கம லியுமவன் நத்தூர் முற்பகர்
சொர்க்கமும் நரகமும் ஒப்பா துற்றவர்,
அம்போ டொத்தொளிர் விழியார் சுகமல(து)
உண்டோ நற்கதி எனமாய் வுறுமவர்,
அன்னம தொடுதுணை யாவுண உயிர்பல
முன்னவ னருளிய தாநுவல் கொடியவர்,
அங்கட் பெருநில [4]மெல்லியல் மிக்கழ
மிஞ்சிச் சுமையென வைகுவ தற்(று)எழு
தருமறை செப்புந் தாரக மார்தரு
சமய மனைத்தும் சீர்பெற நாடிவ - ருந்தலேனே
கதிர்விடு மணிபல குயிலெழி லொடுகுர (வு)
அணிதரு மகுடநி ரையும்,ஒரு குறைவறு
கவினுறு திங்கள்கு லாவு[5]ச டானன
வரிசையு டன்கனல் ஆர்தரு மூவிரு
கண்களொ டருள்வழி தருவிழி பத்தொ(டு)இ
ரண்டும்அ ருணையிடம் வரு[6]கிளி யிற்செறி

1. அத்தத்தை – பொருளை 2 அங்கனை – பெண். 3. அக்கம லியுமவன் – கண்களை உடலில் மிகவும் கொண்ட இந்திரன். 4. மெல் லியல் - பூமி தேவி 5 சடானனம் - ஆறுமுகம். (ஆறுமுகம் என்றமைக் கிசைய, கண்கள் பதினெட்டு என்று கூறுகின்றனர். கனல் உமிழ் விழி ஆறு. அருள் தரும் விழி பன்னிரண்டு என்ற விவரம் அறிக) 6. கிளி – அருணகிரி நாதர்.

கற்றைநெ டுங்குழல் [1]ஆனையில் இதண்மிசை
உற்ற[2]இ ளங்குயி லானதில் அலைபொரு
கடலைப் பருகிப் பினும்விட் டருள்முனி
வனைமெச் சியபத் தர்கள்உச் சியில்வீரை
காணும் நாசியின் அணியும் மீனத்துள
வாறெ லாம்உல கதனில் முடித்துயர்
[3]கம்பலை தங்கும் பந்தந் தந்திடு
புன்பவம் விண்டுய்ந் தங்கொன் றும்படி
கழிவறு சத்துவ சாந்த நிலையருள்
பிரணவ மெய்ப்பொருள் வாய்ந்து, [4]விதிஅயில்
கட்டச் சிக்(கு)அற் கச்சொற் சொற்றிடும்
அத்தர்க் குச்செப் பிப்பொற் புற்றவிர்
கம்புமிழ் முத்தொடு கோத்த குறடணி
யுங்கொடி, கைத்தினை மாக்கொ டிமையவர்
காகூ என்குமுன் அஞ்சலென் மொழிபகர்
வாய்ஆ றும்,கக னந்தொடு மலையின்மு
கட்டினில் உடலையு ருட்டோர் [5]துர்ச்சனன்
ஒப்பவர் கவியும்வெ றுக்கா மற்கொடு
கந்தா டற்குழை யணியா றிருசெவி
யும்பூண் மொய்த்தப னிருதோள் நிரையொடு
[6]கண்ணுகர் அளிமலி நீபம தொடுபகர்
நன்னல முறுபல மாலிகை களும்அணி
கண்டத் (து)எழில்உர மல்கிய பொற்(பு)அயில்
முன்செப் புறுபடை, செய்யம லர்க்கழல்
கலைகள்மு தற்கொண் டோதிடு சீர்முழு(து)
இலகந டிக்குந் தோகைம யூரம - தன்கண்வாராய்
[8]கழையினில் அரனொரு வடிவுகொ டுறல்ஒரு
பொதுவன்முன் எறிதலின் இலகிய [9]நகரிடை

1. ஆனையில் - யானையால் வளர்க்கப்பட்ட தெய்வயானை. 2. இளங்குயில் – வள்ளிநாயகி. 3. கம்பலை - துன்பம். 4 விதிஅயில் கட்டச் சிக்கு அற்க – பிரமன் பிரணவப் பொருள் கூற முடியாமல் பட்ட துன்பம் நீங்கும்படி 5 துர்ச்சனன் – திருமலையின் மீதேறி உச்சியிலிருந்து கீழே உருண்டவன், என்று தன் இயல்பைப் பிறன் கூற்றாக மொழிந்தனர். 6 கண்ணுகர் அளி = கள் நுகர் அளி = தேன் உண்ணும் வண்டு. 7. மயூரம் மயில் வாகனம். 8 கழை - மூங்கில். 9. நகர் - திருநெல்வேலி.

கரிமுகம் அங்குச பாசம்உ ளானது
கரமதி லங்கொரு மாதவ ஞல்நுழை
கந்தம ருவுபுனல் ஒழுகியெ ரித்தவெள்
என்(பு)அலர் உருவுற அருளும்ந திக்கிடை,
கைக்களி றென்றுமுன் மூலமென் உரைசொலி
எய்க்குமுன் அங்கினி தேகிய புகழ்பெறு
கருணைப் புயலுக் கவன்முற் றருமொரு
மகன்மிக் கிகலிப் பொருதுக் கமதுறு
காலை யூடொரு தழல்வரை ஒத்(து)அரன்
நீடு மீடுறு [1] திருநக ரிக்கிடை,
கந்தர முங்கண் டொஞ்சும் பைங்குழல்
இந்திரை தன்கொண் கன்றுன் பங்கொடு
[2] கணுஅமை யொத்துளம் ஏங்கு மிடிகெட
அலைகட லுட்குடி யாம்பல் அவுணர்கள்
கத்திக் கொட்டுக் கொட்டிச் சித்தம
கிழ்ச்சிக் குட்பட் டுத்தொக் கிட்டடர்
கங்கமு தற்பகர் கூட்டம் அதன்உண
வென்றெழி யச்சமர் காட்டும் நகரிடை,
கார்மே கம்பொரு குஞ்சர மிகுமலை
நாடு டொன்றும்இ ரண்டொரு நகரிடை,
[3] கற்பக நகரியை ஒப்பா கப்பகர்
தற்கியை தருபுது வைக்கோ யிற்கிடை,
[4] கங்கா ளத்தரர் சிவகா மியினெதிர்
நின்று டிக்களி பெறுமா நகரிடை
கன்மலை வன்மனை கோபுர மடமுதல்
இன்னமும் நுவலுறும் ஆயிரம் வயினிடை
கஞ்சப் புதுமலர் ஒவ்வும்அ டித்துணை
நெஞ்சிற் றிகழ்தர விள்ளுமொ ழித்தொகை
களும்அரு வைக்கொண் டாடுநர் காணரும்
நடனமு தற்சிங் காரமெ லாமும்ம - முங்கலாமோ

1. திருநகரி – திருவருணை. 2. கணு அமை - கணுவுடைய மூங்கில்
3. கற்பக நகரி - தேவருலகு. 4. கங்காளம் – எலும்பு.

**பரமசிவன்**

மதியமும் அரவமும் இதழியொ டுளபல
மலர்களும் நதியுடன் அணிசடை முடியினர்
மழவிடை யின்[1] புற மீதொரு மாதொடு
விரிதரும் அம்பர மூடுகு லாவுநர்
மந்தரம் நிக முலை வனிதையி டத்தமு(து)
உண்(டு)[2] அவள் அலகையின் உருவுற விட்டவர்
வத்திர மென்[3] றிரு தோல்கொளும் உடையினர்
எச்சில்த ருங்கொலை வேடனை யருளினர்
மதுரத் தமிழ்மெய்ப் புலமைச் சதுரர்கள்
பனுவற் கவிசெப் புநருக் கெளியவர்
வாண னுதிய அவுணர்த மக்கும்அ
வாவு மாறுபல் வரமரு ளுத்தமர்
மண்டையும் என்பும் கொம்பும் தங்கிய
திண்புயர் எங்கெங் குந்துன் றும்பரர்
மலிதவ ளப்பொடி ஆர்ந்த திருவினர்
மணியுமிழ் நத்தணி தூங்கு செவியினர்
மச்சப் பொற்பைப் பக்கத் துத்தமி
நத்திச் செப்பற் கொப்பிப் பத்தனை
மண்டல முற்றிட வீழ்த்தி யுயரஎ
றிந்தவ னுக்கெதிர் காட்டி யருளினர்
மானோ டங்கையில் ஒன்றிய [4]பரசினர்
ஆலா லந்தனை உண்டருள் புரிபவர்
மற்செய வரும்அசு ரப்பா விக்கொரு
சக்கரம் அருளிவ தைப்பான் உற்றவர்
மந்தா ரத்தொடை அணிவா னவர்துயர்
கண்டே அக்குதிர் தருமா றமுதவர்
மன்னிய திரிபுரம் நீறெழ வரும்ஒரு
புன்னகை மருவிய வாய்வலி யுடையவர்
வஞ்சச் சமணர்கள் சொல்விதி நத்திய
கொஞ்சக் கவிஞர்கள் உய்கைநி னைக்கலர்
மனமுரு கிப்பண் டாலதன் நீழலில்
முயல்தவ முற்றும் போதொரு சேயென — வந்துளானே,

1. புறமீது – முதுகில், 2 காரைக்கால் அம்மை பேய் உருவடைய, 3. இருதோல் உடை – புலி, யானை என்பன, 4. பரசு – மழுவாயுதம்.

**பராசத்தி**

மரகத மணிநிற மயிலென இமகிரி
புரிதவ மகிமையி னிடைவரும் உமையவள்
மழலையி ளங்கனி வாய்திகழ் பார்வதி
பகவதி அம்பிகை [1]நீலவி லோசனை
வந்தனை புரிபவர் தமையிகழ் துட்டர்கள்
வெந்தவர் குலமுடன் அழியஒ றுப்பவள்
வக்கிர தந்தமொ டோர்மலை யெனவரும்
உக்கிர முஞ்சில வேளையில் உடையவள்
மயிடத் தலையுற் று(ம்)அதிற் றினமிவர்
சமனுக் கும்நடுக் கமுறத் திரிதரு
மாய மீறிய [2]தருவன்உ ரத்தினில்
ஆடி வானவர் மகிழ்வுற வைத்தவள்
மந்திர மென்குங் கும்பும் பங்கிடும்
எந்திர முந்தந்(து) உந்துந் தந்திர
வகைகளு மிக்கியல் பாங்கில் வலியவள்
புவனம னைத்தையும் ஈன்ற பழையவள்
மட்டுற் றுக்கட் கொட்டிச் சற்றலர்
புட்பக் கொத்திட் டுக்கட் டப்படு
[3]மஞ்சென உத்தம நூற்கள் பலபகர்
பைங்குழ லுற்றபி ராட்டி அளவறு
மாயா தந்திர வஞ்சகி நடமிட
நாணு இங்கித மங்கள சுபகரி
மத்தமும் மதியுமு டித்தா ருக்குயிர்
ஒத்தவள் வரதனி டப்பா கத்தினள்
வண்டோ விட்டிட ஒரு[4]நா வலனது
பின்போய் அட்டமு திடுபே ரருளினள்
பன்னியி னிடையுரு வாய்,ஒரு கொடியவன்
முன்விரல் உதறி,யொ ரோர்விர லினும்அரி

1. நீலவிலோசனை - குவளை ஒத்த கண்களுடையவள், 2. தருவன் — மயிடாசுரன், 3. மஞ்சுஎன - மேகம் ஒத்ததாக, 4. நாவலன் - கவிராஜ பண்டிதர்.

வந்துற் றவனது பொய்யுடல் பத்தினை
யுஞ்செற் றிடவிடு தையல்,[1] எனக்கொரு
மகவரு ளிக்கண் பாரென [2]வேய்வன
நகரில டுத்துய்ந் தான்உள மேயவள் – செங்கையானே.

**திருமால்**

விதிநிறை தருசது மறைபயில் பிரமனும்
விரிகடல் உலகமும் உலகமு மிளிர்தர
விரைகமழ் உந்தியி னுல்அருள் வான்,வரி
சிலை,வளை தண்டுவில் ஆழிகொள் வானவன்
வெந்திற லவுணர்கள் வசமழி யப்பொரு
திண்புய வரைமிசை கமழ்துள வத்தினன்
மிக்குயர் பஞ்சவர் ஏவலின் அரவம்உ
யர்ந்தவன் முன்சில வாசக மொழிபவன்
வெருளுற் றெருகைக் களிறத் தினம்அழ
முதலைப் பகையைத் தொலைவித் தருள்முகில்,
வீணில் மாமன்முன் விடும்அல கைத்தனம்
ஊறு பால்விடம் உடன்உயி ரைக்கொளும்
விந்தையன் அன்பன் தன்றுன் பங்கெட
அங்குறு கம்பந் தங்குஞ் சிங்கமென்
வியனுரு வுற்றெதிர் தோன்றும் நெடியவன்
அகிலமு ழுக்கவும் மாந்தி உமிழ்பவன்
மெய்க்கறு பைப்பற றித்துக் க ர தொடு
நத்திச் சத்தித் துத்தற் றெட்டவர்
வெம்பல்உ றப்பல தூர்த்தர் சடையிடை
கெஞ்சிய பொற்கொடி வேட்கை அருளினன்

1. மூன்று மண முடித்து மகப்பேறின்றி வருந்தி, நான்கா மணமு மெய்தினர், திருநெல்வேலியிற் செந்திநாயகம் பிள்ளை என்பார், அவ்வூர்க் காந்திமதியம்பாள் மீது பேரன்புடையவர், திருமண விழாவில் தமது குறையைக் கூறி விண்ணப்பித்தனர், அவன் அருளாற் கிடைத்த அசரீரி மொழிப் படி இந்நூலாசிரியரை மகவாகப் பெற்றனர் என்க. 2. வேய்வனம் = திருநெல்வேலி – மூங்கில் அடியில் இறைவன் தோன்றியதால் ஏற்பட்ட பெயர்.

மேனுள் இந்திர னும்பல அமரரும்
மாளா அன்புற வென்றமு துதவினன்
வெற்பொரு [1]கவிகையை ஓப்பா கக்கொடு
பற்பல பசுநிரை யைப்பா லித்தவன்
விண்தோ யப்பெரி துயர்ஆ லிலைமிசை
கண்சோர் பொய்த்துயில் வுறுமோர் தொழிலினன்
மின்னிகர் இடைதிகழ் சீதையை விழைதரு
துன்மதி யினன்அடி யோடற அமர்புரி
வென்றிக் குரியவன் வையமி கச்சுமை
கொண்டெய்த் தலமரல் மல்கில்லொ ழிப்பவன்
விடஅர வத்தன் றுடிய வீறவிர்
பதயுக ளத்தன் தேவர்கள் பால்நுவல் - பண்பினனே.

வெளிறிய அலைபல வளையினம் எறிதரு
வெகுமுக நதிமகள் மகிழ்வுற வருசுத!
விதரண! சுந்தர! கோமள மேவிய
குமர!வி டங்க!வி சாக!ம னேகர!
மென்குழல் மறமக ளுறுபரண் முற்றதை
தொங்கிய கிழமுனி யெனவும் நடப்பவ
வித்தை நலந்திகழ் பாரதி முதலினர்
மெச்சிவ ணங்கிட நூலறி புரவல
விபுதற் களவற் றமனத் துயர்தரு
தகுவர்க் கெமனெத் துமடுத் தலைமலர்
மீது லாவிய சிறுவ!அ ழற்பொரும்
ஆறு மாதரும் உமையும்வ ளர்த்தவ!
வெண்தர ளங்கண் டொஞ்சும் தந்தமி
லங்கம கிழ்ந்தண் டும்பெண் குஞ்சர
விரகம்அ டக்கிய வேந்த! பொதியையின்
முனிவன்மு தற்பலர் தாழ்ந்த பெரியவ!
வெட்கப் பட்டுத் தட்டுக் கெட்டயன்
நிற்கக் குட்டிக் கட்டிச் சிற்சில
விண்டும லைக்குகை சேர்த்த சரவண!
சம்பவ சித்தர்கள் போற்று குருபர!

1. கவிகை - குடை.

மேலோர் தம்பரன் என்றும் முன் உளபல
நூலோ ரும்பக ரும்புகழ் உடையவ!
விற்பனர் பகர்தமிழ் வித்தா ரக்கவி
கட்கருள் பொழிதரு கட்பார் வைக்குக!
வெம்பூ தப்படை வயவா! பலமலை
கொண்ட டிக்களி பெறும்வே டுவ! முதிர்
வின்மலி சிகைநிகர் சேவலை வரைகொடி
துன்னிய பெருமைம காரத! பிரபல
விம்பக் கனிநிகர் செய்யமு கக்கிளி
யின்சொற் கவியொடென் வெள்ளுரை யைப்புனை
விகிர்த! மிகச்சிந் தோலிடு பேரொலி
மருவுதி ருச்செந் தூரினில் மேவிய – தம்பிரானே, 95

**தந்த தத்தன தத்தன தனனந் - தந்ததான**

பம்பு முத்தமிழ் கற்றவர் இகழப் - புண்படாதே
பங்க யத்திரு ஒப்பவர் பலரைக் – கெஞ்சிடாதே
நம்பு பத்தியில் அற்பர்கள் உறவைக் - கொண்டிடாதே
நம்ப ருக்கருள் மெய்ப்பொரு ளதனைத் - தந்துகாவாய்
கொம்பு டைத்தவ ரிற்றிரி தரும்உத் – துங்கவேளே
குஞ்ச ரப்பிடி யைக்குற மகளைத் – துன்றுபாகா
சிம்பு ளைப்பொரு குக்குடம் உறுகைக் – கந்தநாதா
செந்தி லிற்சிவ சுப்பிர மணியத் தம்பிரானே. 96

**தந்த தத்தன தானன தானன - - தந்ததான**

வந்த னைத்தொழி லேபுரி பாவலர்
தம்பு டைக்கிசை வாகிய வாறுசெய்
வண்பு கழ்க்கதி ஆவல்கொள் சீல(ம்)ம – றந்துளாயோ
மந்தி ரத்துயிர் ஏ(து)இலை, யார்அறி
தந்தி ரத்தொகை யேவலி தாம்எனும்
வஞ்ச கத்தினர் வாழ்வது நீசெயல் – அன்றிவேறோ

95. அம்பரம் – கடல், வகிருவடு – பிளந்த மாவடு.

நிந்த னைக்கட லூடுழல் பாதகன்
என்றி ருப்பினும் நான்ஒரு வேளையில்
நின்றி ருப்புக ழோதிடு பான்மைய - றிந்திலாயோ
நிம்ப மிக்கலர் தோள்வய வீரனில்
இங்கி ருப்பவர் கூறிடு சீர்கொடு
நெஞ்ச மிக்களி கூர்நல மானதை - யின்றுதாராய்
சந்த மிக்குணர் ஓர்கிளி பாடிய
செந்த மிழ்க்கவி யேபகர் வார்தமர்
தங்க ளைப்பணி வாரையும் நாடிய - கண்களானே
சந்த னப்பொதி யாசல மாமுனி
வன்ற னைப்புகழ் வாரொடு சேர்பவர்
சண்ட னைக்கொது காமென நாடவி - டுங்குழலா
செந்த லைப்பொரு சேவல்கு லாவிய
திண்பு யக்குக னேசிவ னரது
சிந்த னைக்கினி தாகிய வாசகம் - விண்டவாயா
தெங்கின் மட்டையின் மீதுறு கோடரம்
ஐந்த ருத்தலை பாய்தரு சோலைகொள்
செந்தி லிற்குரு தேசிக னவளர் - தம்பிரானே, 97

**தனதன தனதனந் தனதன தானன - தந்தநாள**

கனகமும் மணிகளும் பொலிதரு பூண்வகை
அணிதரு முலைமடந் தையர்மிசை மால்கொடு
கயவர்கள் மனைதொறும் திரிதரு தீமைத-விர்ந்திடாதோ
கடலெனும் உடைகொளும் புவிமகள் கோவென
அழுவதும் நிணமருந் தியகொலை பாதகர்
களியொடு பெருகலுந் தொலைதரு மாறுவி-ளங்கிடாதே
பனகம தனில்நடம் பயிலுறு தோகையில்
இருவர்கள் இருமருங் கினும்உற மாமுறி
படரு தினமடுங் கதிரயி லோடுது - லங்கிமேனள்
படர்சடை விமலனும் பொதியையில் மேவிய
முனிவர்கள் அதிபனுந் திருவரு ளுபுரி
பரவிய புலவனுந் தெரிதர ஓதிய - ஒன்றைஓதாய்

நினகரர் அறுவரென் றிலகிய மாமுடி
களில்அடி யவர்பதந் தருதுகள் சூடிய
செயலினை அறிதருஞ் சிலரொடு பேசிய-செம்பொன்வாயா
சிறுகுற வனிதைமுன் தடிநரை கூன்முது(கு)
இருமலொ டுறுமவன் றனைமற வாதவர்
திருவடி துணையெனுந் தெளிவுடை யார்களுள்-
என்றும்வாழ்வாய்
மனவுறு தியையறிந் தவரவர் நாடிய
பலனருள் முருகனென் பவர்மொழி பாழ்பட
வலிதுயர் கழைவனந் தனிலெனை யாளமுன்-வந்துளானே
வளமிக மருவுசெந் திலில்அரு ளாளனும்
முழுதுணர் புலவனுந் தழல்நிற வேடனும்
வணிகனும் அரசனுங் குரவனு மாகிய-தம்பிரானே 98

தந்தன தந்தன தானன -- தந்ததான

மந்திர வித்துறழ் மாதவர் தஞ்சபை யிற்றமி யேனும்நின்
மைந்தனெ னப்பெயர் சூடியி - ருந்திடேனோ
வண்கட லிற்பொரு நாநதி முன்பகர் பற்பல நீரினில்
வன்தழ லிற்புகு பாடல்கள் - தந்திடாயோ
இந்திர னைப்பல தானவர் துன்பமு றச்செயல் போல்எமை
இங்குவ ருத்திடும் ஈனர்கள் - துஞ்சிடாரோ
என்கன விற்பல வாறுரு வங்கொடு முற்பகர் வாய்மைகள்
இன்றுவெ ளிப்படு மாறுபு - ரிந்திடாயே
சந்திர னைச்சடை மீதணி யும்பர மற்குழு ஞள்இரு
தண்டைம லர்க்கழல் சூடிஉ - யர்ந்ததேவே
சஞ்சல மற்றம ணேலய விஞ்சைவி ழுப்பொரு ளாவளர்
சம்பிர மக்கூவு மாரியெ - னுங்கைவேலா
செந்திர தத்தினும் வார்கணை சிந்திவ தைக்கும்வில் வேடுவர்
திண்கைவ ளர்த்தபெண் மாதவ - முங்கொள்வானே
சிந்துபொ ரப்பொர நீடிய சந்தவ ரைக்கரு காகிய
செந்திலை விட்டக லாதவர் - தம்பிரானே 99

99. கழைவனம் - திருநெல்வேலி (கழை - மூங்கில்)
100. பொருநாநதி - தாமிரவருணியாறு.

**தந்தா தத்தன தந்தன -- தந்ததான**

*கொந்தார் மைக்குழல் மங்கையர் தம்சே னைக்கதி பன்,சமர்*
*குன்று மற்புரி கின்றது - கண்டிலாயோ*
*கொன்றா னைப்பெரி துண்டு(உ)ட லம்பூ ரிப்பவர் தம்பகை*
*கொண்டோர் சித்தம்வ ருந்துதல் - நன்றுதானோ*
*சிந்தா மற்றிரு வெண்பொடி தந்தா ளத்துணி கின்றிலை*
*செம்பா றுக்கிடை விண்டசொ - லும்பொய்தானோ*
*திந்தா தித்திமி என்றுவ ருந்தோ கைப்பரி கொண்டுள*
*சிங்கே றுத்(து)இரு பெண்களு - டன்குலாவாய்*
*கந்தா! கிர்த்திகை யும்சிவை யும்பே ணித்தரு கொங்கைகொள்*
*கன்றே வெற்பின மெங்கும்ந - டஞ்செய்வானே*
*கண்டோ(டு) ஒத்தசொல் அம்பிகை தன்பா கத்துறை யும்பரர்*
*கண்சேர் அக்கினி தந்திட - வந்தசேயே*
*செந்தா னைத்தவர் தங்கள்பெ ருங்கோ லத்துடன் வந்தவிர்*
*சிங்கா ரக்குக! என்பவர் - சொந்தமாவாய்!*
*சிந்தூ ரத்தில கந்திகழ் கொம்(பு)ஆ னைத்திரள் விஞ்சிய*
*செந்தூ ரிற்குடி கொண்டருள் - தம்பிரானே* 100

## நேரிசை வெண்பா

*சந்தவரைச் செந்திநகர்ச் சண்முகசிந் தாமணிக்குச்*
*செந்தமிழாற் சொல்லுந் திருப்புகழ்ப் பாட்(டு) - இந்த*
*ஒரு நூறுங் கற்றுணரும் உண்மை யுடையார்*
*கருநூறும் வாழ்வடையார் கள்.*

வேலுமயிலுந் துணை

---

உ

வள்ளிபங்கன் துணை

# திருச்செந்திற் பிரபந்தம் பதினுறில்

# 9-வது நவரசமஞ்சரி

நூன்முகம்

வீரமுத லாக விளம்பும் நவரசத்தின்
சாரம் அமையத் தமிழ்ப்பாட்டால் – சீரலைவாய்ச்
செந்திற் குமரன் திருவுளமொப் பச்சொல்இந்நூல்
வந்திப்ப வர்க்குறும்நல் வாழ்வு.

''நவரசமஞ்சரி'' என்ற இந்நூல், ஒன்பது விதமான சுவைக் கவிகளையுடைய தொகுப்பாகும். என்னை? நவம்-ஒன்பது, ரசம்-சுவை, மஞ்சரி-தொகுப்பு என்று பொருள். வீரம்-அருவருப்பு-பெருநகை-அச்சம், கோரம்-கருணை, சாந்தம்-அற்புதம், சிங்காரம் என்ற ஒன்பதும் நவரசமென்று வழங்கப் பெறுகிறது இவை ஒவ்வொரு பகுதிக்கும் ஒன்பது கவி வீதம், ஒன்பது பகுதிக்கும் எண்பத்தொரு பாடலாக, அவ்வப் பகுதிக்கேற்ற சுவைகளைத் தம் கருத்தோடும், செந்தூர்ப் பெருமான் தொடர்போடும் பொருந்தக் கூறியுள்ளனர் ஆசிரிய சுவாமிகள்.

தன்னலம் பேணுமை, மக்கள் உயிர்கள் மீது இரக்கங் கொண்டு காத்தல். இறையருட்பேற்றை விளக்கல் ஆதியனவும், திருவருட்பேறு பெற்றவர்கள் உலக நன்மை பேணுமல், தான்மட்டும் முத்தியடைதல் கூடாது. சம்பந்த மூர்த்தி, சைவ சமயத்தைப் போற்றி, திருநீற்றின் பெருமையை வளர்த்தது போல மக்கட் சமுதாயம் உய்வதற்கான செயல்களை நடத்த ஆண்டவன் அருட்பேற்றை விரும்பும் தம் விருப்பத்தையும் இடையே கூறுகின்றுர், அன்றியும் அருணகிரிநாதர் நமனை விளித்து ''கண்டாயடா அந்தகா'' என்று கூறுதல் போல், நமனையும். மன்மதனையும் எதிரிட்டு வீரம் கூறுகின்றுர், வீரம் என்ற பகுதியில்

மேலும், பெருநகை என்ற பகுதியில் மாடேறும் ஈசனது குமாரனுன முருகன் ஆடேறினன் திருச்செந்திலில் வந்த பின், மயிலேறவும், ஆனையேறவும் பெற்ருன் என்பது போன்ற பாடல்கள் படிக்கச்சுவையானவை இதுபோல ஆங்காங்கும் காணலாம், இடையிடையே திருச்செந்திலாண்டவன் தனக்குச் செய்த அருளுரை-அநுபூதிகளின் விளக்கம் இவரது வரலாற்ருல் அறியலாம் இவருக்குத் திருச்செந்தூர்ப் பெருமானிடத்துப் பேரன்பு உண்டு. தன் இளம்பருவமான நான்கா-மாதம் தாய் தந்தையர் செந்திலில் வழிபாடு செய்து, பெருமான் திருமுன்னர்க் கிடத்தி - இது உன் அடைக்கலப்பொருள் என்று கூறி வேண்டினர்களாம். தந்தை மகப்பேறின்றி மூன்று மணமெய்தி யிளைத்தனர். பின்பு முன்னை நல்வினை கூட்ட நான்காவது மணம் பெற்றனர். திருநெல்வேலியில் கார்திமதியம்மை தவமிருந்து சிவபிரானது திருமண மெய்தும் விழாவில், இறைவன் காட்சி வழங்கும் நாளில் அம்மையிடம் விண்ணப்பித்தனர். அசரீரியாகக் கிடைத்த அருளுரைப்படி இவரும் உடன் தம்பி ஒருவருமாக இருவர் பிறந்தனர். ஆகவே தந்தையான செந்திநயகம் பிள்ளை மிகப் பரிவுடன் இவரை வளர்த்தனர். முன்னைய தவத் தொடர்பினுல் இளமையிலே முருகன் வழிபாடும் பாட்டியற்றும் வன்மையும் எய்தினர், வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள். வழக்கப்படி எந்தத் தலத்திற்குச் சென்று கடவுட் பதிகம் பாடத் தொடங்கினுலும் – திருச்செந்தூர் வகுப்பு ஒன்றை முதலிற் சொல்லிய பின்பே பாடத் தொடங்குவர்.

"எத்தலத் தினில்யான் பாடல் இயம்பிடத் தொடங்கும் போதும்
மைத்தடங் கடற்செந் தூரான் வகுப்பினைத் துதிப்ப துண்டு
சத்தநூல் மயக்க மான சமயகோ டிகளென் ருேதும்
அத்தனை கடலுந் தாண்ட அருள்செய்தோன் அவன்கண் டீரே.

– குருபரம தத்துவம் திருச்செந்தூர்ச் சருக்கம். சிவம் வரலாற்று நூல்.

[ஒன்பது சுவைகளைக் கூறும் இந்நூல் ஒன்பதாவதான வரிசையில் அமைந்தது, மரபு பற்றிய ஒற்றுமையுடையதாகும்.]

முருகன் அடியவர்களைத் தொகுத்துக் கூறிய கௌமாரத் தொகை என்ற பதிகத்து முதற் பாடலில், சுந்தரமூர்த்தி-திருத்தொண்டத் தொகைக்கு முதலடி - தில்லைவாழ் தண ரென்றெடுத்தது போல, இவர் திருச்செந்தூர்த் தலத்துத் திரி லோக சுதந்தரர்களான அந்தணர்களையே செந்திநகர்த் திரி லோக சுதந்தரரைப் போற்றி'' என்று தொடங்குகின்றார், பதி னாறு பிரபந்தம் பாடுகையில் பதினொன்றாவது பகுதி நிறை வெய்தினதும், கந்தலோகத்துத் திருநீறும், அக்க மாலிகையுந் தருவோ மென்றனர் முருகன், அந்த மகிழ்விற் பாடினர். ஒன்றும் வழங்காத காரணத்தால் அதுவரைப் பாடிய பாடல் ஏட்டுச் சுவடியைக் கடலில் விடுத்து, முருகன் மீது ஊடல் கொண்டு கடலில் விழுந்து உயிர் துறக்க முயன்றனர், அச் சமயம் மனக்கண்முன் காட்சி தந்து அமைதியை ஏற்படுத் தினர். அதன் பின் சிலகாலம் கழித்து ஆண்டவன் கட்டளைப் படி பாடப்பெற்றவையே இந்தப் பதினாறு பிரபந்தங்களு மாகும்.

**கடலினும் பொருநை நதியினும் நெல்லைக் காலினும் கழுகுமா மலைப்பால்**
**தடமுட னெழும்நாத் தழிலினும் கிடக்கும் தமிழெலாந் தரப்பெற விழைந்**
**குடவளை முழங்கி அலைதரக் கயல்பாய் குவளை நீர்த் திரைபடுத் தாழை [மீதன்**
**மடலவிழ்ந் துயர்சீர்ச் செந்தில்வாழ் முருகா மயிலில்வந் தருள்புரி வாயே.**

**(தனிக் கவி.)**

இப்படி வரலாறுகள் பல. முறைப்படி இது தேவத்தான வெளியீடாகப் பதிக்கப் பெற்று வெளிவருகிறது. அன்பர்கள் பெற்றுப் பயனடைவார்களாக.

———·———

# 9-வது நவரச மஞ்சரி

## காப்பு - கலி விருத்தம்

சிவமிகுந் துயர்திருச் செந்திற் சண்முகன்
நவரச மஞ்சரி நவின்று சூட்டிடத்
தவளநீற் றணிதிகழ் தாணு நல்கிய
கவளமால் களிற்றிரு கழல்கள் காவலே.

## நூல் - வீரம்

அறுசீர்க்கழில் நெடில் விருத்தம்

சீர்மருவு செந்திநகர்க் குமரகுரு
பரமுருகச் செவ்வேள் பொற்றாள்
நார்மருவு திருவுள்ளத் தொருவீரன்
சமர்க்களத்தின் நடுவில் நின்று
தேர்மருவு முதற்றட்டிற் பாய்ந்தகொடுங்
காளிதன்வாய்ச் செந்நீர் சிந்திப்
பார்மருவு கருமலைபோல் வீழ்தரக்கை
யாலிடித்த பரிசு நன்றே. 1

தேவர்பிரா னுதியருக் காதரமாந்
திருச்செந்திற் செவ்வேள் அந்நாள்
மூவகைத்தா னவருதிரம் முனைவேலுக்
கருத்தியசீர் மொழியுஞ் சந்தப்
பாவலிமைப் பைங்கிளியோன் றந்தகனை
அதட்டிநிந்தை பகர்ந்து விண்ணோர்ப்
பூவுலகந் தனிற்கொணர்ந்து புகழ்நிறுவுந்
தனிவீரம் போற்றற் பாற்றே, 2

---

காப்பு: தவள நீற்று அணி - வெண்மையான திருநீற்றின் அழகு, தாணு - சோதிவடிவு, எனவே சிவபிரான் என்பது பொருள் கவளமால் களிறு - யானையே என்ற கருத்துப்பற்றி, கவளமுண்கின்ற பெரிய யானை என விநாயகரைக் குறித்தார்.

1 நார்மருவு - அன்பு பொருந்திய. ஒரு வீரன் - வீரவாகு தேவர் பானுகோபனிடம் போர் செய்தபோது நேர்ந்த வரலாறு கந்த புராணத்துக் காண்க.

2. மூவகைத் தானவர் - தாருகன், சிங்கன், சூரன் என்பவர். விண்ணோர்ப்பூ - பாரிசாத மலர், கண்டாயடா அந்தகா என்பர் அருணகிரிநாதர்

செந்தில்நகர்க் குருபரன்றன் ஆறெழுத்தைத்
தினந்தோறும் செபித்து மற்றோர்
மந்திரத்தை மதியாமை வருவதன்றி
இகலானோர் வருந்தத் தாக்கிப்
பந்திபந்தி யாய்நரியாய் பருந்துகழு
கலகைநிணம் பருகற் பார்க்கைக்(கு)
உந்தியபே ராசையுமிக் குண்டாகு
மெனத்துணிவுற் றுரைக்க லாமே. 3

வல்லாண்மைத் திருவருட்பே றெய்தியிந்த
மகிதலத்தில் வாழ்ந்தோர் தம்மில்
கொல்லாமை யாதியநன் னெறிநிறுவ
முயலாமற் குடிபோ னோர்கள்
பொல்லாரே யெனத்துணிந்து புகல்வீரம்
திருச்செந்திற் புனித வேளை
நல்லார்க ளிருவரிடை மயில்முதுகிற்
றினம்நாடும் நரர்க்குண் டாமே. 4

கருணைநலம் பொலிதருசெந் தூர்க்குமர
குருபரன்றன் கலையூ டொன்றை
மருவுமிளங் கவுணியச்சேய் மதுரையிற்சா
ரணர்பலர்முன் மடியப் பாடிப்
பொருவில்வெண்ணீற் றருமைநிலை நிறுத்தியசொற்
கேட்டும்வஞ்சப் புலையர் செந்நீர்
பெருகியஆற் றணிகாணக் குறியாதார்
கோழைமனப் பீழை யோரே. 5

---

3 பந்தி பந்தியாய் – வரிசை வரிசையாக, அலகை பேய் - நிணம் - ஊண்

4. குடிபோனோர்கள் – முத்தி எய்தினர். நல்லார்கள் இருவர் – வள்ளி, தெய்வானை.

5 கவுணியச்சேய் – திருஞானசம்பந்தர்.

குடர்சரிந்து வீழ்தரினும் கொக்கரித்துப்
பெருஞ்சேவற் குணத்தா ராகி,
அடர்பொழிற்செந் தூர்க்குமரன் அடிமையெனும்
பெயர்தாங்கி அவன்பால் முன்னாள்
விடர்பெருமான் றன்னிமித்தம் வெற்றிலைக்காம்(பு)
அயிலாக விடுத்தாய் எந்தம்
இடர்களையா விடில்இளப்பம் உனக்கேயென்
றியம்புமவர் எமக்குற் றாரே. 6

கோகனக மலரிடத்துக் குறைத்தலைவே
தியனேயான் கூறல் கேளாய்,
தேகமெனக் கினியொன்றுஞ் சிட்டிக்கக்
கூடாது செந்தூர்க் கந்தன்
சோகமொழித் தாண்டுகொள்ளத் துணிந்துள்ளான்
அவனாணை சொன்னேன் உண்மை
நீகருத்தில் எனைநினைத்தால் உடனவன்கை
உனைப்புடைக்க நீளுந் தானே. 7

திருவேளை நோக்கியன்று தினைப்புனத்துக்
குறத்தியினைச் சேர்ந்து கூட்டி
வருவேளைச் செந்தூரில் வாழுமெழிற்
செவ்வேளை வணங்கும் நாங்கள்
கருவேளை மதிப்பதுண்டோ கைம்மலரைந்
தன்றியின்னும காட்டிற் சென்று
மருவேளை மலர்வரைகொய் தாயிரம்வில்
லேந்தியெதிர் வரினும் மாதோ. 8

6. கொக்கரித்து ஆரவாரித்து விடர்பெருமான் - முருகனன் பமைந்த வாலிபன் - தான் காமுற்ற ஒரு பெண்ணிமித்தம் இராவில் தனியே சென்றவனாயினன். இவன் மீது வெறுப்பு கொண்டு தண்டிக்கப் பலர் நெருங்கினர் "வளைபட்ட கைமாதொடு என்ற பாடலைச் சொல்லி" தான் நுகர்ந்த வெற்றிலைக் காம்பை வீசினன், அது வேலாகச் சென்று அவர்களைக் கொன்றது- கௌமார புராண வரலாறு

7 கோகன மலர் - தாமரைப்பூ ஆதனம் - குறைத்தலை - ஐந்தில் ஒன்று வயிரவராற்கிள்ளிவிட்ட தன் காரணமாக நான்காயது என்ற செய்தி புடைக்க - தண்டிக்க 'இனி நான் முகனுக்கு விலங்கே'' கந்தரலங்கார ஒப்புமை.

8 திருவேளை நல்ல நேரம், வருவேளை வந்த பெருமானை, கருவேளை - மன்மதனை - மருவேளை மலர் ஓர் வித மணமுள்ள வேளையென்னும் செடியின் பூ முதலாக மலர் அம்புக்காக மிகச் சாதாரணச் செடி-வேளை இழிவு குறித்ததாம். வீரம் கூறியதுமாகும்.

சூலமடற் பாசம்நெடுந் தண்டமுள
வென்றுமிகத் துள்ளவேண் டாம்
காலனெனப் பேர்படைத்த கள்வாஉன்
றனைக்காலாற் கடிந்து ளாற்குப்
பாலனுமாய்க் குருபரனும் ஆனவன்வாழ்
செந்தூரைப் பரவு கின்றோர்
வேலவன்பா லிருப்பதுண்மை அவனடிமை
யானெனலு மெய்கண் டாயே. 9

## 2. அருவருப்பு - கலிநிலைத்துறை

சந்த ஞசலத் தனித்திருச் செந்திலிற் றலைவன்
பைந்த மிழ்க்கிளி யென்றனைப் பலவிசை பகர்ந்தும்
இந்த மாநிலத் தீனரும் இகழ்ந்திடும் இழிவு
வந்த டைந்திடப் பெறலரு வருப்பெனல் வழக்கே. 10

கனிய முத்தமிழ்ச் செந்திலம் பதியுடைக் கடவுட்(கு)
இனிய தொண்டனென் றொருபெயர் புனைந்தும்இல் லறத்து
மனிதர் தம்மிலும் மாதவர் தம்மிலும் பருவாத்
தனிமை யுற்றுளேன் ஈதரு வருப்பினிற் றலையே. 11

நானவெ ருண்டயர் செந்திலம் பதிக்குரு நாதன்
அமரர் போற்றரு ணையில்வலம் ஒருதனி அடிமை
விமல மேனியை வேந்தனு தியரெதிர் வீணைச்
சமணா னேசியும் தகித்திடக் கண்டமை தகாதே. 12

9 களவர உடலோடுவள உயிரை யாரும் காணமுடியாதபடி பிரித்துச் செல்வதும் வந்தது போவதும் தெரியாமலிருப்பது பற்றி கள்வா என்றார் முருகன் தந்தைகாலால் உதைத்தார் இவனிடம் வேலிருப்பதறிக யானும் அடியவன் 'எந்தை ........இவன் மற்று என் அடியான் என விலக்கும்'' என்பர் சுந்தரர்.

13 இழிவு – அருணகிரியென்று கூறுயது உயர்வு-ஏற்ற தகுதி வராதது இழிவாகும்

11 துறவு அல்லது இல்லறம் என்ற இரண்டில் ஒன்றின்றி இரண்டும் ஒன்றிய தன் நிலை –

12 அடிமை அருணகிரிநாதர் – சமணன் சம்பந்தாண்டான். தீயிலிட்ட செயல், அவரது உடல் விமலமேனி – தீயிடும் அளவு முருகன் செய்தது நியதி

அந்தி வான்பிறை யணிசடைப் பரமனுக் கரிய
மந்தி ரப்பொருள் விரித்தருள் பரும்புகழ் வாய்ந்த
செந்தி லாதிபன் றினைப்புனச் சிறுமிமுன் சென்றோர்
தந்தி யால்வெருட் டியும்புணர்ந் தமையொரு தாழ்வே, 13

மந்த ரம்பொரு சந்தன மால்வரைச் செந்தூர்ச்
சுந்த ரக்குகன் றிருவடித் துணையினைத் துதியார்
தந்த ரத்தினிற் றகுங்கொடை யில்லவர் தமையும்
கந்த ரம்பொரு கையின ரென்பதோர் கழிவே, 14

செந்தி லாதிப னுதிய தேவரைச் சிறிதும்
சிந்தி யாக்கொடுந் தீவினைப் பெருக்குடைச் சிதடர்
மந்தி ரச்சது மறைகளா கமங்களால் வகுக்கா
வெந்தி றற்பெரும் பேய்களைப் பரவலோர் வெறுப்பே. 15

அனக மாதவர் குலம்புகழ் அணிகொள்செந் தூரில்
வனச லோசன மால்தொழ வளருமோர் வள்ளல்
கனவில் வந்துவந் துரைத்தமை காசினி அறிய
நனவி லெய்திடப் பெற்றிடா திருப்பதோர் நவையே. 16

சங்க மங்கலந் தழைத்துயர் செந்திலந் தலத்துத்
துங்க வேலனைத் தொழுமுணர் வெய்தியும் தொடக்கின்
முங்க லுற்றவ ராமென உறவரை முன்னிப்
பங்க முற்றமை பகரினும் அருவருப் பாமே. 17

---

14. மந்தரம் - ஒரு மலை; கந்தரம் பொரு - மேகம் போன்ற.

75. சிதடர் - அறிவற்ற மக்கள், பேய் - கொலைப்பூசைக்குரிய உரு பரவல் - வழிபடுதல்

16. அனக மாதவர் – புண்ணியத் தவசிகள், வனச - தாமரை ஒத்த லோசன கண்களையுடைய, வள்ளல் - முருகப் பெருமான், நவை - குற்ற மாகும்.

17. தொடக்கில் — சூதகத்தில் (தீட்டில்)

தருவ லாரியைப் புரந்தருள் சண்முகக் கடவுள்
மருவு செந்திலில் வந்துவந் திறைஞ்சியும் மற்றோர்
குருவுந் தெய்வமும் உளவெனக் குளறுநர் கொள்கை
அருவ ருப்பினும் அருவருப் பாமெனத் தகுமே. 18

## 3. பெருநகை - எண்சீர்

ஒற்றைக்கால் ஊன்றுத கிழக்கூத் தாடி
ஒருபெரிய மலைநீலி யுடனே சேர்ந்து
பெற்றிட்ட பாலகனும் குமர வேள்தன்
பிறங்கலுடைக் குறத்திமுன்போய்ப் பிச்சை யேற்றான்
நற்றமிழ்ப்பா வலர்பனுவல் மகிமை யாலே
நளிர்கடற்செந் தூர்க்கரசா நண்ணி வாழ்ந்து
வெற்றிவடி வேலேந்திச் சூர னாதி
விறலோரை வெல்புகழு மேவி னானே. 19

உப்புநீரி டைமுளைத்து மிகவும் நீடி
ஓரைந்து மரங்களஞ்ச உறுக்கிக் கோடி
கப்புவிட்டுப் படர்ந்தஒரு மாம ரத்தைக்
கனவேலால் வேங்கைமரங் கடிந்த மூதூர்
மைப்புயல்போற் கொடைகொடுக்க வல்லார் வாழூர்
மாதவரும் வேதியரும் மகிழ்ந்து முன்னாள்
செப்புதமிழ்ப் பாவலருக் கினிய தாமூர்
சேவலங்கே தனந்திகழுந் திருச்செந் தூரே. 20

---

18. தரு வலாரி - கற்பக மரத்தினனான இந்திரன்.

19. கிழக்கூத்தாடி – ஒரு காலைத் தூக்கி நின்றாடும் நடராசர், நீலி – பார்வதி, பிறங்கல் – மலை,

20. உப்பு நீர் – கடல் நீர், ஐந்துமரம் – தேவருலகத்துள்ள பஞ்ச தருக்கள் (இவை கேட்டவைத் தரும்), கப்புவிட்டு - கிளைபரப்பி, மாமரம் – சூரன் கொண்ட வடிவு வேலால் வென்ற - முருகன் வேலைவிட்டுக் கொன்றது, வேங்கை மரமாக நின்றது முருகன் பாடலில் மரப் பொருளாகவே சூரன் சங்காரத்தைக் கூறும் நயம் காண்க

மாடேறித் திரிவாற்கோர் மைந்த ளுகி
வளம்பொலியுஞ் செந்தூரில் வாழும் வேலன்
ஆடேறிக் கொண்டதொன்றும் இயல்ப தாகும்
அணிக்கலப மயிலேறி அமரர் போற்றும்
பிடேறப் பெற்றவெள்ளைக் களிற்றி லேறல்
பெருமையாம் இந்தவிதப் பெற்றி யாலே
காடேறிச் செல்வாரும் அதிட்டம் வந்தாற்
கனகதண்டி கையிலேறல் காண லாமே. 21

காளையொன்றும் சிங்கமொன்றும் கலுழன் ஒன்றும்
கரியபெருச் சாளியொன்றும் ககனத்(து) ஓடும்
தாளுடைய பரிமாவோர் ஏழுந் தோகை
தழைத்தமயி லொன்றும்வென்றித் தகர தொன்றும்
கோளமுட்டி வளர்ந்துளவெள் ளானை யொன்று
கூடியொரு கரத்தினெதிர் கொதிக்கும் இந்த
நாளிலெனை யேன்பிறக்க விட்டாய் செந்தூர்
நாதனே நடுவர்கண்டு நகைக்கின் ருரே. 22

---

21. காடேறிச் செல்வாரும் - நாட்டிலிருக்க வசதியற்றுக் காட்டில் வாழ்பவரும்.

22. காளை – சிவனது இடபம், சிங்கம் – உமையின் வாகனம், கலுழன் – திருமாலின் கருடன் பெருச்சாளி - விநாயகர் ஊர்தி, பரிமா – சூரியன் தேரிழுக்கும் ஏழு பசுங் குதிரை, முருகனது மயில், ஆடு, யானை என்பவைகள் யாவும், ஒரு கழுதையின்முன் வலியிழந்து மனம் வருந்துகின்ற இக் காலம் என்றதால், மேற் சமயம் யாவும் கீழ்ப்பட்ட ஒருபுறச் சமயத்தின்கீழ், செயலற்றிருக்கும் உலகியல்பு இதைத் திருத்தமுடியாத இந்நாளில் அச்செயல்களைக் கண்டு சகிக்கக் கூடாத தனது நிலையை விளக்கியதாம். நடுவர் – இடைப் பட்டவர்.

பொன்னைநவ மணிமுதலா னவற்றை நல்கும்
புலவரூர்த் தருவையுமோர் பூவிற் காட்டும்
நன்னலஞ்சேர் செடியொன்று கொடிநா லேழு
நான்குவேர் இலையாதி நவிலொண் ணாது
பன்னுமவ் வேர் களையரிக்கும் புழுவை விட்டுப்
படர்தூசி கழுவிமகிழ் பான்மை யோர்முற்
சென்னிதுனிப் பார்நகைக்க மெலிந்தேன் கண்டாய்
திருக்கைவேற் படைபுனையுஞ் செந்தூ ரானே. 23

உனதடிமை யென்றொருபேர் எய்தப் பெற்றும்
ஊர்தொறும்போய் இரந்தலைதற் கொப்புக் கொண்ட
மனமுடையேன் றனையுலகோர் நகைக்கு மாறு
வலியவந்து வந்துபல வார்த்தை கூறி
எனதுகுறை தீராம லிருக்கும் உன்றன்
இதய முன்னைச் சிரிக்கும்மற் றிங்கு யாவர் கண்டார்
அனவரதந் திருச்செந்திற் பதியில் வாழும்
அயில்வேற்கைப் பெருமாளே அருள்செய் வாயே. 24

---

23 இதுவும் ஷெ கருத்தை ஒட்டியதே. நவமணி முத லியவற்றையுதவும் கற்பக மரத்தின் தகுதியை, ஒரு பூவே உத வும் செடி என்பது அகச்சமயம், கொடிநால்ஏழு – இருபத்து எட்டு சிவாகமம். நான்குவேர் – அதற்காதாரமான வேதம் நான்கு இலைகள் பலவித நாம ரூபக் கடவுள்கள். வேரை யரிக்கும்புழு - புறச்சமயம் வலிமையுற்று, இந்த அகச் சமயத் தை அழிக்க முற்பட்டுள்ளது, இதையகற்ற அருட்பேற்றை நாடாமல், பலர் - மேல்உள்ள இலைகளிற் பட்டுள்ள புழுதியை மாற்றி அலங்கரிப்பதுபோல், புறத்தே ஆரவாரக் கிரியைகள் செய்வார்கள். அவரது செயலைக் கண்டு பாராட்டுநர் சிலர். இவர்கள் உண்மையுடன் புழுவைக் களையத் தவமயல்வோரை கண்டு நகையாடுகின்றனர் அதனல் தான் மனம் வருந்துகின் றதை - உருவகித்த நயம் கருதுக.

24. பேர் - முருகதாசன் என்ற தனது பெயர் பல வார்த்தை - அநுபவத்திறம், அனவரதம் - என்றென்றும்

செந்தில்நகர்க் குருபரன்றன் அடியார் தம்முட்
சிறியவனும் ஒருவனுறும் செயலும் இன்றிப்
புந்திகலங் குறுந்தமியேன் அவனே யென்னப்
புகலுநலம் பொறுத்துயர்ந்த புகலிக் கோமான்
வெந்திறற்சா ரணர்த்தடிந்த வுடனே மற்றும்
மேடமாதி யஅயில்வார் மேற்சீ ருமற்
சந்திரசே கரனடியிற் புகுந்தான் அன்னோர்
சகமுயவெச் செயல்செயினுந் தடுப்பா ரின்றே, 25

சிறிதும்நடை பயிலரிய முடவன் கொம்புத்
தேனிலிச்சை கொண்டாற்போற் றெண்ட னிட்டு
மறுகுமவர் களிப்பதற்காம் வழியுஞ் சொல்லேன்
வறுமைச்கூ டாற்றறியேன் மனத்தி னூடு
பொறிமகள்கோன் எனப்புவியில் வாழ்ந்து விண்ணிற்
புலியுரித்தோல் உடையானிற் புகல்வேட் டுள்ளேன்
அறுமுகத்தோர் பரம்பொருளாம் செந்தூ ரானே
அடியேனைப் பலர்நகையா தாட்கொள் வாயே. 26

சீருயர்செந் தூரானென் கனவிற் றேன்றிச்
சிறிதேனும் நாணமின்றிச் செப்புஞ் சொற்கும்
கூருலவா வேற்பூசைக் களவி லாசை
கொண்டுளநான் செய்கின்ற குற்றங் கட்கும்
வாருறுபூண் முலைப்பரத்தை மாருக் கீந்து
வண்டமிழோர்க் குதவாதார் மடமை நோய்க்கும்
பாருலகில் வானுலகிற் பிலத்தில் உள்ளார்
பலர்வாயும் நகைக்கவென்றுற் பற்றி டாவே. 27

---

25. அவனே என்ன - முருகன் அவதாரமென்று சாரணர் - சமணர் மேடம் ஆதிய - ஆடு முதலிய உயிர்கள்

26, மறுகுமவர் - அருட் பேறின்றி மனம் வருந்துவார். பொறி மகள் கோன் - இலக்குமி கணவனான திருமால் தோல் உடையான் - சிவன்.

27. பிலத்தில் - பாதாள உலகில்

## 4 அச்சம் - கலிவிருத்தம்.

வென்றி மீறும்வி யன்புகழ்ச் செந்திலான்
பொன்றி கழ்ந்தப தங்களைப் போற்றுவேன்
குன்றி லேறிக்கு தித்தஅந் நாளும்முன்
நின்றி லானென நெஞ்சயர் கின்றதே 28

நிகரில் மெய்யருள் நீடிய செந்திலின்
சிகரி யேறிவி ழுந்தவன் செத்தமை
பகரி னும்பதைக் கின்றஎன் பாழ்மனம்
தகரி னுன்றிருத் தாள்பெறல் எங்ஙனே. 29

பொச்ச மற்றபு கழ்த்திருச் செந்திலாய்
நிச்ச மூழ்கிய நின்கடல் நீரிடை
மச்சம் வந்தொரு மைந்தனைக் கொன்றதால்
அச்ச முற்றென்அ கங்குலை கின்றதே. 30

முந்த ஓர்தினம் முத்தமிழ்ப் பாடலைச்
சிந்து நீரிற் சிதறிடச் செய்தனை
இந்த நாளுமவ் வண்ணம் இயற்றிடேல்
செந்தில் மேவும் சிவகுரு நாதனே, 31

சூல முங்கயி றுந்தொடும் தோளுடைக்
கால னுக்கயர் கின்றவென் கல்மனம்
சீல மிஞ்சிய செந்திலிற் செல்வனும்
வேல னன்பிடை மேவவு மில்லையே. 32

அனைய தொன்றில் அணிதிகழ் செந்திலான்
நனையும் நீபந றுந்தொடை யன்னபா
வனையு மேன்மை மலிவுறப் பெற்றும்முன்
வினையை யெண்ணி வெருண்டதென் நெஞ்சமே. 33

29. கோபுரத்திலிருந்து விழுந்து இறந்தவன், 30 ஒரு மச்சத்தாலிறந்தவன் - வரலாறு தெரியவில்லை.

31 இதன்முன் பதினொரு பிரபந்தம் எழுதி, ஊடலால், கடலில் உருவி விட்டனர் இதையும் அது போலச் செய்யாவாறு என்னைக் [illegible] என் [illegible]

சூனி யம்பரம் என்பவர் சொற்களால்
நானி லத்துழ லச்செயல் நன்மையோ
ஆனி யின்றிஅ விர்திருச் செந்திலாய்
ஏனின் ஆமென் றெனைப்புவி சொல்வதே. 34

வஞ்சி யன்னம ருங்குடை மாதருக்(கு)
அஞ்சி டுஞ்சிறி யாருடன் ஆடுமென்
நெஞ்சி னூடுநி றைபுகழ்ச் செந்தில்வாழ்
செஞ்சி சிக்குகன் எவ்வணம் சேருமே. 35

சித்தர் வந்துதி னம்புகழ் செந்தில்வாழ்
கத்த னேகரு ணாகரக் கந்தனே
பத்தர் பெற்றப யன்பெற வேண்டியே
நித்த மென்னது நெஞ்சகம் அஞ்சலே. 36

## 5 கோரம் - அறுசீர்.

செந்தமிழ்த் திருச்செந் தூரான்
தெரிசனத் தனந்தம் போது
வந்தருட் கிளியென் றென்னை
வாய்திறந் துரையா முன்னம்
இந்தமா நிலத்தோர் தம்பால்
இயம்பினே னென்னிற் பொல்லா
அந்தகன் தூதர்க் காளாய்
அருநர கடைவேன் அன்றே 37

நிலைபெறும் புகழ்ச்செந் தூரில்
நிமலசற் குரவன் அன்பால்
மலைதொறுந் திரிவார் தம்மை
மதித்திடா திகழும் பொல்லார்

34 சூனியம்பரம் என்பவர் – மாயவாதிகள்–கடவுள், பெயர் உருவமற்றதென்பவர்.

3 5. செம்சிகி - வளமான மயில் என்க

தலைபொடிப் பொடிய தாகத்
    தமிழ்க்கவி பகரும் நாள்ஒன்(று)
இலையெனில் அவனென் றன்பால்
    இயம்பிய தனைத்தும் பொய்யே. 38

பத்திநன் னெறியை விட்டுப்
    பலவிதம் பகர்ந்து ஞான
சித்தியை யிகழும் தீயர்
    திரட்படைச் செந்நீர் ஆறு
தத்தவெங் களத்திற் போர்செய்
    தனிப்பெருந் தகைசான் றுள்ளார்
சத்திவேற் குமரன் செந்திற்
    றலத்துயர் வுணர்கின் றோரே. 3

மதிப்பிள விரண்டு போல
    வளைந்தவா ளெயிற்றுச் சூரன்
துதிப்பவும் வளர்ந்த கோரச்
    சொருபமொன் றெடுத்த செவ்வேள்
கதிப்பயிர் விளைக்குஞ் செந்தூர்க்
    காவலன் கருணை வைத்தால்
விதிப்பிழை தவிர்ந்து யாவும்
    விழைந்தவா முடியு மன்றே. 40

உரல்நிக ரிடையும் ஒன்றோ(டு)
    ஒன்றுவா முலையுந் தோய்ந்து
மரமென வறந்த மேனி
    மாதர்தம் மயலுங் கொள்வேன்
அரவணி மயில்மேற் றோன்றி
    அருள்புரிந் தாள வேண்டும்
சரவண பவனே செந்திற்
    றலத்துறை தனிவே லானே. 41

39. தீயர் – பரசமயவாதிகள்
40. மதிப்பிளவு – சந்திரனது கூறுபாடு, வாள் எயிறு – வெள்ளைப்பல்
கோரச் சொருபம் – விஸ்வரூபம் என்ற பெருவடிவம்.

காரிருட் குவடு சென்னிக்
    கனலுடன் எதிர்ந்தா லென்னப்
பேரியல் மயிடத் தேறிப்
    பிறங்குபாழ் மறலிக் கஞ்சிக்
கூரிய தனிவேற் பூசை
    குறித்துளேன் குளிர்பூஞ் சோலைச்
சீரியைந் துளசெந் தூரா
    சிறிதுளம் இரங்கு வாயே 42

ஆரண முடிவோர்ந் துள்ளார்
    அறிவையும் அசைக்கத் தக்க
கோரவெம் பிணிகட் கஞ்சிக்
    குலைந்துனை அடைந்தேன் கண்டாய்
வீரவே லெடுத்துத் தோகை
    மிசையெழுந் தருளி வந்து
தேரணி. திகழ்ச் செந்தூரா
    திருக்கையா லெடுத்தாள் வாயே. 43

செம்புகர் வேழ மென்னைத்
    திடுக்குற வெருட்டும் அந்நாள்
நம்புசற் குருவாத் தோன்றி
    நவின்றசொல் மறந்த துண்டோ
தெம்புடைப் புலவர் போற்றத்
    திகழ்திருச் செந்தில் எந்தாய்
சிம்புளிற் குலவுஞ் சேவற்
    றிறற்கொடித் திருத்தோ ளானே. 44

42 கார்இருட்குவடு - கரிய இருண்டமலை. மயிடம் - ஆண் எருமை,

44. புகர் - புள்ளி - யானை வடிவில் கணபதியை ஏவப்பெற்ற காரணத்தால், இவரைக் கொல்ல வந்த சமயம், முருகன் குரு வடிவாய்க்காத்த இவரது ரலாறு. சிம்புளில் - சரபம் பறவை போன்ற வீரமுடைய

பாரவர் ககனத் துள்ளார்
 பாதலத் தினர்கொண் டாடும்
வாரணக் கொடிச்செந் தூரா
 மயிற்பரி உகைத்துள் ளானே
சூரனு தியரை வேலாற்
 றொலைத்தவெங் களத்துப் பேய்கள்
கோரமும் எனது பொல்லாக்
 குணங்களுக் கிணையா காதே. 45

## 6 கருணை - வெண்டளைக் கலிப்பா

கொல்லா விரதமொன்றே கோதற்ற தென்றுணராப்
பொல்லார் விழியெதிர்போய்ப் புண்படா தாண்டருள்வாய்
செல்லார் மதிலுளுத்த செந்திநகர்க் கோயிலுக்குள்
நல்லார் இருவர் நடுநின்ற நாயகனே 46

வேத நெறியினிலும் வேள்வியிடை மேடமுதற்
காதல்கொடி தென்னுநலம் கற்றோ ருடன்கூட்டாய்
பூதலமும் வானும், புகழும் பொருவில்செந்தூர்
நாதனே யென்றென்றும் நாவலர்க்கோர் நல்லானே 47

செந்நீர் அரிசி சிதறும் சிறுகுடிலார்
வெந்நீர் விரித்தாற்கு மெய்யருட்பே றீந்தனையே
எந்நீர்க் கிசைந்தநலம் யாதொன்றும் ஈயாயோ
முந்நீர்த் தரங்கம் முழங்குசெந்தூர் முன்னவனே 48

---

46. செல் ஆர் மதில் – மேகம் தங்கும் மதில் (உவமம்)

47. மேடம் - ஆடு முதலிய உயிர்கள். காதல் – கொன்று நடத்தும் யாகம்,

48. செந்நீர் – இரத்தம். சிறுகுடிலார் - சிறு வீட்டில் வாழும் வேடர் இவர்கள் மான் இரத்தத்தில் பச்சரிசி விரவி வழிபாடு புரிவர். (ஆற்றுப் படையிற் காண்க) விரித்தான் – விரிவுபடக் கூறியவர் நற்கீரர். அவருக்கு முருகன் அருள் புரிந்தார். என்நீர் – எவ்வுயிரையும் எதற்காகவும் கொல்லல் கூடாதென்ற தம் கருத்து முந்நீர் – கடல். ஆற்றுநீர் - ஊற்றுநீர் மழைநீர், என்ற மூன்றுலாயது.

நாமாது நாணுதலும் நந்துமலி சிந்துடுத்த
பூமா தழலும் பொறுக்கரிதா வாடுகின்றேன்
மாமா தகலாது மன்னுதிருச் செந்தூர்வாழ்
கோமானே யென்னுட் குறித்தவரம் ஈ தருளே. 49

நன்னெஞ்சர் வாடுதலும் நஞ்சிற் கொடிதாய
வன்னெஞ்சர் பல்லோர் மகிழ்வதுவும் கண்டேனே
என்னெஞ்சத் தெண்ணியவா றின்றருள வல்லாயோ
பொன்னெஞ்ச லெய்தாப் புகழ்த்திருச்செந் தூரானே 50

அவ்வண்ண மென்பால் அறைந்ததனை யெண்ணியெண்ணி
இவ்வண்ண மாகி யிளைத்தேன் இரங்காயோ
எவ்வண்ணஞ் செய்வதனுக் கெண்ணியிருக் கின்றாயோ
செவ்வண்ணப் பாவலவர் சேர்ந்தசெந்திற் சேவகனே 51

சிந்தூர மிட்டநுதற் சேயிழையார் மால்பெருகி
அந்தூரும் நெல்லொத் தலமந்தேன் ஆண்டருள்வாய்
பைந்தூர்க் கடம்பும் பனிக்குரவும் பூத்தபொழிற்
செ, தூரில் மேவும் சிவஞான தேசிகனே, 52

சூரனெதிர் சென்றொருசொற் சொல்லிவிடுந் தூதனைத்த,
வாரமிகும் தொண்டன் மகள்வாழ விட்டருளும்
பேரருட்செந் தூரானே பேதையேனைப் புவியில்
நாரணன்போல் வாழும் நலம்பெறச்செய் தாண்டருளே 53

ஓராறு வாயிருந்தும் ஊமையுரு வாகியருட்
பேராண்மை காட்டிப் பிறங்குதிருச் செந்தூரா
ஆராத னம்புரியேன் ஆனாலும் அன்பருடன்
சேராதி ராதேநின் சித்தமென்றன் பாக்கியமே, 54

49. நாமாது சரசுவதி, பூமாது புவிமகள், மாமாது திருமகள்.
50 பொன் எஞ்சல் பொருள குறைதல், 52 சிந்தூரம – குங்குமம்
53 தொண்டன – வீரபாண்டியப்புலவர் இவரது மகள், கணவனை விட்டுப் பிரிந்தமைக்காக, வீரவாகு மூலம அழைப்பித்துச் சேர்த்த செய்தி. (புலவர் புராணத்தறிக)
54 ஊமை உருவாகி - மதுரையில் உருத்தி சன்மராய் பிறந்து சங்கப் புலவர் ஐயம் மாற்றியது

## 7. சாந்தம் - கலித்தாழிசை

விள்ளு மெய்ப்புகழ் விழைத்துள் ளாருடன்
எள்ளு வாரையும் இரங்கி யாள்பவன்
புள்ளு லாமலர்ப் பொழிற்செந் தூரிடை
உள்ளு வார்மனத் துறையும் வேலனே. 55

உழத்தி யேசலுக் குவந்தொ ராடலும்
இழைத்த வேலவன் இருந்த செந்திலின்
பழக்க மேலிடும் பண்புள் ளார்களுட்
தழைக்கும் மெய்யருட் சாந்த நீர்மையே. 56

செங்கண் மாயவன் மருகன் செந்திலிற்
றுங்க வேலுடைத் தோள்முந் நான்கினன்
அங்க நாள்அவண் அடித்து ளான்கரங்
கங்க ணம்பெறக் கற்பித் தானரோ. 57

கோடல் தீர்நலங் குலவு செந்திலில்
ஆடல் வேலவன் அருமைப் பை தமிழ்ப்
பாடல் தீயினிற் பரவை நீரினில்
போடல் தன்னையும் பொறுத்த பண்பனே. 58

செய்யில் வாளைகள் உகளும் செந்தில்வாழ்
பொய்யில் வேள்எனுட் புகுந்து நீயெனை
வையி னும்சின மருவி டேன்என
மெய்யி யம்பிடல் வெருள விட்டதே. 59

---

56. உழத்தி - மீன்வலைச்சி கணவனிறந்த காரணத்தால், மீன் பங்கு வராதென்று கருதிப் பழனியில் தண்டபாணிக் கடவுளைப் பார்த்தழுதனள். அன்றிரவு அந்தக் குவியலில் ஒரு கடை நிறைய ஓராள் போல வந்து அள்ளிச் சென்று அவள் வீட்டிற் சேர்த்த வரலாறு.

57. மீனை அள்ளும்போது பார்த்து பிடிக்க ஓடிய காவலாளன் கைக் கெட்டாமல் வலைச்சி வீட்டளவில் ஓடி அடிக்கப்பெறறனர் முருகன் அடித்த அவனுக்குப்பொற் கங்கணம் போட ஆணையிட்ட செய்தி

முறுக்கு வாளெயிற் றவுணர் மொய்ம்பெலாம்
அறுக்கும் வேற்படை யணிச்செந் தூரவன்
கறுக்கும் நெஞ்சுடைக் கயவ னேன்பிழை
பொறுக்கு மோர்வியன் புகலொண் ணதரோ. 60

நீந்த ருஞ்சினக் கடலை நீக்கிநின்
சாந்த வாரிதி தலைத்தந் தாள்வையோ
சேந்த னேதிருச் செந்தின் மேவிய
வேந்த னேதுணை வேறொன் றில்லையே. 61

மறுவி லாநல மருவு செந்தில்வாழ்
அறுமு கத்தொரு முருகன் அன்பர்தம்
பொறுமை யாங்கனல் அருளில் பூரியர்க்(கு)
இறுதி நல்குமென் றியம்ப லாகுமே. 62

சிமைய நாதனைச் செந்தில் வேலனை
உமைம ணாளனுள் உரிமை மைந்தனைச்
சமையம் யாவினும் சார்ந்துள் ளானெனக்
கமைகு லாவிய கருத்தர் ஓர்வரே. 63

## 8 அற்புதப் - கலி

சீர்மே வியசெந் திலிடந் திகழும்
கூர்மே வியவேல் கொடுநின் றபிரான்
ஆர்மே வியசெஞ் சடையார் முதலோர்
நார்மே வியபா தநலத் தினனே. 64

திருமே வியசெந் தினகர்க் கரசாம்
முருகப் பெருமான் முதிர்சொற் புலமைப்
பெருமைக் குறுமா முனிநேர் பெரியோர்
அருமைத் திருவுள் ளம்அமர்ந் தவனே. 65

63 சிமயநாதன் – மலைக்கிறைவன், கமை பொறுமை.
64. ஆர்மேவிய – கொன்றை சூடிய.

முருகா எனவோ தியமொய் குழலாள்
வருகா தலவன் கொடுமைக் கயர்போ(து)
அருகா கியும்அங் கையளித் தருள்வான்
திருகா துயர்செந் தினகர்க் குகனே. 66

கீரன் துதிகண் டுகிளத் துதமிழ்ச்
சாரங் கொடுசத் திபுனைந் துயர்தோள்
வீரந் திகழும் படிவெற் படுவான்
ஆரம் பொலிசெந் திலமர்ந் தவனே. 67

அருணை புரியா லயமு டுளதாம்
ஒருகோ புரமுற் றுயரும் புலவோன்
இருள்தீர் நலமெய் தஇசைத் தருள்வான்
தெருள்வார் மலிசெந் திலுறைந் தவனே. 68

பிள்ளைக் கவிபே சியபெற் றியினன்
கொள்ளைக் கனகங் கொளுமா றருள்வோன்
வள்ளைத் திரள்மன் னியசெந் திலிலோர்
வெள்ளைக் களிறா ரும்விறற் குகனே. 69

புரையின் றியசொற் புலவன் கவியிற்
றிரையொன் றறவன் றருள்செய் தபிரான்
வரையுங் கடல்நீ ருமலர்ப் பொழிலோ(டு)
இரைகின் றதொர்செந் திலில்எம் பரனே. 70

திரமிஞ் சியசெந் தமிழின் கவியால்
மரமன் றுமுறிந் திடவந் தருள்வான்
இரவும் பகலென் றுளிர்செந் திலில்வாழ்
குரவன் குறமின் புணர்கொற் றவனே. 71

---

66. மொய்குழலாள் – முருகம்மையார். கணவன் கடிந்து கூறிக் கையை வெட்டியபோது, கை தந்த வரலாறு.

68. புலவோன் - அருணகிரிநாதர், பெற்றியினன் - பகழிக்கூத்தர்.

70 திரை அற – வீரபாண்டியப் புலவருக்காகத் திரை விலக்கியது செந்தூரில்.

71 மரம் ஒன்று - புளியமரம் முறியப் பாடியவர். கந்தசாமிப் புலவரும் வீரபாண்டியப் புலவரும், விவரம் புலவர் புராணத்தில் காண்க.

கலியென் றுகலங் குறாதே வரெலாம்
மெலிவின் றிவிளங் கிடுவீ றருள்வான்
ஒலிதுன் றுகடற் றுறையால் உயர்சீர்
மலிசெந் திலில்வந் தமர்சுந் தரனே, 72

## 9 சிங்காரம் - கலிநிலைத்துறை

### அகப்பொருள்துறை

செந்தமி ழின்சுவை நன்குணர் கின்றவர் சேர்செந்திற்
கந்தன்வ ரும்பவ னிக்கண்ம யங்கிய கன்னிக்கும்
பைந்தகை துன்றுகி ளிப்பரி யிற்றிரி பாவிக்கும்
ஏந்தவி தம்பெரு கும்பகை வந்ததி யம்பீரே, 73

### தொடை மாலை வேண்டல்

நார்மலி யும்பல தொண்டர்வ ரத்தகும் நன்றாலே
சீர்மலி யும்புகழ் கொண்டுது லங்கிய செந்தூரா
போர்மலி அங்கச னாலென தோர்மகள் புண்பட்டாள்
ஏர்மலி நீபம லர்த்தொடை நல்கஇ ரங்காயே. 74

### தாயிடம் குறையிரத்தல்

அன்னமும் அஞ்சுக முங்குக வேளிடம் அன்றேகிச்
சொன்னத னைக்குறி யாமையுன் நெஞ்சிடை தோன்றாதோ
தென்னர்வ ணங்கிய சீர்நில வப்பெறு செந்தூருக்(கு)
இன்னமும் ஏகிலை யேனெனை வம்பினில் ஈன்றாயே. 75

---

73. பாவி - மன்மதன், பகை - முருகன்மீது மோகிக்கும்படி அம்பு ஏவியது

74. அங்கசனால் - மன்மதனால், தொடை - மாலை.

75. அஞ்சுகம் - கிளி, தென்னர் - பாண்டியர்கள்.

### பவனி கண்டிரங்கல்

செங்கையில் வேலொடு செந்தின கர்ப்பல தெருவூடே
கங்கைம கன்றினம் வந்துல வுஞ்செயல் கண்டோமே
சங்கைகு லைந்தும யங்கிம தன்ருெடு தளவாலே
கொங்கையி லங்கவி ழுங்(கு)இடை மங்கையர்
கொள்வானே. 76

### கனவுகண்டு மெலிதல்

தினகரன் உடுபதி நுழைரு பொழில்மலி செந்தூரில்
அனவர தமும்நடம் நவில்குரு பரன்மிகும் அன்பாலே
கனவிடை மதகலை வழிதரு கலவிகள் கண்டேனோர்
நனவினும் அவனை அணைவது கருதிந லிந்தேனே. 77

### மன்மதனிடம் வன்மைகூறல்

சிங்கமு கன்குறு கும்படி பேரொலி செய்தோனைச்
சங்கரன் நல்கநி னைந்தவு டன்பொடி தானாகி
அங்கம ழிந்தவ செந்திலி டந்தினம் அவனேகும்
மங்கள வீதியில் நீயவன் மால்தர வரல்நன்றே, 78

### பாங்கியர் முற்பகர்தல்

பையர வம்புனை வானுடன் ஓர்மொழி பகர்செந்தூர்
ஐயன ணிப்பவ ளக்கனி வாயிதழ் ஆராமே
செய்யநெ டுங்கதிர் வேல்புனை தோள்நிரை சேராமே
மையல்த விர்ந்தும கிழ்ந்திடு மாறிலை மானாரே, 79

---

76 சங்கை குலைந்து - நாணத்தையிழந்து.

77 தினகரன் - சூரியன், உடுபதி - சந்திரன், மதகலை - காமநூல்

78. குறுகும்படி - அச்சமடையுமாறு, பேரொலி - உங்காரம் அங்கம் இழந்தவ - சாமபராகி உடலிழந்த மன்மதனே.

79 ஆராமே - அநுபவப்பேறு.

### தாய் பரிவு கூறல்

எத்திசை யும்புகழ் செந்திலி டந்திகழ் எங்கோமான்
பத்திபு ரிந்தஇ ரண்டும டந்தையர் பாகத்தே
நித்திய முங்குல வும்படி வைத்தமை நிசமாகில்
இத்திரு வுங்களி கூர்நல மெய்துவள் எனலாமே 80

சந்தன வெற்புறு செந்திலி டந்திகழ் தனிவேல்வேள்
மந்தர மொத்துயர் பன்னிரு தோள்புணர் மாருருக்(கு)
அந்தரர் கோனயன் மால்அர னாதியர் அனைவோரும்
தந்தம தன்னையெ னப்பர வத்தகு தகையுண்டே. 81

## முற்றிற்று

### அறுசீர்க்கழிநெடில்

வீரம்அரு வருப்புநகை பயம்கோரம்
அருள்சாந்தம் மிக்கோர் வேண்டும்
சாரமலி அற்புதம்சிங் காரமெனும்
நவரசத்தாற் றமிழ்ச்செந் தூரான்
பேரமையத் தொடுத்தகவி யெண்பதிற்றுண்
றுங்கருதும் பெற்றி யோர்க்குப்
பாரவர்வா னவர்பிலத்தர் புகழ்ந்தோதத்
தக்கநலம் பலிக்கு மன்றே.

---

80. இத்திருவும் - இலக்குமி ஒத்த என் பருவப்பெண்ணும்.
81. அந்தரர்கோன் - தேவஇந்திரன்.

உ
அயிலுமயிலுந் துணை

# திருச்செந்திற் பிரபந்த வகை பதினாறில்

# 10-வது தசாங்க வகுப்பு

**முகவுரை**

> **விசாகப் பெருமான் விளங்குதிருச் செந்தூர்த்**
> **தசாங்க வகுப்பிதனைச் சாற்றில் — பிசாசனைய**
> **மாய வுலக மயக்க முழுதுமற்றுத்**
> **தூயவருட் டேறுமிக்கெய் தும்.**

**தசாங்க வகுப்பு** என்ற இந்நூல், திருச்செந்தூர்க் குமர குருபரனாகிய முருகக் கடவுளின் பத்து அங்கங்களைத், தனித் தனியே வகுத்துக் கூறுவதென்ற பொருளில் அமைந்திருக் கிறது தசம்-பத்து, அங்கம்-உறுப்புகள் ஆகும். அவை — நாடு-நகர்-மலை ஆறு, மாலை-பரி-யானை-ஆணை-கொடி-முரசு. என்பனவாம், அரசர்களைக் குறித்தும் இந்தத் தசாங்கங் களைக் கூறுவர் புலவோர். இந்நூலிற் கூறப்பெறுவது முருகனுக்குரிய பத்து அங்கங்களேயே யாகும், திருச்செந்தி லாதிபனுக்கேற்ற முறையில் அவை ஒவ்வொன்றின் இயல்பு களை அழகுறச் சந்தயாப்பில் கூறியுள்ளனர், சந்தப்பாடல் பாடுவது இந்நூலாசிரியருக்கு ஓரு தனிச்சிறப்பும் உரிமையும் ஆகும்.

வகுப்பு என்ற நடை, எடுத்துக் கொண்ட பெயருக்கேற்ற பல சிறப்புகளைத் துலக்கிச் சந்தத்திற் பாடுவதென்பது மரபு இம்முறையில் பல வகுப்புகள் அருணகிரிநாத சுவாமிகள் பாடி யுள்ளனர் கலம்பகம் பாடும் புலவர்கள் புயவகுப்பு என்ற உறுப்பில் இப்பகுதியைப் பாடாமல் இரார், தில்லைத் திரு வாயிரம் திருவரங்கத் திருவாயிரம் என்று இவரியற்றிய பெரு நூல்களிலும், சென்னை யாதிய தலங்களிலும் சிறு பகுதியாக வும் பல பெரிய குழிப்பிற் செம்மையாகப் பாடிய வகுப்புகள் பலவுண்டு. வண்ணம் என்பது பல அகப்பொருளின் துறை

களை யமைந்துப் பாடப்பெறும் பெரிய பா வகைகளாகும் அது போல, அறுபத்துநான்கு கலைகளையுடைய பாடல்கள் முப்பது கொண்டதும், அந்தாதித் தொடர்புடையதுமான "ஒலியந் தாதி" என்ற நூல் இவர் பாடிய சிறந்த நூல். தமிழ்ப் பிர பந்த வகையில் அன்று முதல் இலக்கணமாயிருந்ததே யன்றி இது வரை யாருமே பாடவில்லை. அந்நூற்குச் சாத்து கவி வழங்கிய புலவர்களில், சித்தாந்த சரபம் - அஷ்டாவதானம் கலியாணசுந்தர முதலியார் என்னும் பெரியார் சந்த நடையி லேயே அக்காலத்துப் புலவரை விளித்துக் கெட்கிறுர் –

சந்த நாவலர் என்ற பேரினை யுடையோரே
தங்கள் நாளினில் இந்த நூலமுறை இலையேயோ

என்று நகைச்சுவை தோயக் கூறுவதால் அறியலாம், 10 அங் கங்களைக் கூறும் இந்நூல், பத்தாவதான வரிசையில் அமைந் திருக்கிறது.

" சிவன்மக னெனவே தொழுமெனுட் குகவேள்
அன்னவன் செய்தவப் பேருய்
அவனது குருவாய்ச் சமயமூ விரண்டும்
முகங்களென் றவிர்பொது முதலாய்
நுவல்திசை யாறும் அவைகளாக் காட்டி
விகற்பமென் பவையெலாம் நூறித்
தவபல மொன்றே சத்திய மென்னும்
தன்மையுந் தெரித்தனன் அன்றே.

என்றபடி முதலில் முருகப் பெருமானைச் சிவகுமாரனுக வழி பாடும் உபாசனையு மியற்றினர் சிவபிரானது தவமாக - நெற்றிக்கண்ணில் தோன்றியவன் முருகனென்றுணர்ந்தனர். பின்பு முருகனது ஆறுமுகங்களும், சௌரம்-சைவம்-சாத் தேயம், வைணவம்-காணுபத்தியம்-கௌமாரம் என்ற சமயப் பகுதியென்றும், பின் ஆறு திசைகளே ஆறுமுகமென்ற பெரு நிலையும் நாளடைவிற் பெற்றுச் சமயபேதமற்ற சமரச அநுபூதி கைவரப் பெற்றனர். இவரது நிட்டையில் முருகன் தோன்றி மேற்கண்ட ஆறுசமயக் கடவுளரான சூரியன், சிவன், அம்

பிகை, திருமால், கணபதி யென்பவர்களது வரலாற்றுப்படி தனித்தனிக் காட்சி தந்தும் – பின் ஆறுமுகம் பன்னிரு கரத்துடன் மயிலிற் சேவை தந்து – பல அரிய உபதேசம் வழங்கிய செய்தி இவரது வரலாற்றுக் குருபரதத்துவம் கூறுகிறது. ஆசிரியரே பாடியுள்ள அநுபவ நூல்.

**குருவும் கணபதியும் கொற்ற மழுவானும்**
**திருமடந்தை காவலனும் சேணில் — வருசுடரும்**
**தேவினத்தின் தாயான சிற்சத் தியும்முருகோன்**
**மூவிரண்டாக் காட்டும் முகம். — என்பது தனிக்கவி.**

மேற்கண்டபடி முருகப்பெருமானைக் குறிக்கொண்ட நெறி கௌமாரம். ‘குருவெல்லாம் சுப்ரமண்யக் கொழுந்தேயாகும் என்றபடி, குருவாக முன்னிலைப் படுத்தித் திருவருள் வழங்கும் குருவடிவமே குமாரன் என்று கொள்ளும் முறை, அதீத கௌமாரம் என்று கூறுவர் தமது சாத்திர நூல்களில் - தத்துவராயர் போன்ற பலர், கைக்கொண்ட முறையிதுவாகும். இக் கருத்தை அடிப்படையாகக் கொண்டது மேல்நிலைக் கௌமாரம்,

**குருவைப் பரமென்று கூறும் சமயம்**
**திருவைப் பெருக்குமென் றுந்தீபற**
**சென்மிக்க வொட்டாதென் றுந்தீபற.**

**–சகதவுந்தி, இவர் செய்த நூல்**

சரியை–கிரியை யோக ஞானங்களின் தத்துவத்தையும், உபாசனையின் அவசியத்தையும், அருவ பாவனைவிட, உருவ வழிபாடே அந்த நிலையினைக் கூட்டும் என்றும், பல தெய்வம் உண்டென்று மயங்காமல், ஒன்றே குறிக்கொண்டு, மற்றதை அங்கமாக்கொள்களென்பது போன்றதிடமான கருத்தைவிளக்கி சாத்திர நூலாக - தியானுநுபூதி–நானிலைச் சதகம். கௌமார முறைமை சதகவுந்தி போன்ற நூல்கள் பலஇயற்றியுள்ளனர், எவ்வளவு பெரிய அநுபூதியிருப்பினும்வழிபாடுஇன்றியமையாத தென்பது இவரது கருத்து, தமது அநுபவ வாழ்விலும் அப் படியே வாழ்ந்தவர், இவரது காலம் 28—11—1839 முதல் 5—7—1898 வரையாகும், இந்நூல் தேவத்தான வெளியீடாக வெளி வருகிறது.

உ

அயிலுமயிலுந் துணை

# 10. தசாங்க வகுப்பு

### காப்பு – வெண்பா

செந்தமிழ்ச்சொற் பாவலவன் தேசிகருட் சீரியவன்
சந்தவரைச் செந்திற் றலங்காக்கும் – கந்தன்
தசாங்க வகுப்பதனைச் சாற்றுகைக்குத் தாழ்கைக்
கசாங்கக் கணபதியே காப்பு.

## நூல் 1 நாடு
## தமிழ்நாட்டு வகுப்பு

**தந்தன தானன – – – – தந்தன தானு**

திங்களும் நீரும் அமைந்தச டாதரர்
திண்புய மீதும்இ ருந்தது மேலோர்
சிந்தையி லாடிய பைங்கிளி நேர்உமை
செம்புக மூாலும்நிறைந்தது மால்நேர்

---

காப்பு: பாவலன் – பகழிக் கூத்தர் – பொய்யா மொழிப் புலவர், போன்ற 'புலவர் புகழை விளக்கும் பொருட்டு, 'பூமாது போற்றும், என்றும், பொன் போலும் கள்ளி'' என்றும் தொடங்கும் இரு வெண்பா ஓதியவன் ஆகவே பாவலவன் என்றார், அன்றியும், கச்சியப்ப சிவாசிரியர் கந்த புராணம் - முதற் கவி 'திகட சக்கரம்' என்ற பாடலின் இலக்கணம் விளக்கப் புலவராகவும் தோன்றியவன் – என்பதால் அறிக.

தேசிகருட் சீரியவா – சனகாதியர் நால் வருக்கும் ஞான விளக்கம் நல்கிய பரமனிடத்தும் பிரணவப் பொருள் கூறிய காரணத்தாலும், ''குருவெல்லாம் சுப்ரமண்யக் கொழுந்தே யாகும்'' என்ற முறைப்படி - எம்மதக் குருவும் தானே யென் பதை அநுபூதியாளர் கூறுவதாலும் அறிதற்பாற்று. தாழ்கை – யானைத் துதிக்கை, பூமியைத் தொடுமளவு நீண்டிருக்கும், கச – அங்க கணபதி - அத்தகைய யானை வடிவினரான விநாயகர் என்க,

கவி 1 அடி 1 சோமசுந்தரபாண்டியனுக இறைவன் வந்த போது – அவர் ஆட்சியில் இருந்தது பாண்டிய நாடு. எனவே அவர் தோளினிடம் விளங்கியது,

அடி 2: பசிய கிளி போன்ற உமை – தடாதகையாகத் தோன்றி யரசுபுரிந்ததாலும் சிறப்புற்றது.

தெம்புறு வீரர்க ளும்பிர மாநிகர்
தெண்பெறு வாருமி குந்தது தேனூர்
செங்கம லாதனை வெண்கம லாதனை
தென்றரு சீலமி சைந்தது சீர்தோய்

தங்கம காமலை யின்றலை மோதிய
தண்டஅ கோரம்வி ளைந்தது தார்சாய்
தண்புனல் வாரிதி பொங்கிய நாளது
சஞ்சல மோடழ வென்றது வானூர்

தங்கும்வ லாரிய ணிந்தகி ரீடம்அ
தம்பட லால்உருள் கின்றது மேனாள்
சண்டனை மோதும்அ ரன்கலி யாணஇ
தஞ்செயு மாமுனி வந்தது தீரா

மங்களம் ஈடறு சந்தனம் வேளிவர்
வண்சிறு கால்அவிர் குன்றது தூநீர்
வந்தலை யாலவிர் கிம்புரி வீசெழில்
மன்பொரு நாநதி கொண்டது கோடா

---

அடி 3. பல வீரபாண்டிய அரசர்-வேத வைதிகப்பனவர் வாழ்வது

அடி 4. செந்தாமரைத் திருவும், வேண்டாமரைக் கலை மகளும் வாழ்வது, செல்வரும் கல்விப் புலவரும் மிக்கது.

அடி 5 மேருவைச் செண்டால் உக்கிர குமாரபாண்டின் அடிக்கும் தீரத்தைத் தந்தது.

அடி 6. கடல் பொங்கி மதுரையை அழிக்க வந்தபோது அவனால் வேல் விட்டுக் காக்கப்பட்டது

அடி 7. வலாரி-இந்திரன் அணிந்த முடி கீழே விழும்படி அவனால், வளை வீசும் செயலுற்றது

அடி 8. பரமன் திருமணம் நடைபெறுமாறு அகத்தியர் இமயத்திருந்து வரப்பெற்றது

அடி 9 நலமிக்க சந்தன மரம்,மன்மதனுக்குரிய தென்றல் விளங்குவது.

அடி 10. கிம்புரி-யானைக் கொம்பு போன்றவற்றை அலை கள் ஒதுக்கும் தாமிரபரணி நதியுடையது.

வந்தனை தேர்ஒரு வன்கவி யால்அமண்
வஞ்சகர் மாய்வது கண்டது மால்போல்
மந்திரி யோடொரு பெண்கொடி யாலருள்
மந்திர நீறும லிந்தது மீனுல்
அங்கச னேயிவன் என்றெளிர் வானுட
லம்பெறு கூனலொ ழிந்தது மாயா
அந்தணன் மேயபெ ருந்துறை யான்முதல்
அன்பர னேகர்பி றந்தது வீரர்
அண்டச ராசரம் எங்கணும் ஓர்பொருள்
அன்றியி லாமைதி கழ்ந்தது சூர்மா
அன்றற வேல்விடு செந்தில்வி சாகனை
அண்டுந ரால்உயர் தண்டமிழ் நாடே 1

## 2. ஊர்

**தந்தனு தனதான தந்தனு தனதான**
**தந்தனு தனதான தந்தனு தனனு**

எந்தலோ கரும்நாடி நம்பிநா டொறும் ஓதும்
இன்பவாழ் வொருகோடி துன்றுசீ ரினதே
எஞ்சுரு வளமேவு சந்தனு சலமீதெ
முந்தனோ புரமோடி யேணந்தமேன் மையதே

அடி 11. சம்பந்தரால் சமணர்பலர் வாழ்விழக்கும் செயல் புரிந்தது.

அடி 12. மந்திரியான, குலச்சிறை, மங்கையர்க்கரசி, இவரால் திருநீறு விளக்க முறச் செய்தது.

அடி 13. மன்மதன் போன்ற நிலையில் கூன் பாண்டியனை, நிமிரும்படி புரிந்தது

அடி 14. குருவடிவமாகப்பரமன் ஆளுமாறு மணிவாசகர் போன்றவர் பிறந்த இடமாவது.

அடி 15. எல்லா உயிரும் இறைவன் தொடர்புடைய தென்பதை - பாண்டியன் அடித்தபோது அடி எங்கும் தாக்கு மாறு. செய்தது, (பிட்டுக்கு மண் சுமந்த செய்தி)

அடி 16. சூரனை மாமரம் அழிய வேல் விட்ட முருகன் அன்பரால் பாராட்டுவது பாண்டிய நாடே என்க.

கவி 2. அடி 2. எஞ்சுரு – குறைவு படாத, இணைந்த – ஒப்பான; உயர்ந்த

இண்டைகூ டியஈசன் வண்டுழா யணிமாயன்
எண்கணன் எனுமூவர் வந்துபே னுவதே
இந்திரா தியராய உம்பர்தோய் துயர்தீர
என்று,மா மரவேர்க ளேந்தஆண் மையதே.
தந்ததா னனதான என்றுதேன் இசைபாடு
தண்குலா வியசோலை மிஞ்சுபா லினதே
தஞ்சமா மெனமேகம் உண்டுலா வியவீறு
தங்குவா ரிதிநீர்மு ழங்கும்ஓ சையதே
சங்கைதீர் பொருள்ஒரும் விந்தைநீர் மையரான
சந்தநா வலர்யாவ ரும்பரா வியதே
சண்டன்மா மலர்வாளி ஐந்துளான் முதலாய
சண்டியா மவர்தாம்நெ ருங்கொணா ததுவே.
சிந்ததே வெகுவாவி ளம்புபா வலன்வாய்கொள்
செங்கிலா லவிஞேதம் ஒன்றுமே வியதே
சிந்தைநோ வுடனேபின் நின்றுபா டினன்ஆசி
சிந்துரு விளையாடல் கண்டபான் மையதே

அடி 3. இண்டை - சிரமாலை, துழாய்–துளசி, எண்கணன் – பிரமா,

அடி 4. மாமர வேர் - சூரனை மாமரத்தின் அடி.

அடி 5. தேன் – தேனையுதவும் வண்டு; பால்–பக்கம்.

அடி 7. சங்கை - சந்தேகம, விந்தைநீர் – அருட்குண முடைய.

அடி 8 சண்டன் - எமன், வாளி ஐந்து – பூ அம்பு ஐந்துடைய மன்மதன். (எத்தகையோரிடத்தும் நெருங்கித் துன்பம் செய்பவர் ஆதலால் சண்டி என்றார்)

அடி 9, செங்கிலாலம் – செந்நீர்; தம்பலம் – உமிழ் நீர். கந்தசாமிப் புலவரென்பார் தம்பலம் போட்டு உமிழ்ந்தபடியே, முருகன் மீது சிந்து பாட்டோதினர். அருகில் மறைந்திருந்து கேட்ட முருகன் உடையில் பட்டதாக ஆலயத்து முருகன் உடையில் அக்குறிப்பு விளங்கியது அன்பர் கண்டு வியந்தனர். செந்தூரில் நடந்ததென்ப – புலவர் புராணத்து விரிவு காண்க.

அடி 10. அவரது குமாரர் ஆறுமுகப் புலவர். முருகன் உலா வரும்போது முன் நின்று பாடியாடினர். தாழ்ந்த குலத்தினனென்று பின்புறம் செல்லப் பணித்தனர். பின் சென்று பாடினர். முருகன் வடிவம் பின் திரும்பியது

தெங்கில்நீ டியதாறு திர்ந்துவீழ் தரஓது
சிங்கநேர் புலவோன்ம கிழ்ந்துநா டியதே
தெம்புரு தலமேவு தந்தைதா யினதாவி
தின்றஊ மையும்வாய்தி றந்துபா டியதே,
மந்தமா ருதமோடு செம்புமா நதியீயும்
வண்குலா மலைமேய கும்பன்ஆ வலதே
வந்தியா வருசூதன் முந்துநாள் உறுதீமை
மங்கிஓர் சுமைஆட கங்கொடே கியதே
மந்திரா கமசீலம் இன்றிவா டுநர்தாமும்
மண்டலா திபர்நாணும் விஞ்சைதே றுவதே
மஞ்சினேர் நடமாடு கின்றதோ கையிலேறும்
எமந்தனுள் கிறதான செந்தில்மா நகரே. 2

## 3. மலை

### சந்தனமலை வகுப்பு

**தந்தன தந்தன தந்தன – – – – தனதா**

தங்கநெ டுங்கிரி யுஞ்சிலை வந்துயர்
தண்குவ டுங்கரு துந்தகை பெறுமே
சம்புமு குந்தன்அ யன்பல இந்திரர்
தங்குறை விண்டுதொ ழும்புகழ் உறுமே

அடி 11. தேங்காய் வேண்டியதற்காக-உரியவன் சொற்படி, தானே மரத்திலிருந்து உதிரும்படி பாடிப்பெற்றவர் -- வீர பாண்டியப் புலவர்.

அடி 12. தெம்பு உருது அலம் மேவு – மனம் நொந்து தவம் செய்த தூய தந்தை மகிழும்படி ஊமைக் குழந்தை (குமர குருபரர்) பாடச் செய்தது.

அடி 13. தென்றலையும், தாமிரபரணி நதியையும் தரும் பொதிகை அகத்தியர் விரும்பிப் பணிவது.

அடி 16. மஞ்சின் நேர் – மேகத்தின் முன்பாக தோகை – மயில்

கவி 3. அடி 1, தங்க நெடும் கிரி – உயர்ந்த மகமேரு, சிலை......குவடு – இமயமலை.

அடி 2. சம்பு - பரமன், முகுந்தன் - திருமால், அயன் - பிரமன்.

தந்தியு டன்பிடி யும்புண ரும்படி
தங்குமி டங்கள னந்தமல் கிடுமே
தந்தன வென்றிசை வண்டுப யின்றத
டம்பொழி லின்புடை எங்குமெய் திடுமே

செங்கன கந்தர ளம்பவ ளங்கொடு
சிந்துறு வெண்டிரை யின்றிரள் வருமே
திண்கழல் கொண்டுபொ ருஞ்சமர் ஒன்றுபுள்
சிம்புள்வி யந்துகொ ளுந்தொனி தருமே
திந்திமி யென்றுந டம்புரி கின்றசி
கண்டிய னந்தன்ந டுங்கவு லவுமே
தென்றமி ழின்சுவை நன்குணர் பைங்கிளி
சிந்தையு டன்பொழி யுந்துதி மிகுமே

கொங்கணர் வங்கர்க லிங்கர்தெ லுங்கர்கொ
ணர்ந்து சொரிந்தபொ லங்குவை கொளுமே
கொன்றிரை யுண்டுவ ளர்ந்திடும் வஞ்சர்கு
லங்களை யுந்தவர் தங்குறும் இடமே
குஞ்சரி யின்குல மங்கையர் தம்புடை
கொண்கரு டன்றுயில் பஞ்சணை பொருமே
குங்கிலி யன்புரை யும்பல தொண்டர்கு
ணந்திகழ் கின்றவி தம்புரி தலமே.

பங்கய மங்கையர் எண்டிரு வும்பொலி
பண்புபொ ருந்தியி லங்கிய நலமே

---

அடி 3. தந்தி-ஆண் யானை, தந்தமுடையது. பிடி-பெண் யானை.

அடி 5. கனகம் – பொன், தரளம்-முத்து, வெண்திரை - வெண்மையான கடலலை.

அடி 6 கழல் கொண்டு பொரும்......புள் - கால் நகத்தால் போர் புரியும் சேவல். சிம்புள்-சரபத்தோடு இணைய – கூவும் ஓசை.

அடி 7. சிகண்டி - மயில், அநந்தன் – ஆதி சேடனாகிய பாம்பு.

அடி 9. பொலம் குவை – பொன்னின் தொகுதி,

அடி 11. குலமங்கையர் – தேவமாதர்கள்;

பைம்புயல் வந்துபொ திந்திடில் அம்புவி
பண்டள வும்பெரி யன்றுணை தருமே
பந்தமொ ழிந்துநி ரந்தர விந்தைப
திந்தபெ ருஞ்சுக மும்பெற விடுமே
பங்கமில் செந்திலில் வந்தகு கன்புய
பந்திய தென்றெளிர் சந்தன மலையே 3

## 4. பொருநை மாநதி வகுப்பு (தாமிரபரணியாறு)

**தனதனந் தனதான - - தனதன தனன**

அதிகஇங் கிதமான மதுரவண் டமிழ்ஈயும்
அனகனங் கையின்மேவு - கரகமீ னியதே
அமரர்மங் கையரோடு பொழில்நறுந் தளிர்மீதில்
அநுதினந் துயில்சீர்கொள் – பொதியைமேல் வரலே
அருணைய பதிவாழும் ஒருபசுங் கிளிநாதன்
அடிமையென் பவர்பாடல் நிகரஒ லிடலே
அலைகொள்கிம் புரிகோடு குழல்சரஞ் சிலையாதி
யவைகொணர்ந் தெறிபான்மை தவறுரு ததுவே
மதிபுனைந் தவர்நீடு சடையில்வந் திடும்ஆறு
மனமெலிந் திடும்வாழ்வு புணரும்ஈ டுளதே
வகுளபுங் கவனன மருமகன் குடைபோலும்
வதனமங் கையர்கேள்வ ரொடுகுலா வுவதே

---

அடி 14, பெரியன்-நெடுமால், கருமேகம் தங்கிய போது திருமால் போல உயர்ந்து பொலிவு தரும்

அடி 15. நிரந்தர ——சுகம் என்றும் மாறாத பேரின்பம்

அடி 16, புயபந்தி - தோள் வரிசை - (மலைக்கு உவமானம்)

கவி 4. அடி 1. அனகன் - அகத்தியன், கரகம் - கமண்டலம், தாமிரபரணி அதிலிருந்து தோன்றியதாம்.

அடி 3 ஒலிடல் - வண்ணப் பாடல் போல இரைந்து ஓடும் நீர்ப்பெருக்கு.

அடி 4 கிம்புரி - யானைக் கொம்பு. அலைகளில் ஒதுங்குவது

அடி 5. சடையில் வரும் ஆறு – ஆகாய கங்கை

அடி 6. வகுளபுங்கவன் - மகிழம்பூ மாலை கொண்ட மன்மதன், குடை - சந்திரன்.

வனசமுங் கழுநீறும் மலிதடம் பணைதோறும்
மருவிஅங் குறுகூழின் விளைவுகா ணுவதே
வளைகொடிந் திரராயன் முடிகவர்ந் துயர்வீர
வழுதிதன் குடைநீழல் அலதுதோய் விலதே
நதியினங் களின்மேல்இ தென்னவுண ர்ந் திலரேகி
நளையினும் பிணியாவும் அகலவூ வுவதே
நகுவலம் புரிமீது சிறையறைந் (து)அனமேவு
நளினமிஞ் சியவாவி பலவும்ஆ குவதே
நகிலகுங் குமரேகை வலவைபங் கினில்வாழும்
நலமிகுங் களியானை யதுகையூ டுறலே
நரருடம் பெரிதோயில் வெளிறும்அங் கமும்வாச
நறைமலிந் தலர்பூவ தெனநிலா வுவதே
கதிவிழைந் தருளாடல் பெறமுயன் றிடுசீலர்
கலைமணங் கொடுவாணி யெனமண்மீ துறுமே
கமலமொன் றியனேக பலமடைந் தரியோடு
கலவிகொண் டுயர்வான திருவைநே ருவதே

---

அடி 7. தடம்-குளம் ,பணை - வயல், கூழின் – நெற்பயிர் களின்.

அடி 8. வீமவழுதி – உக்கிர குமார பாண்டியன்.

அடி 9 நளையினும் - பெருமையறியாது முழுகினுலும்.

அடி 10. வலம்புரி - சங்கு, நளினம் – தாமரைப்பூ.

அடி 11. நகிலம் - தனம், வலவை வல்லவை. யானை. – விநாயகர், கையூடு – (காகமாகிக் கமண்டல நீரைக் கவிழ்த் தனர் கணபதி. நீர் சிந்தியதற்காக அகத்தியர் வருந்தினர். பெருகிய காவிரி நீரைக் கணபதி முகந்து கொடுக்கப் பெற்றே கினர் குறுமுனி·

அடி 12. எரி-நெருப்பில் இட்ட போது, அங்கம்-எலும்பு

அடி 13 கலைமணம் - உடையின் வாசனை, (காவியுடை மணம்) வாணியென - உடையின் செம்மை மாறி, கலைமகள் போல் வெண்மை நிறமேவி, உலர்த்தப் பெறுவது. (மண் மீது உறும் என்றதால் பூமியில் உலர்த்தல், மீண்டும் காவி மண் தோய்த்தல்) எனக்கொள்க.

அடி 14. திருமகளுக்கு உவமை, தாமரைப்பூ வலிமை மலை, (பொதிகை) ஆற்றுவது.

கருணையம் பரராடல் உவகைமிஞ் சியவாதி
கவுரிதன் குணமாகி அமலமே வுவதே
கடல்பொருந் திரையோசை மருவுசெந் திலிலாடில்
கழல்புனைந் தமர்வேலர் – பொருநைமா நதியே 4

## 5. திருஞானக் களிற்று வகுப்பு - (யானை)

**தானத் தானன தானத் தானன**
**தானத் தானன தானத் தனனா**

வேதத் தாகம நூலிற் கூறிய
மேன்மைக் காவல்கொள் வாருக் குறவே
வேகச் சாரண ராதித் தீயவர்
வேரற் றேகிடு மாறெற் றுவதே
வீவற் றோர்முத லாம்உற் பாதர்தம்
வேலைக் கோர்துணை யாநிற் பதுவே
வேலைக் கூடறல் வாரித் தூவிடும்
மேகத் தோலிடும் வாயுற் றதுவே
பாதத் தாலெமன் மாயச் சாடினர்
பால்வெற்(பு) ஆகர்த மோடொப் பதுவே
பானற் சீர்விழி வேடப் பேதைஅ
பாயத் தால்மண மேவச் செயலே

---

அடி 16. கழல்—வீரர் வலது முழங்காலில் புனையும் மணிக் கழல் என்க,

கவி 5 அடி 1. மேன்மை – கடவுள் வழிபாட்டுக் கொள்கை.

அடி 2. எற்றுதல் - காலால் இடறுதல்

அடி 3. வீவு அற்றோர் - இறப்பை அகற்றியவர், உற் பாதர் - வீரச்செயலை யுடையவர்

அடி 4. அறல் – கடல்நீர், மேகத்து ஒலிடும்—இடிபோலப் பிளிறுகின்ற

அடி 5. பால்வெற்பு ஆகர் - வெண்ணிறக் கயிலைமலை யுடைய பரமன்,

அடி 6. அபாயத்தால் - வள்ளிநாயகியை அச்சுறுத்தி, முருகனை மணக்கச் செய்தது.

பாகத் தால்மிகு பாடற் பாடிய
பான்மைக் காரர்தம் வாரத் தினதே
பாலிப் பாயென நேருற் றோர்பவர்
பாழிற் சாகவி டாநட் பினதே,
காதத் தேமணம் வீசிப் பாய்தரு
காமர்க் கார்மதம் மீறத் தரலே
காணுற் றோர்வினை நீறித் தீர்வரு
காதற் பேய்வலி ஓடப் பொருமே
காசைப் பூநிகர் ஆகத் தானவர்
காவற்(கு) ஆவலர் வாழ்விற் கிகலே
காவிற் றேவர்க ளோடுற்(று) ஆள்அரி
காணிக் காதர மாமற் பெறுமே.
வாதப் பாழ்மத நூலிற் போயுளம்
மாழ்குற் றோர்அறி யாவித் தையதே
வானத் தூடுவி மானத் தூர்மதி
வாய்மிக் கார்அமு தாரத் தொடுமே
வாய்மைத் தாரக மோனத் தோரிடம்
மாயைக் காட்ட ராமற் றளுமே
வாரிக் கானன மாம்நற் சீரலே
வாயிற் சேய்திரு ஞானக் களிறே 5

---

அடி 7. பாகத்தால் – செம்மைபெற்ற வாரத்தினது – அன்புக்குரித்தானது,

அடி 8 பாலிப்பாய்என – அருள்புரியவேண்டுமென்று முருகன் நின்று வணங்குபவர்.

அடி 9, காதத்தே – மிகத்தூரத்தில், காமர் கார் மதம்- அழகிய கரிய மதநீர் தரல் தருவது.

அடி 10. காதற்பேய் – ஆசாபாசம்

அடி 11. காசைப்பூ - காயாமலர்(கருநிறம்)ஆகம்-உடல்

அடி 12. காவில் - கற்பக நீழலில் அரி – இந்தினர்,

அடி 14. மதி-சந்திரனுக்கு, அமுது ஆர - கவளம்போல் உண்ண.

அடி 15 மாயைக்காடு அடராமல் - வினைக்கூட்டம் நெருங்காதபடி தள்ளும்

அடி 16 ஆனனம் ஆம் – முகம்போற் சிறந்த, திரு ஞானக்களிறு – முருகன்யானை

## 6. மயில் வாகன (பரி) வகுப்பு

**தனனு தனதன தனனு தனதன**
**தனனு தனதன தனனு தனனு**

கயிலா யமுமெழில் மகமே ருவும்உள
கருணு கரனென நடமா டிடுமே
கனல்நேர் கொடுவிடம் உமிழ்வாய் உறுபண
கணஆ டரவணி மிகைதோய் தருமே
கடலூ டுறுபணி யணைமேல் விழிதுயில்
கரியோ னெனமிளிர் களமே வியதே
ககமாம் இனமுழு மையும்நா ணுறஅவிர்
கவினுர் விழியணி மிகுதோ கையதே
சயிலா திபகுரு பரனே திருவருள்
தருவா யெனுமவர் துணையா கிடுமே
தனைநா டுநர்விழை வனயா வையுமருள்
தருநீ ழலில்அர செனமே வியதே
தரையாம் ஒருசுமை கொளுமா சுணமிகு
தமரோ டலமற அகவோ சையதே
தழைகா துறுகண பதியோ டிகலிய
கணமே உலகினை வலமா வரலே

கவி 6 அடி 1. கருணுகரன் – கயிலை வாசத்தையும், மேரு வில்லையுமுடைய சிவன்போல

அடி 2. பண கண ஆடரவு – படக்கூட்ட முடையதாய் ஆடும் பாம்பு . ஆபரணமாக

அடி 3. பணியணை - நாகப்பள்ளி-கரியோன் – திருமால் போன்ற நீலக்கழுத்து, களம் - கழுத்து.

அடி 4. ககமாம் – பறவையாகிய, விழி அணி – தோகை யிடமுள்ள அழகிய கண்கள்.

அடி 5. சயில அதிப குருபரன்–மலைக்குரிய குருநாதனை முருகன்.

அடி 6. தரு–கற்பகத் தருவின் கீழ், அரசென–இந்திரனை இருந்தது- (சூரனோடு போரிட்ட போது இந்திரன் மயிலாகித் தாங்கினுன்)

அடி 7. மாசுணம் - பூமியைத் தாங்கிய சேடன், –நாகங்கள்.

அடி 8 சணம் – கணப்போதில்,

குயில்போல் மொழிபகர் குறமா திமையவர்
கொடியா மெனஇல கியசா யலதே
குதுகூ குகுகுகு எனஒ லிடுமொரு
கொடியார் குருகிணை பிரியா ததுவே
குறைதீ ரருணையில் ஒருபா வலனது
குறியாம் அதில்நொடி யிடைதோ ணியதே
குடையோ டொருமர கதமா மலைநடை
கொளலே யெனஇயை தருசீ ரினதே
அயில்வே லொடுதனை நினைவார் பழவினை
அடியோ டறவென முயலாண் மையதே
அரனார் தமையிகழ் சுரர்வீ றழியஓர்
அசுரா திபனென வுமுனாள் உறலே
அணியார் பொதியையின் முனிநேர் பெரியவர்
அருள்கூர் பிரணவ வடிவா மெனலே
அயரா மனவலி அடியார் புடைமிகும்
அலைவா யுறைகுகன் மயில்வா கனமே. 6

## 7. வெற்றிவேலாயுத வகுப்பு

**தானன தந்த தத்த தானன தந்த தத்த**
**தானன தந்த தத்த தானா தனனா**

பூவாயி ரம்ப றித்து மீதேசொ ரிந்து நித்தல்
பூசாவி தஞ்செய் பத்தர் ஆவார் உயிரே
போராடும் வஞ்ச முற்ற சூர்மாவை வென்றி மைப்பில்
போகாதி பன்ற னக்கு வாழ்வீ வதுவே

---

அடி 10. குருகு – சேவல், இணை - தோழமையாக.
அடி 11. குறியாம் அது--அருணகிரிநாதரது குறிப்புக்குரிய தாகத் திருவருணையில் சம்பந்தாண்டான் விவாதத்தின் போது வெளிப்பட இருந்த கம்பத்தினையுரான முருகன் வடிவம்
அடி 13. அயில் வேலொடு - வேலுமயிலும் என்று
அடி 14. அசுராதிபன் என – சூரன் என்று கூறும்படி
அடி 16. அயிராமனம் - சோர்வற்ற உள்ளம்
கவி 7. அடி 1, ஆயிரம் – அநந்தம், பூசாவிதம் - பல வகைப் பட்டச் சிறந்த வழிபாடு,
அடி 2. போக அதிபன் - தேவேந்திரன், வாழ்வு-இழந்த அரசச் செல்வத்தை

போதாஅ றிந்து ரைக்கொ ணுமோன விஞ்சை
பூராய முந்தெ ரிக்கும் ஞானு கரமே [யுட்கொள்
பூலோகம் உண்டு கக்கும் மாலோன் வியந்து பற்பல்
போதோதும் வென்றி சற்றும் மாரு ததுவே

பாவாணன் அன்று விட்ட தூதாந டர்த சித்தர்
பாலோர்ம டந்தை யொத்தும் வாழ்பீ டுளதே
பாடேனெ னுஞ்சொல் விட்டு நோவாது ளந்த வித்த
பாராச லந்து ளைக்கும் வீருர் வதுவே
பாய்மாமு கம்ப டைத்த பேய்மார்பி டந்து முத்தர்
பாநாடு வந்து செப்பு சீரேய் வதுவே
பாழாம்உ டம்பெ டுத்து வீணுவ ருந்து மற்பர்
பாராந லம்பொ றுத்து உலாமேன் மையதே

காவால்வ ளம்பெ ருத்த சோணுச லந்த னிற்புல்
கார்போல்ப வன்ரெு டுத்த பாமா லையதே

---

அடி 3. போதா – பிரமன், மோன விஞ்சை – தாரக மந்திரத்தின், பூராயம் – இரகசியப் பொருள்

அடி 5 பாவாணன் – சுந்தரமூர்த்தி, சித்தர் - சிவன், மடந்தை – உமாதேவி

அடி 6. பாய்மா – பாய்ந்து ஓடும் குதிரை முகப்பேய், இடந்து - பிளந்து.

அடி 7. பார் அசலர் - பூமியின் கீழ் உள்ள மலை, இந் நூலாசிரியர் கிணறு எடுத்தனர். முதலிலிருந்தே பாறை, நீருற்று உண்டு, வெட்டுக என்பது முருகன் உத்தரவு நீண்ட ஆழமாகியும் ஊற்றில்லை. அதனுல் வருத்தி, பாடுபடுவதில்லை என்றும், அரிசி உணவுண்பதில்லை யென்றும் விட்டனர் அத்தகைய கிணற்றில் நீர் வரும்படி துளைக்கும் வேல் என்பது கருத்து.

அடி 8. பாழாம் உடம்பு-உடம்பின் பயன் கடவுட் பூசை செய்வது. அதை விட்டவரது பிறப்பு பாழ் என்பது (அவர் காணுத சிறப்பினது வேல் என்பது)

அடி 9. கா - சோலை சோணுசலம் – திருவண்ணுமலை, கார்போல்பவன் - பயன் விரும்பாது கருணையாற்றிப் புகழ் வகுப்பு பாடிய அருணகிரிநாதர். (பாமாலை – வேல் வகுப்பு, வேல் விருத்தம்)

காஞறு றும்பு னத்தி வாஞேர்த ருஞ்சி வப்பி
காதோட டர்ந்த மைக்கண் நேரா வதுவே
காவாய்ன னுஞ்சொல் செப்பி நாடோறும் நம்பு நட்பர்
காடுடு சென்றி டிறபி ஞேடே செலுமே
காயாம லர்ந்த கொத்தை நேர்தோகை கொண்ட
காணுமை கிழ்ந்த டுத்தல் ஓவா துறலே [பச்சி
மாவாள்பொ லிந்த ருக்க ராலேச மைந்த தொக்கும்
மாணர்த ரும்ப ழிப்பில் மேலோர் தவமே
வாலாயு தம்ப டைப்பு ளான்மால் அரன்க ரத்தில்
வாழாயு தங்கள் மெச்ச மேலா யதுவே
வாள்வீரர் தங்க ளுக்கும் வேதாக மங்க ளுக்கும்
வாஞட ரென்ப வர்க்கும் ஓரா தரவே
மால்மேவு செந்தி லுற்ற கோலாக லன்க டப்ப
மார்போட ணைந்த வெற்றி வேலா யுதமே 7

## 8. நீபமாலிகை வகுப்பு (கடப்பமாலை - தார்)

**தனனதன தானதன தனனதன தானதன**
**தனனதன தானதன தனதான தானஞ**

அகிலபுவ ஞதிகளில் நிறையளவி லாதவுயிர்
அனையவென வேதமொழி தருதாது மேயதே

---

அடி 10. கான் ஆறு - காட்டாறு - புனத்தி, வள்ளி - சிவப்பி - தேவயானை. நேர் ஆவது – கண் போலக் கூர்மை நீளம் உடையது

அடி 11. காடுடு-காட்டுப் பாதையில் அடுத்துணையாவது (வழிக்குத்துணை – வேல்)

அடி 12. காயா......கொத்தை - காயாம் பூக்கொத்தினை பட்சி–மயில். காணு-கண்டு,

அடி 13. மா வாள்-பெரிய ஒளி, அருக்கர்–சூரியர்கள்

அடி 14 வால் ஆயுத –வெள்ளையான வச்சிரம், இந்திரனது. அரன் கையிலிருப்பது – சூலாயுதம்; இவற்ருல் மதிக்கப் படுவது வேல்

அடி 16. மால்மேவு-(அடியவர்கட்கு)மிக்க ஆசையை தருகின்ற.

கவி 8. அடி '. தாது மகரந்தம்; உயிர்கள் பலபோன்று பல தாதுக்களையுடையது.

அபரிமித மானமது கரவிதகு ழாமிகவும்
அவசமுறு மாறெழுக விடுதேன்அ ருதவே
அசலமொரு கோடியினும் நடனமிடு தாளில்அணி
அகலமொடு தோள்நிரையில் அலர்சீல மார்வதே
அருமறைமு ணைபல சுருதிகளும் ஓதரிய
அருள்மகிமை யேயனைய பெருவாச மேவுமே
சகிகளுட னேஅமரர் நகரில்வளர் பாவையிரு
தனமலையின் மீதுமரு வியமேன்மை தோய்வதே
சரவலியி னுல்நிதமும் மிருகவதை காணுமவர்
தனியிதணில் வாழுமவள் விழையாது மேவலே
தமநியக லாபமயில் அனையமட மாதர்பலர்
தளர்வொடுச தாநினையும் அதிமோக மீவதே
சரவணப வாகுமர குருபரகு காவுனது
சரணமென ஓதுமவர் பகர்பாடல் போல்வதே
எகினமுடன் ஏனமறி வரியமலை நேர்சிகரி
யிடைவளரும் ஓர்பசிய கிளிமேனி சார்வதே
இமையவர்பி ரானுமலர் அயனரிபு ராரிமுதல்
எவரும்அகல் மார்பிலிடு தொடையாவும் நாணவே
இகல்மருவு தானவர்கள் குலமுழுதும் நீறவரும்
எரியனைய வேலினிலும் ஒருவேளை யேறுமே

---

அடி 2. அபரிமிதம்-அளவற்ற, மதுகரம்-வண்டு
அடி 3. அசலம்-மலை, தாளில்-திருவடிகளிலும், அகலம் - தோள் - மார்பு இவற்றிலும் நீங்காதிருப்பது.
அடி 5. சகிகள் – தோழிமார்கள், பாவை-தெய்வயானை, மருவிய – முருகனால் மாலையிடப்பட்டது.
அடி 6 சரவ ் – கூர்மையால், இதண் – பரண் – வாழு மகள் – வள்ளி,
அடி 7. தமநியகலாப பொன் மயமான தோகை, (மாதர்கள் முருகன் மாலை பெற விரும்புவர்)
அடி 9. எகினம் – அ ்னப்பறவை, ஏனம் - பன்றி சிகரி - பிரமன்மால் காணாத அருளை, பசியகிளி--அருணகிரிநாதர்,
அடி 10. இந்திரன், பிரமன்–மால், சிவன், அணிந்த மலர் மாலை நாணுமியல்பினது.

எழையிழைய பேதையர்கள் குளறுகவி மானுபுற
இதழ்சிறிது கூடலும்ஓர் அழகாநி லாவுமே
மகிழமலர் சூடியொரு கிளிமுதுகி லேறுமதன்
மனமெலிவி னோடுழல மிளிர்பான்மை காணுமே
வயிரவர்க ளாதியவர் புகழமர்செய் போதுதிரம்
மருவியசு ராதிபரும் வெருள்வாகை யாகுமே
வனசமலர் மாமியர்கள் மருமகன தாமெனலின்
மறதிகொடு சேர்வதனில் அணுவாட லாததே
வழுதிமகள் மேவுதுயர் களையும்அலை வாய்நகரில்
வளர்முருக வேள்புனையும் வனநீப மாலையே. 8

## 9. சேவலங்கொடிவகுப்பு (துவசம்)

**தானதந் தனதான தானதந் தனதான**
**தானதந் தனதான தானனந் தனனா**

ஆரணங் களின்மீதும் ஆகமங் களின்மீதும்
ஆசறும் புகழ்கோடி தோயநின் றதுவே
ஆணவம் பொலிசூரன் மார்பிடந் திடும்வீரம்
ஆர்பெரும் புயமீதும் ஏறுகின் றதுவே
ஆகுலந் தவிர்சீல நாரதன் கனலீயும்
ஆடுகண் டுறவாக நாடும்வென் றியதே
ஆசுமுன் பகர்பாடல் நாலும்நன் குணர்பான்மை
யாளர்சந் ததம்ஓதும் ஆசிகொண் டதுவே
கோரவெங் கலியோட மோதுசெஞ் சிறையோடு
கூகுவென் றயராது கூவுபண் பினதே

அடி 12. அழகா நிலவும்-பாமாலையோடு கூடிச்சிறக்கும்.
அடி 16. வழுதி மகள் – சாபத்தால் குதிரையாகியிருந்த பாண்டியன் மகள் மனித முகமாகி வாழச் செய்தது, செந்தூர்க் கடலில் வதனாரவிந்தத்துறை.

கவி 9, அடி 1. ஆரணம்-வேதம், ஆசுஅறும்-குற்றமற்ற.
அடி 3. ஆகுலம்-துன்பம், கனல்-யாகத்தீயில் உதித்த.
அடி 4, ஆசு......பாடல்; ஆசு – மதுரம் – சித்திரம் வித்தாரம் என்பன

கோலஇந் திரன்வேதன் மாலரன் பொருதேவர்
கூடியன் பொடுபேசி நாளும்நம் பியதே
கூதளங் கமழ்தோளில் வாள்சரஞ் சிலைவேல்கொள்
கோபமிஞ் சுகிராதர் ஊர்விரும் புவதே
கூர்பெறுங் கவைசால மேவியிந் திரகோப
கோடியொன் றுதல்போல நீடுகொண் டையதே

சேரவுந் துயிர்கூர்ச ராசரங் களின்வாதை
தீர்நலம் பெறுமாற தேமுயன் றிடலே
தேருறுங் கதிரோன்உ லாவும்அந் தரவீதி
தேறும்இங் கிதயோக மேவுசிந் தையதே
சேடன்அங் கதகோடி யோடழும் படிகால்கொள்
சீர்நகங் கொடுபூமி மீதுகிண் டிடுமே
தேயுவென் றணிமாயை பாலனென் றிருவாறு
சீலமொன் றுவியாதன் நூல்பகர்ந் ததுவே

தாரகந் தனைநாடும் ஏகதந் திரஞான
சாரபுங் கவர்மேலின் மேலெனும் பொருளே

---

அடி 7. கிராதர் – வேடர்கள், (வளர்க்கப் பெறுவது சேவல்)

அடி 8, இந்திர கோபம் – செந்நிறமான ஒரு பூச்சி; (கொண்டை சிவந்தும் கூர்மைப் பகுதியின தாயுமுள்ளது)

அடி 9. சரஅசரம் - உலக உயிர்கள் – சோர்வு தீர, தானே காலையில் கூவி எழுப்புதல்.

அடி 10. கதிரோன் - சூரியன், அந்தரவீதி - ஆகாயவீதி (சூரியனை உலாவ வரச்செய்வது)

அடி 11. சேடன்–ஆதிசேடன், அங்கதகோடி–இனமான பாம்புக் கூட்டம் (சேவல் கால் நகத்தால் கிளறுவதால் சேடன் தலையில் ஊறு செய்வதென்பது

அடி 12. தேயு என்று – அக்கினியின் கூறு என்பதாகவும் மாயை பாலன் - சூரனது ஒரு கூறு சேவல் என்றும், புராணத்தில் வியாசர் கூற விளங்குவது.

அடி 13. தாரகம் - பிரணவப் பொருளைக் கருதும் ஞானிகள்.

சாரணன் குடிகேடு சாரவிண் புகுசாரு
தான்விழைந் தகலாதெ நேரமுந் தொழலே
தாழ்வறும் புகழ்வாரி மூழ்குமுநங் கவுமாரர்
தாள்பணிந் திடுவாரை ஆளவுஞ் செலுமே
தாபமின் றியசோலை நீடுசெந் திலில்வாழ்வி
சாகசுந் தரனீடில் சேவலங் கொடியே

## 10 ஆணை வகுப்பு

**தானன தனதன தானன தனதன**
**தானன தனதன தானன தனனு**

தேவரு முனிவரும் ஆதியர் பெறுமுயர்
சீர்நிலை தவறிவி டாதருள் செயுமெ
சீகர மலியலை வாரிதி பிறழ்தரு
தீமையை யுலகடை யாதனை பொருமே.
சேல்நிகர் விழிஅயி ராணிதன் அதிபதி
சேணுல கதன்அர சாளவும் விடுமே.
தேனின மிசைபயில் பூவினில் வளர்விதி
தீயிடை விழுபுழு வாகமு னியுமே
பாவல னதுபிற கேகிய முரகரி
பான்மைமுன் உளபடி தோயநல் கியதே

அடி 11. சாரணன்—சமணனை சம்பந்தாண்டான், விண் புகு சாரு - தேவலோகம் சென்று பாரிசாத மலர் கொணரப் போன (அருணகிரிநாதரான கிளி)

அடி 16. தாபம் - வெப்பம், விசாக சுந்தரன் — விசாகத் திற்றோன்றிய முருகக் கடவுள்.

கவி 10. அடி 2. சீகரம்-அலை,அடையாது அணைபொரு —உலகம் கெடாதபடி தாய் போலக் காக்கும்.

அடி 3. அயிராணி - இந்திராணி, அதிபதி — இந்திரன், சேண் உலகு — வான் உலகம்

அடி 4 வளர்விதி — பிரமனால் நியமித்த ஊழ்வலி.

அடி 5 பாவலனது பிறகு முரகரி - திருமழிசையாழ்வார் பாட்டுப்படி பின் சென்ற மாயன். பான்மை — முன் உளபடி— சீக்கரம் தாரகனிடமிருந்து பெற்று முன் போன்று மகிழும்படி

பால்நிற முறுதிரு நீறணி பசுபதி
பாசம கலவொரு வாய்மைசொ லியதே
பாரதி நிகர்பல நாவல ரதுபகை
பாறிட ஒருவித ஆடல்செய் ததுவே
பாய்பரி முகமுள பேயுடன் ஒருகுகை
பாழ்பட நொடியிடை வேல்விடு வதுவே

ஈவது விலகிடல் ஆதிய செயுமவர்
யாவரும் அடியுட னேகெட அடுமே
ஈரிரு மறையுடன் ஆகம வழிசெலும்
ஈடுறு பெரியவர் நாவிடை வருமே
ஏசறு வளமுறு மால்வரை தொறும்நிதம்
ஏகியு மகிழ்கவு மாரர்கள் தமதே
ஏழ்கடல் நிகர்கவி மாலிகை தருகிளி
யேயென எனைவெகு போதுரை தரலே.

மூவலில் படைகொடை மாமணம் எனுமிவை
மூவகை தருமுர சாலறை தருமே
மோடிசெய் தளவற ஊடிய வனிதையர்
மோகமொ டணையவெ ஞவழு வுறுமே

---

அடி 6. பசுபதி - சிவபிரான், வாய்மை – உண்மைப் பொருள்.

அடி 7. பாரதி - கலைமகள், ஒருவித ஆடல். சங்கப் பாவலரது ஐயம் தீர - ஊமைக் குழவியாகி, அன்புக் கண்ணீரால் உரை நயம் தெரிவித்தது

அடி 8. பாய்பரி முகம் உள பேய் – குதிரை முகப்பூதம் - கீரனை யடைத்த குகை பிளந்து காத்த செயல்.

அடி 13. மூவகை முரசு - கொடை, மணம், போர் என்க.

அடி 14. மோடி.

மூதறி வுளபல சேடர்கள் நுவலினும்
மூடிது முடிவிதெ ஞஅறி வரிதே
மோனிகள் தொழும்அலை வாய்வரு குருபரன்
மோசமில் திருவருள் ஆணையின் வலியே.

முற்றியது.

**நூற்பயன் – வெண்பா.**

சிந்தங்கங் காட்டுதிருச் செந்திற் குகன்வகுப்பின்
பத்தங்க முங்கருதும் பண்போர்க்குக் – கைத்தங்கம்
போலவருட் செல்வம் பொருந்தும் புகலரிய
காலப்ப மெய்தாது காண்,

வேலுமயிலுந் துணை.

---

அடி 15, மூடு இது – முடிவு இது – மூடப்பட்ட உட்பொருள் இவை - முடிந்த கருத்து இவை–என்று சேடன் ஆதியர் கூறமுடியாத பெருமையது.

உ

குருவே துணை

# திருச்செந்திற் பிரபந்தம் பதிறுறுள்

# 11-வது குஞ்சரிமாலை

## அணிந்துரை

**வஞ்சரித யத்தமையா மாண்பார் திருச்செந்தூர்க்**
**குஞ்சரி மாலைசற்றுக் கொள்ளுமன்பர் — நெஞ்சரிக்கும்**
**துன்பக் கடற்கண் துயருரார் சூழருட்பே**
**ரின்பக் கடற்குளிப்பா ரே.**

திருச்செந்தூரில் விளங்கும் முருகக் கடவுளின் தேவியரிரு வருள் முன்னவரான தெய்வயானையம்மையைக் குறிக் கொண்டு இயற்றப்பட்ட இந்நூல் குஞ்சரிமாலை யென்ற பெய ரில் உள்ளதாகும். குஞ்சரம் யானை குஞ்சரி யானையால் வளர்க்கப்பெற்றவள் எனவே, தேவலோகத்து இந்திரனது ஐராவதயானை, தெய்வச் செயலாக தாமரைப்பூ மேற்கிடந்த பெண் மகவைக் கொண்டுவர - இந்திரன் அன்போடு பேணி வளர்த்தான் என்பது வரலாறு மாலை என்பது கவி களால் யாக்கப்படும் நூலுக்குள்ள பெயர். ஆகவே தெய்வ யானையம்மையின் துதியாகிய நூறு பாடல்களைக் கொண்ட தென்பது காண்க

இந்நூல், வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகளிடம் முருகப்பெருமான் செய்த அருளாணைப்படி பாடப்பெற்ற பதி றுறுள் ஒன்றாகும். தெய்வயானைக்கென்று இதுபோன்று துதி நூல் வேறு இருப்பதாகத் தெரியவில்லை- புராணங்களின்முகப் புப் பாயிரத்தில் ஒரு சிலர் பாடியிருக்கின்றனர்.

நூலாசிரியரான வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமி கள் தமது வழிபடு கடவுளான முருகப்பெருமானை, உயிர்த் தந்தையாகக் கொண்டு போற்றுவது போன்று, வள்ளிநாய

கியைப் பெற்ற தாயாயும், தெய்வயானையம்மையை வளர்ப்புத் தாயாயும் கொண்டு பாராட்டி மகிழ்வர். அம்முறையிற் பல் பாடல்கள் இதன்கண் வருகின்றன. ஒவ்வொரு பாட்டிலும் ஒவ்வொரு நயமான கருத்தினை இனிமையும் எளிமையுமாகப் பொருள் காணும்படி பாடியுள்ளனர் சுவாமிகள். ஒன்றி ரண்டை இங்கு காண்க.

11-வது பாட்டில், தமது கருத்து ஒன்றைக் கொண்டு ஏட்டில் எழுதத் துவக்குவர். கருத்து வேருென்ருகத் திரு வருட் செயலாலமையும் என்பதையும், 16வது பாட்டில் முரு கனை எண்ணிருமேனியன் என்கிருர். 16-வது வடிவுடையவன் முருகன் என்பது வரலாறு.

பதினுறுடம்பன் என்று சிலநூல் விளம்பநின்று
பலவாறிலங்கும்விந்தை — உடையோனே.

என்பது மயிலத்து முருகன் திருப்புகழ்

அம்மையின் நிறம் பொன்னுகு மென்பதைப் பல பாடலிற் காணலாம் பிரமன் மன்மதன் அண்ணன், உமையவள் மாமி, கலைமகள் மைத்துனி, இந்திரன் தந்தை, என்றும், தான் மைந் தன் என்றும் முறை உரிமை கூறி, வள்ளியிடத்து ஊடினு லும், தன்னைப் பிள்ளைப்பண்போடு பாராட்டும் திறத்தைக் கூறி மகிழ்கின்ருர், 87 வது பாட்டில், கழிக்கப்பட்ட வெள்ளை எலும்பையணிந்த பரமனது மைந்தனுகிய முருகவேள், தேவ அரசன் மகளான உன்னை மணந்த காரணத்தால்,விலையுயர்ந்த பல பொற்பணிகளைப் பூண்டு விளங்குகின்ருன் என்று கூறுவது வியப்புத் தருகிறது. இதுபோன்ற பல சுவைகளைத் துய்த்து மகிழலாம்.

இரு வடிவம் கொண்டு விளங்கியதாகவும் கூறுகின்ருர், முதலாவது முருகனது வடிவழகில் ஈடுபட்ட திருமால் கண் ணினின்றும் தோன்றியது. மற்ருென்று தேவயானையாற் காணும்படி குழந்தையாயிருந்தது இப்படி வரலாறும் அநுபவ

மும் பொலிய இந்நூலிருப்பது சிறந்த கருவூலமாக அன்பர் கைக்கொண்டு அநுபவிக்கப் பெற்றதாம்.

இந்நூலாசிரிய சுவாமிகள் தாம்பாட எண்ணிய பகுதிக் கேற்பவும் அந்தந்த நிலையில்தான் நின்று அவ்வவ் வுணர்வு வசப்பட்டுப் பொருட் செறிவு - யாப்பு நயம் - இறை மாண்பு-தன் அநுபவம் பொலிய, பல சுவையமையப்பாடுவதை அன்பர்கள் ஆங்காங்கும் காணலாம். துதிநூல் - சாத்திரநூல், சரித்திர நூல் - என்றமுப்பிரிவில் முத்தமிழ்ப் பண்புடன் பாடி, ஏட்டில் தாமே எழுதி அழகுறச் சேமித்து வைத்துள்ளனர். அவையாவும் – விழுப்புரத்துக் கடுத்த திருவாமாத்தூர்க் கௌமார மடாலயத்தில், இவரது ஞான சமாதிக்கோயிலையடுத்த நூல் நிலையத்திற் பாதுகாப்புடன் பேணப் பெற்றுள்ளன. அதிலிருந்தே ஒன்றுமுதல் பதின்மூன்று எண்களில் இப்போது எடுத்துப் பதிக்கப்பெற்றது. மூன்று பகுதிகள் முன்னமே வெளி வந்தன. திருச்செந்தூர்த் தேவத்தானத்தில் யாவும் கிடைக்கும்.

இந்தப் பதினாறு வகைப் பனுவல்களையும் திருச்செந்திற் சண்முக விலாச மண்டபத்தில் கூடிய பெருஞ் சபையில், முருகன் திருவடியில் சாத்திக் கொணர்ந்த ஏட்டைக் கொண்டு படித்துப் பொருள் கூறிப் பதினாறு நாளில் நிறைவு செய்து யானைமீது ஏட்டைவைத்து, அந்தணர் மூலமாக வீதி வலம் செய்து அரங்கேற்றம் செய்ததாக இவர் வரலாற்று நூலில், திருச்செந்தூர்ச் சருக்கத்துட் கூறுகின்றார். முருகப்பெருமான் தலங்களில் முதன்மைத் தலம் திருச்செந்தில் என்பது இவர் கருத்து. இந்நூல் ஷெ தேவத்தான வெளியீடாக வழக்கப்படி வெளிவருகிறது நலம்.

— ——

உ
அம்மை துணை

# திருச்செந்திற் பிரபந்தம் பதினாறில்

# 11-வது குஞ்சரிமாலை

## காப்பு – வெண்பா

மஞ்சரிப்பூங் கோதைசெந்தில் வாழ்வான் இடத்தமரும்
குஞ்சரிக்கு மாலையொன்று கூறவே — பஞ்சவன்னத்
தோகை மயிலும் சுடரிலைச்செவ் வேற்படையும்
வாகைபுனை சேவலுங்கா வல்.

## நூல்

## அறுசீர்த் தாழிசைகள்

திருவளர் செந்தமிழ் பாடிவ
ரம்பெறு சிற்சிலர் தம்முடன்இங்(கு)
ஒருவனெ னக்குல வும்படி
நாடிஉ டைந்திடல் கண்டிலையோ
மருவலரைப்பொரும் வேற்புனை
செந்தில்வ ரோதய னுக்குயிராம்
இருவருள் முன்னவள் என்றுல
கெங்கும்இ யம்பும்இ ளம்பிடியே. 1

மின்னைநி கர்த்தவை வேல்புனை
செந்தில்வி சாகனை விட்டகலா
உன்னைவ ழுத்தநி னைந்ததும்
நின்செய லோஅல தென்செயலோ
பொன்னைய டக்குந்நி றங்கொடு
கையிடை பொற்புறும் நீலமணிந்(து)
அன்னையெ னப்பணி வார்வினை
தீரஅ ருட்பொழி ஆரமுதே. 2

எண்ணிய எண்ணம் இருக்கஎன்
அங்கை முழுத்தொரு வாறெருளிரும்
திண்ணிய சீலம்அ டைந்தும்என
னுட்டுயர் தீர்நலம் எய்திலனே
வண்ணியல் நீடிய செந்திலில்
எந்தைவ ருந்திமு யன்றுளபல்
புண்ணிய மாமென விண்ணில்
வளர்ந்து புவித்தலை வந்தவளே. 3

இன்னமு தம்பொரு முத்தமி
ழாதியெ னப்புவி யோர்பகர்சீர்
என்ன இருந்தும்நின் இன்னரு
ளின்றிஇ டைந்திடல் கண்டிலையோ
பன்னக மீதுத டம்பயில்
கின்றப ருஞ்சிகி ஊரும்அயிற்
றென்னவ னென்றுயர் செந்திலில்
நின்றருள் செல்வனி டத்திருவே. 4

சேயொரு கோடிபி ழைக்கினும்
அன்பொடு செங்கையில் வைத்தளிகூர்
தாயொரு வாதசி னங்கொட
முப்படி தள்ளவ ழக்குள்ளதோ
பாயொரு மாமுகில் வேழமி
வர்ந்துள பண்ணவன் அன்றலைவாய்
தோயொரு வன்கையில் நல்கம
கிழ்ந்துது லங்கிய தூநகையே. 5

எண்ணறு துக்கம்இ யைந்தயர்
என்னெடி லங்கிய செந்திலுளான்
வண்ணஇ தழ்க்கனி வாய்கொடு
சொல்லிய வண்மைய றிந்திலையோ

விண்ணவ ருக்கொரு தாரக
மாகிய வெள்வயி ரப்படைதோய்
அண்ணல் வளர்த்(து)அவ னுக்கென
முன்னம்அ ளித்தஅ னப்பெடையே. 6

வள்ளிவி ருப்பம்வெ ளிப்பட
வைத்துன் மயக்கம னைத்தையும்நெஞ்
சுள்ளில டக்கிய செந்தில்வி
சாகன்உ ரைத்தசொ லும்பிழையோ
புள்ளியு டைப்பணம் ஆயிரம்
உற்றபு யங்கம திற்றினமும்
பள்ளிகொள் மாயன்வ லக்கணில்
வந்தப சும்பொனி றக்கொடியே. 7

சாதன மொன்றும்மு யன்றிலன்
முற்றுத மிழ்ப்பொலி சீரலைவாய்
நாதன ருட்பெறு வாரிதி
யூடுந லைந்தெழும் நாளுளதோ
வேதனை ஐங்கணை வேளொடு
பெற்றுவி டுப்பதன் முன்மிளிரும்
சீதம லர்த்திரு வேயெனு
மாறுதி கழ்ந்துள குஞ்சரியே. 8

அன்னம திற்றிரி கின்றவ
னுக்குமுன் அண்ணனு டன்தமியேற்(கு)
இன்னமும் ஒருட லம்சமை
யாமல்இ ருக்கும்வி தம்பகர்வாய்
தென்னவர் மெச்சிய செந்தியில்
வந்துதி கழ்ந்துள செங்கதிர்வேல்
மன்னவன் ஆருயி ருக்குயி
ரென்னமுன் வந்தம டக்கொடியே. 9

வாளொடு நின்றுள வீரர்அ
னேகர்வ ழுத்திய செந்தில்உளான்
தாளொடு சேரவி ரும்பிவ
ருந்திய தன்மைய நீந்திலையோ
கோளொடு நாளும்ம றந்தவ
ருங்குலை யப்பொழி யுங்குளிர்பூ
வேளொடு வந்துபி றந்துபொன்
மேனிவி ளங்கிய மெல்லியலே. 10

அஞ்சல ளித்தவன் அன்றொரு
வாவியில் அழுதமை உன்னியதால்
கஞ்சம லர்க்கிடை நீயும்அ
வாறுக வின்றமை யாரறிவார்
மஞ்சதி லேறும்வ லாரிதன்
ஆனைவ ளர்க்கவ ளர்ந்துளபொற்
குஞ்சரி யேயுயர் செந்திலில்
வந்துகு லாவிய கோமளமே. 11

பொற்றையெ னத்திகழ் கொம்பொரு
நாளொடு பொலிகரி யால்வளர் நீ
ஒற்றைம ருப்புறும் ஆனைமுன்
அஞ்சிஉ ளந்தடு மாறுவையோ
கற்றைநெ டுங்குழல் அன்னம்நி
கர்த்தக வின்குல வக்களிகூர்ந்(து)
எற்றையி னுந்திகழ் செந்தில்வி
சாகன்இ டத்திலி சைந்தவளே. 12

மின்னிகர் செங்கதிர் வேல்கொடு
செந்திலில் மேவிய வித்தகவேள்
உன்னிலு மிக்குயர் வென்றொரு
மங்கையை உன்னுவன் என்றுரையேன்

அன்னிகர் மேனிம தன்தொழும்
நாளையில் ஐங்கணை நல்கியதோர்
கன்னிகை கண்டுக ளிக்கம
கன்தொடு கையுறு கற்பகமே. 13

வன்மன வேடுவ மங்கையும்
நீயும்வ ழக்கிடும் நாளிலெனைத்
தன்மக வென்றிரு வீரும்வி
ளம்பல்த குந்தகை யுற்றிலனோ
பன்மறை யும்புகழ் செந்திலின்
மேயப ரும்பவ ளக்கிரிதோய்
பொன்மலை யன்னமு லைத்துணை
கொண்டுபொ லிந்தவிர் புத்திழையே. 14

கோடலில் வேல்கொடு செந்திலில்
நின்றகு கன்றனை நம்புமென்மேல்
வேடர்கு லக்கொடி வைத்துள
மட்டும்வி ருப்பம்உ னக்கிலையோ
ஆடர வம்புனை யும்பெரு
மானுர்அ றிந்திட அந்தரர்தம்
நாடத னிற்றரு நீழலுள்
அன்னவன் நண்ணிய வெண்ணகையே. 15

வீரமி குந்துயர் செந்திலில்
வந்தவி சாகன்வி ளங்கொளிவாட்
சூரனை வென்றில னாகில்நின்
மேனிதொ டும்பரி செய்துவனோ
வாரணி கொங்கைஅ ணங்கினர்
பற்பலர் வந்தனை செய்திடவிண்
ஊரர சன்றன்ம னைக்குள்வ
ளர்ந்தவிர் ஒண்டொடி மென்கொடியே. 16

மண்ணியல் செந்தில்வ லானது
வாழ்வென மால்வன சம்பொருசெங்
கண்ணிடை வந்தபின் வேறுடல்
கொண்டுக லங்கிய தூண்டுகொலோ
விண்ணினு மண்ணினும் மற்றுள
லோகவி த்தினு மேவியபல்
பெண்ணின மும்புகழ் பொன்னிற
மேனிபி றங்கிய பெய்வளையே. 17

கொங்கைவ னப்போடு கோதைம
றைத்தொரு குழவியு ருக்கொடுபோய்ப்
பங்கய மீதுகி டந்தழல்
மாமிப யிற்றஅ றிந்தனையோ
சங்கைய ணிந்தசெ விப்பெரு
மான்மகிழ் தையல்மொ ழிப்படிநின்(று)
அங்கணில த்துயர் செந்திலில்
வேளிடம் ஆர்வம்அ யின்றவளே. 18

வேலொடு செந்திலில் மேயவ
னுக்குமி கத்தளர் வேதியராய்க்
கோலொடு சென்றிட லோமுது
சூருயிர் கொண்டிட லோஅரிதால்
சேலொடு நீலமெ னத்திகழ்
கண்பெறு தெய்வம டந்தையர்தாம்
யாலொடு தேனும்அ ளாவிய
சொற்கள்ப யிற்றவ ளர்ந்தவளே. 19

மந்திர நூல்விதி யொன்றறி
யேன்அடல் மால்விடை யார்பகரும்
தந்திர முந்தெரி யேன்முயல்
பூசைத வப்பயன் நல்குமதோ

கந்திம டற்குள்இ ருந்தகு
ரங்குக னிக்கத லிக்கிடையாய்
செந்தில்வ ளம்பதி யிற்குகன்
மேவிய தெய்வம டப்பிடியே. 20

முத்தமி ழும்பொலி செந்திலில்
மேயமு ழுப்புல வன்தமியேன்
இத்தனை பாடுப டுந்துயர்
கண்டும்இ ரங்கிலன் எவ்விதமோ
அத்தனி ருந்தபெ ருங்கயி
லாசலம் ஆகுமெ னத்திகழோர்
மத்தக வேழம லர்க்கண்ள
டுத்துவ ளர்க்கவ ளர்ந்தவளே. 21

பூவுல கத்துள மங்கைய
ருஞ்சிலர் புண்ணிய வண்மையினால்
மேவுவர் செந்தில்வி சாகனை
நின்னில்வி ழித்திமை யாதயிலார்
தேவுல கத்துயர் ஊர்அம
ராவதி செய்தவ மாமெனவே
மூவுல குஞ்சொல வந்தொரு
செந்நிற முண்டகம் உற்றவளே. 22

மெய்யடி மைத்திறம் உள்ளவொ
ருத்தன்வி ரும்பிவி ரித்துளதோர்
செய்யதி ருப்புகழ் முன்னம்உ
ரைத்துள சீலம்அ றிந்திலனோ
கையத னிற்கரு நீலமெ
னத்திகழ் கண்கொடு செந்திலில்வாழ்
ஐயன்வ னப்பைஅ யின்றுவ
கைக்கடல் ஆடும்அ ணங்கரசே. 23

வெள்ளிய சோகியு டன்குற
டும்புனே வேடர்கு லக்கொடியாம்
வள்ளியெ னைப்பெறி னும்தள
ராதுவ ளர்ப்பவள் நீயலையோ
கள்ளிழி யும்பொழிற் செந்திலி
னல்உயர் கற்பக நாடுடையான்
அள்ளியெ டுத்தணி உச்சிமு
கக்கும்அ ருட்கனி யாம்அமுதே. 24

வண்பெறு திங்கள்மு கத்(து)இரு
நீலம லர்ந்தது போல்அவிரும்
கண்பெறும் நீகையில் அம்மலர்
கொண்டக ருத்தறி வார்எவரோ
தண்பெறு செந்தில்வ ளம்பதி
யிற்றிகழ் சண்முக வேளிடம்உற்(று)
எண்பெறு கோடியு யிர்த்தொகை
யுந்தரும் ஏலநெ டுங்குழலே. 25

செம்மல ரானன மீதுறு
கண்கள்தெ வுட்டுறல் போலுன்வலக்
கைம்மல ருங்களிக் கின்றதெ
னச்சொலல் கற்றவர் கற்பனையேல்
மைம்மல மற்றவ ரும்புகழ்
செந்தில்வ ளம்பதி வாழ்குகவேள்
அம்மல குட்படு மென்றுகொல்
வெண்ணிற ஆனைவ ளர்த்தவளே. 26

உன்னைவ ளர்த்துயர் செந்திலில்
வேலன்உ ரம்புண ரப்புரிவான்
தன்னைய லாதுபின் எத்தனை
யிந்திரர் தாமடை வுற்றனரோ

பின்னை அ பின்னையெ னப்பழ
மாமறை பேசிய சத்திகளுள்
முன்னையு ரித்துடை யாள்எவ
ளோஅவ ளாகிய மொய்குழலே. 27

முன்னம் அவ்வணம் உரைத்தநின்
நாயகன் முற்றும்இ ணர்ந்துளநெஞ்(சு)
இன்னர்இ ரங்குகி லாவிதம்
என்கொல்உ யம்பம னந்துணியாய்
புன்னகை கொண்டுபு ரஞ்சுடு
வார்நிகர் புண்ணிய ரேபுகழ்சீர்
மன்னவி ளங்கிய செந்தில்வி
சாகன்ம ணந்தம டக்கொடியே. 28

திருவருள் நீடிய செந்திலில்
வேளது செய்யசெ வித்தொகையு(டு)
ஒருபொழு தேனும்எ னக்கினி
தாம்உரை ஓதிய துண்டுகொலோ
மருவளர் கற்பக நாடுடை
யான்இவர் வாரணம் அன்றுவளர்த்(து)
அருளமு தே!பொறி ஆறும்உ
ரைப்பவர் ஆதர மாயவளே 29

உலகொரு மூவகை யும்புகழ்
செந்திலில் உற்றஒ ருத்தனருட்
புலவர்பு டைக்கொரு திலகமெ
னத்திகழ் போதம்அ ளித்தருள்வாய்
மலரவ னுக்குயர் தங்கையெ
னத்திகழ் வாழ்வைம றந்தவள்போல்
இலகருள் பெற்றச யந்தன்அவ்
வண்ணம்இ சைத்திட வந்தவளே. 30

சத்தியம் நின்னருள் அன்றியெ
னக்கொரு தஞ்சமி லேத்தனிவேல்
வைத்திகல் வென்றுயர் செந்திவி
சாகன்ம லர்க்கணு ணர்த்திடல்காண்
முத்தினை வென்றந கைச்சிவை
கண்டுமு கத்தொட ணைத்திடவோர்
அத்திகொ ணர்ந்த மழச்சிசு
வாய்வளர் அம்புய மென்கொடியே. 31

செங்கண் முகுந்தன் உரம்புணர்
வான்மகிழ் செல்வியெ னத்தெரிவான்
பங்கய மீதுத வழ்ந்தனை
யோஅது பண்ணவர் கண்டனரோ
சம்கமு ழங்கிய செந்திலின்
மேவிய சற்குரு நாதனிடம்
தங்கணி ஓதிம மே!சிமிழ்
ஒத்தத னத்தியர் தம்மரசே. 32

வெஞ்சமர் வேடர்கு லக்கொடி
சேய்இவள் மெச்சுத மிழ்த்துதிஓர்
வஞ்சக மென்றும தித்துவி
டேல்உன் வயிற்றிடம் நல்கிலையே
நஞ்சம யின்றபி ரான்மகிழ்
செந்தில் நகர்க்குக வேளிடமுற்(று)
அஞ்சல் ளித்தடி யார்களை
யாளும்அ ருட்புனை அங்கனையே. 33

யான்உனை எந்தை யிடத்துற
லால்அனை யென்றிடல் சத்தியம்நீ
தானுமுன் மைந்தன்எ னத்தமு
வாதுத விக்கவி டத்தகுமோ.

பானுவி னைக்கொடு செய்திடல்
போல்ஒளிர் பன்னிரு கைப்படைதோய்
கோனுறு சீர்திகழ் செந்திலில்
முன்வரு கோமள சுந்தரியே. 34

சந்தத மும்பகை சக்கள
மங்கையர் தம்மிசை கொள்வதுபோல்
மைந்தர்கள் மீதும் வெறுப்பது
லோகவ ழக்கினும் வம்பலவோ
செந்தமிழ் வண்மைதி கழ்ந்துவ
ளம்பொலி செந்தில்ந கர்க்கிடைவாழ்
கந்தனி டத்துறு கற்பக
மென்றுக வின்றரு கன்னிகையே. 35

வெந்தறு கட்பகை கொண்டுள
சக்கள மெல்லியல் பெற்றிடினும்
சொந்தவ யிற்றிடை பெற்றிடி
னும்பெறு சுக்கில மொன்றலவோ
சந்தம லிந்துயர் செந்திலில்
எந்தைத னக்கொரு தேவியென
முந்தவ ருங்கிளி யே'குயி
லோதையில் முன்னுமொ ழித்திருவே. 36

கண்ணிமை யாமைப சித்தல்வெ
யர்த்தல்க ளவுறல் இன்மையுறப்
பண்ணிடில் அக்கணம் நின்மக்
வென்றுப கர்ந்திட நாணுவனோ
விண்ணிடை நீடிய சந்தன
வெற்புவி ளங்கிய செந்திலில்வாழ்
புண்ணியன் நெஞ்சுக வர்ந்திடம்
வைகிய பூரண மங்கலையே 37

ஏகம யப்பொரு ளானகு
கன்செயல் யாதும்உ ணர்ந்தறியார்
ஆகம லாதுயிர் வேறிலை
யென்னும்அ சத்தியம் அஞ்சிலனே
மாகர்த மக்கொரு தாயக
மாகிவ யங்கிய செந்திலில்ஓர்
கோகன கப்பிடி யென்றுகு
லாவிய குஞ்சர மென்கொடியே. 38

நாரண னுஞ்சிவ சங்கர
னும்புணர் நல்லுரு வக்குகன்என்(று)
ஏரண வோதல்மெ யாகில்உ
னைத்திரு என்றிட லாம்அலவோ
ஆரணம் ஓலிடு செந்திலில்
வந்தினி(து) அன்னையெ னப்பரவார்
வாரண வல்லியெ னச்சொலி
னும்பெரு வாழ்வருள் மாதரசே. 39

உன்னைநி கர்த்தஉ ருக்கொள்ம
லர்த்திரு உன்னிறை யுங்கொளில்மால்
தன்னைம றந்தவள் போல்உல
கிற்சிலர் தம்மைவி ரும்புவளோ
புன்னைவ னம்பொலி செந்திலின்
மேவிய புண்ணிய வேள்மயலால்
பின்னையை யுங்கறு வத்துணி
வுற்றபெ ருத்தகை ஓதிமமே. 40

உந்தைமு தற்சிலர் வந்துதி
னந்தினம் ஒப்பறு செந்திலில்வாழ்
எந்தையி னைத்தொழும் வேளையில்
நீயுன்இ டத்துறல் எம்முறையோ

நந்தைய ணிந்தக ரத்திரு
மால்நய னத்துரு வாய்மகவான்
சிந்தையு வக்கவு ளர்ந்தள
வற்றசி றப்பொடு நின்றவளே. 41

மூவரும் வந்துயர் செந்திலின்
மேவிய முன்னவ னைப்பரவிப்
பூவலர் தூவினும் நீவில
காதல்பு னக்கொடி யால்அலவோ
சேவல்வ ரைந்தகொ டிக்கிணை
யின்றிய சீர்திக ழப்புகழ்வார்
ஆவல னைத்துமு டிக்கவி
ரும்பும்அ ணங்கர சாம்அமுதே. 42

பன்னிரு கைகொடு செந்திலில்
மேயப ரன்குற மங்கைநலாள்
உன்னிடம் வெளவினும் நல்குமெ
னச்சிறி துன்னுதி யோஅறியேன்
வன்னிரு தர்க்கொரு காலனெ
னத்திகழ் வச்சிர பாணிஅநாள்
பொன்னில மூடரன் ஆதிய
ரோடுபு கன்றருள் பொற்பிடியே. 43

தென்றல்ம ணங்கமழ் செந்திலு
ளான்மறு சென்மம்எ டுத்தியெனு
உன்றனி மித்தம்ம றத்தியை
விட்டபின் உள்ளம கிழ்ந்தனையோ
முன்றவ மில்லவர் காண்பரி
யாய்!முரண் முற்றிய வெண்படையாற்
குன்றம ரிந்தவன் ஊர்க்களி
றன்றுகொ ணர்ந்தது ணக்கொடியே. 44

மாசுறும் ஆதிவ யிற்றுறும்
நாளினும் வள்ளியை நீமகிழ்வுற்(று)
ஏசுவ தற்கிசை வாய்வன
வேடர்எ டுத்தமை யார்செயலோ
வீசுதி ரெக்கட லூடுவ
ரும்பல மெல்லியர் விண்ணுலகிற்
பேசுமெ ழிற்கொடு செந்திலு
ளார்துதி பெற்றுள பெண்ணமுதே. 45

இவ்வகி லத்துய என்றுன
ருட்டிறம் எண்ணினன் இன்றமிழ்தான்
எவ்வழி யிற்றரு வாள்கொல்உன்
மச்சினி என்செயல் ஒன்றுளதோ
பௌவம திற்றுயில் வானொடு
வந்தப ராபரை கண்குளிரச்
செவ்வன லன்னகு கன்சிகி
மீதுயர் செந்திலில் வந்தவளே. 46

மாமிய னந்தமெய் அன்பர்அ
ருட்பெற வைப்பது கண்டுள நீ
யாமிவண் எய்த்துவ ருந்திடல்
கண்டும்இ ரங்குகி லாய்முறையோ
பூமியும் அந்தர மும்பில
மும்புகழ் பொற்புறு செந்திலில்வாழ்
சாமியி டத்தில்இ ருந்தழி
யாதத வப்புரி தார்குழலே. 47

தேமிகும் நீபமு டைக்கண
வற்பெறு சித்தர்அ டக்கினரோ
நீமிக மாமியை யெண்ணிம
யங்குதல் நீதிகொ லோபகராய்

காமிய மும்பர முத்தியும்
நல்குக வின்றிகழ் செந்தில்என்
பாமிசை தோய்தரு பங்கய
மன்னப தம்பெறு குஞ்சரியே. 48

சங்கர மாமுனி வற்குநின்
மாமித ருங்கொண்ட யிற்சிறிதோர்
பங்கரு ளேதும்வ ழங்கவ
ராதது பாவம தோபகராய்
செங்கண்ம லர்ப்பெறு தந்தையும்
உண்டுதி னந்துயில் சீரினளாய்
அங்கணி லத்துயர் செந்திலில்
மேவிய ஆனைய ணங்கரசே. 49

மங்கல மெட்டும்வ ழங்கிய
செந்தில் வளம்பதி யிற்குகவேள்
செங்கரம் வாழ்கிளி யென்றனை
வந்துரை செய்தது கைதவமோ
கொங்கண ஞதிய சித்தர்ப
ராவிய கோதைகு டிக்கிசைவாய்
எங்கனை யீனும்வ யிற்றெடு
வந்தள றிற்பெறு குஞ்சரியே. 50

பேயையும் நல்லதெ னத்திகழ்
தீயர் பெருக்கிடை நின்றழியா
மாயைவ லைக்கிடை பட்டுளம்
இங்கும்வ ருந்துவ தென்றெழிவேன்
தாயைஅ யிற்படை யென்னஅ
ணிந்துயர் சந்தவ ரைத்தலம்வாழ்
சேயைம ணந்திடம் வைகிஅ
ளப்பறு சீர்பெறு சேயிழையே. 51

தாமநெ டுங்குழ லார்கள்உ
றுப்புறழ் தண்மலர் வாளிகொளும்
சாமன்மு தற்பகர் மூவர்பெ
ரும்பகை கண்டுக லங்குவனே
பூமன்வ ருந்தஇ டித்தசெ
யந்திபு ரத்தொரு வன்புணரும்
கோமள சுந்தர வேழமி
னைபல குன்றரி வான்மகளே. 52

குற்றமில் நின்னொடு வாதிடு
வாள்வளர் கொள்கை யறிந்தபினே
கொற்றமி குங்குலி சாயுதன்
எண்ணறு குன்றம்அ ரிந்ததனல்
புற்றர வஞ்சந டித்(து)அக
வித்திகழ் புள்ளிம யிற்பரியோன்
உற்றசெ யந்திந கர்க்குயர்
வெய்திட உம்பர்வி டுத்தவளே. 53

தேடிய தொண்டர் தமக்கருள்
வாழ்வருள் செந்தில்வ ளம்பதியோ
நீடிய சீரம ராவதி
யோநலம் நிச்சயம் நீபகராய்
ஆடிய தோகைம யிற்பரி
ஊர்தரும் அண்ணல்ம கிழ்ந்தணையக்
கூடிய கோமள மேகள
பம்புனை கோடுறு குஞ்சரமே. 54

செம்பது மம்பொரு கண்ணனில்
இங்குதி கழ்ந்துசி வன்றனைஒத்(து)
உம்பரில் வாழும்ந லங்கரு
த்தளர் வுற்றத றிந்திலையோ

கும்பமு னிக்கரு ளுங்குர
வன்சுவை கொண்டுசெ யந்தியில்வாழ்
அம்பவ ளம்புரை மெல்லித
ழாய்எழில் ஆனைய ணங்கரசே. 55

கொன்றுயிர் ஒவிஉ டற்றசை
யைப்பல கூறுப டுத்திமிகத்
தின்றுல வுங்கொடி யோர்களி
கண்டுதி டுக்குறல் என்றொழிவேன்
மன்றுடை யார்மகிழ் செந்தில்வி
சாகன்ம ணங்களி கூரும்அருட்
குன்றுறழ் கோகன கப்பிடி
யேயுமை கொண்டகு லக்கொடியே. 56

வெண்டலை யிற்பலி கொண்டுழல்
வார்தரும் வித்தக வேளருமை
கண்டருள் வானென உன்னைவ
லாரிக ளிப்புடன் நல்கினனே
தண்டமிழ் மன்னிய செந்தில்வ
ளம்பதி தன்னில்வ ரும்தவர்மேற்
கொண்டலெ னப்பொழி சீரருள்
கொண்டுகு லாவிய குஞ்சரியே. 57

வேடனு ருக்கொடு வில்லடி
பட்டுவெ தும்பிய வன்புதல்வன்
கூடவி சைந்தசெண் நீகொல்வ
னத்துறு கோதைகொல் ஆரறியார்
மாடம லிந்துயர் செந்திலில்
வந்துவ ழுத்திடும் வண்புலவோர்
நாடலை னத்தும் உறும்படி
நல்கிடும் நாகரி கப்பிடியே. 58

கோடிவ ளம்பெறு செந்திலின்
மேயகு கப்பெரு மானிடம்நீ
ஊடிய வேளையில் உன்னைவ
ணங்குவ துண்டுகொல் இன்றுகொலோ
பாடிய தொண்டர்க ளிப்புறு
மாறுப ரிந்தருளைப்பொழிசீர்
நீடிய கண்கள்இ ரண்டொடு
பொன்மைநி றம்பெறும் நேரிழையே. 59

தெள்ளிய சற்குரு தேசிகன்
என்றுயர் செந்திலில் நின்றபிரான்
வள்ளியி னைத்தொழு தான்எனில்
நின்மன வாரிசம் என்படுமோ
வெள்ளில்இ ளந்தளிர் அப்பிய
கொங்கைவி ளங்கும்அ ணங்கினர்கோ
அள்ளிமு கந்துகொ ளும்படி
வேழம்அ ளித்தஅ ருட்கனியே. 60

உன்னைய லாதொரு சத்தியும்
இன்றென உன்னும்உ ணர்ச்சியுளார்
என்னையும் ஓர்பொருள் ஆகுமெ
னக்கொளல் என்றுகொல் இன்றுரையாய்
தென்னையும் மாவும்நெ ருங்குந
லந்திகழ் செந்தில்வ ளம்பதியில்
பொன்னைஉ ருக்கிய மைத்ததில்
நின்றொளிர் புங்கமெய் தங்கையே. 61

60. வெள்ளில் - விளாமரம் அதன் தளிர்களை மாதர்கள் அணிவது பழங்கால மரபு. "வெள்ளிற் குறுமுறி கிள்ளுபு தெறியா" என்பது ஆற்றுப் படை.

விரதந லந்தரு செந்திலில்
மேவிய வித்தக் வேல்முருகோன்
சரதமு தற்பர மென்னினும்
நீயொரு தாய்தமர் உள்ளவளோ
வரதமி லங்குகை மாயன்வி
ழிக்கிடை வந்தனை யென்றும்வினோர்
நிரதம்வ ளர்க்கவ ளர்ந்தனை
யென்றும்நி கழ்த்தினர் நெஞ்சினளே. 62

எண்ணிரு மேனியி னொருரு
செந்திலி டத்தினன் என்பதுபோல்
நண்ணிரு கோலமெ டுத்தனை
நீயென நாடவொ ணாதுகொலோ
விண்ணிட மெங்குந்நி றைந்துள
தாரக மேவடி வாயமுதற்
பெண்ணிவ ளென்றறி வார்அறி
யத்திகழ் பெற்றிகொள் பொற்பிடியே. 63

ஆறுநெ றிப்பொருள் என்றறி
வார்அறி யக்குகன் அத்தொகையாம்
வீறுமு கத்தொடு நின்றனன்
நீயிரு மேனிகொள் விதமெதுவோ
சேறுமி குங்கழ னிக்கழு
நீர்மலி செந்தில்வ ளம்பதியிற்
நேறும னத்தின ராவரு
வார்புகழ் தெய்வம டப்பிடியே. 64

மாதர்நி லம்பொன்எ னப்பகர்
ஏடணை வந்துவ ருத்திடுமித்
தீதக லும்படி மெய்யருள்
வாழ்வுறு சீரிய நாள்உளதோ

63. எண் இருமேனி - பதினாறு வடிவம் முருகனுக் குரியது

கோதறு செந்தில்வ ளம்பதி
யிற்றிகழ் கொற்றவ னுக்கொருபேர்
ஆதர வானஅ ணங்கர
சேஇமை யார்தரும் ஆரமுதே. 65

சீதர ஞதிய ரும்புகழ்
சீர்கொடு செந்திலில் வாழ்குகனும்
நாதனை நம்புமெ னைப்பலர்
நிந்தைந வின்றிடல் நன்மைகொலோ
பூதமொர் ஐந்தினும் நின்(று)அவை
யற்றபு றத்தினும் மேயவளாம்
மாதரி முன்அவள் மைந்தன்உ
ரத்தொரு மாலைய ணிந்தவனோ. 66

செந்தமி ழிற்பல மாலைய
ணிந்துசெ யந்திபு ரத்துறையும்
கந்தனை நாடுமென் நெஞ்சம்வி
ரும்பிய காரணம் என்றருள்வாய்
தந்தமெ னப்பெரு மேனியும்
உள்ளத னிக்கரி யால்வளரும்
சுந்தர மெல்லியல் மோகவி
ஞேதசு மங்கள கோமளமே. 67

பத்தமி குந்துணை நம்பிவ
ழுத்திய பண்புறு மெய்ப்புலவோர்க்(கு)
எத்தனை பேறும்உ றத்தரும்
நின்னருள் என்றறி கின்றிலஞே
சித்தர னேகர்வி ரும்பிவ
ணங்கிய செந்திலவி சாகனிடத்(து)
உத்தமி யேஇமை யார்குலம்
வாழஉ தித்தருள் ஒள்வளையே. 68

கூனல்வ ரிச்சிலை வேடுவர்
கண்டுகு ழிக்கண்ண டுத்தவளால்
ஈனம டைந்தனை என்றுசொல்
வாருடன் யானுமி யம்புவனே
பானல்வ யற்பொலி செந்திலின்
மேவிய பண்ணவ னுக்கென்முன்
வானவ லாரிவ ளர்க்கவ
ளர்ந்தவண் வாழ்வுப டைத்தவளே. 69

தேவர்தம் ஊர்வரை ஆலைம
ணங்கமழ் செந்தில்வி சாகனதுள்
ஆவலுன் மீதில்இ ருப்பத
றிந்துனை அண்டுமெ னக்கருள்வாய்
பூவல யத்தொடு பாதல
முந்திகழ் பொன்னுல கும்புகழோர்
காவல வன்கரு கூலமெ
னப்பெறு கான்முளை யானவளே. 70

சொல்லிய சொல்லல தொன்றறி
யாதுது திக்குமெ னக்கருளால்
நல்லியல்(பு) ஒன்றுபன் னீரிலை
யிற்பொடி நல்கிய தில்லைகொலோ
பல்லியம் ஆர்தரு செந்திலின்
மேவிய பன்னிரு கைக்குகவேள்
புல்லிய வாரண மேயிமை
யார்புரி புண்ணிய பூரணமே. 71

காரவு ணப்பொரு தீயவர்
சிந்தைக ளிப்பது கண்டடியேன்
ஈரம னந்தளர் வெய்தல்

சூரன்மு தற்பலர் தம்பெரு
வாழ்வுதொ லைத்துயர் செந்திலில்வேல்
வீரன்ம கிழ்ந்தணை யும்படி
வந்துவி ளங்கும்வி யன்பிடியே. 72

குன்றின மெங்கணும் ஏகிநின்
அன்பர்கு ழாமொடு கைதொழுமால்
ஒன்றிய என்மன முந்துய
ரெய்திஇ டைந்தவி த்ம்பகராய்
வென்றிம லிந்துள செந்திலில்
மன்னும்வி சாகன்வி ருப்பமிகத்
துன்றிய கொங்கையு டைத்திரு
வேசுரர் சொன்னந கர்க்கிளியே. 73

மன்னிய சீர்திகழ் சோணகி
ரிக்கிடை வந்தகி ளிப்புலவன்
தன்னினம் அஞ்சஎ றிந்தகை
நின்கைத னக்குயர் சிவன்பவனே
பொன்னில மேவிய வெண்கரி
முன்புபு ரிந்தத வப்பயனும்
கன்னிகை யேஅலை வாயமர்
வானது காதலி ருப்பிடமே. 74

நன்னிலை யொன்றும் அடைந்திலன்
நின்புகழ் நாடொறும் ஓதிடுவார்
பன்னிய பாடல தன்பயன்
வெஃகிய பான்மைய நீந்திலையோ
வன்னிநி றங்கொடு செந்திலில்
மேவிய மன்னவன் வாமமதில்
பின்னிய வார்குழ லன்னமெ
னத்திகழ் பீடுறு பெண்கொடியே. 75

கற்றவர் தம்புடை யூடும
  கிழ்ந்துறு காரணம் நாடியதால்
பற்றலர் தம்பகை யும்பெரி
  தெய்திய பண்பறி கின்றிலையோ
குற்றமில் செந்தில்வி சாகன்விண்
  ணூருறை கோமக னல்கிடவெண்
பெற்றமு ளான்முத லோரறி
  யும்படி பெற்ற பிறங்கிழையே. 76

ஈசனி ரப்பினும் ஓரணு
  வேனும்இ டற்கிசை யாதவர்தம்
வாசல்கள் தோறுமஅ லைந்துமெ
  லிந்தவ ருத்தம்ஒ ழித்தருள்வாய்
தேசவிர் செந்தில்ந கர்க்குக
  வேள்புணர் செங்கள பக்கிரிநேர்
வாசமு லைத்துணை ஓதிம
  மேமக வான்முயல் மாதவமே. 77

எள்ளினுள் எண்ணெய்எ னக்குறை
  வொன்றில தெங்கணும் நின்றசெவேள்
வள்ளிம யக்கள விற்றுவள்
  வானென வம்பில்வ ருந்துதியோ
துள்ளிய சேலொடு சங்குல
  வும்பணை தோய்தரு செந்திலில்வாழ்
தெள்ளிய மேலவர் நள்ளிய
  வாறருள் தெய்வம டப்பிடியே. 78

பச்சிலை யிற்றிரு நீறுகொ
  டுத்துயர் பண்ணவ ருக்கரிதாம்
உச்சித மொன்றும்உ ரைத்தகு
  கேசன்உ றங்குவ துண்டுகொலோ

கச்சில கப்புணை கொங்கைம
டந்தையர் கண்டுக ருத்தமையா
ஒச்சிய மெய்தும் உருக்கொடு
செந்திலில் உற்றுயர் குஞ்சரியே. 79

கானம றக்கொடி யேமக
வானது கன்னிகை யேகுகனுக்(கு)
ஆனவு ரித்துடை யாளெனில்
உன்னைய லாதெவர் செப்புநரோ
நானம ணங்கமழ் கொங்கையி
லங்கிய நல்லிழை யார்பலர்சூழ்
மானனை யாய்இமை யார்புகழ்
செந்திலில் வந்தமர் சுந்தரியே. 80

மஞ்சரி கோவைமு தற்பல
பாடிவ னப்புறு செந்திலிடம்
சஞ்சரி யாதவ ரென்னமெ
லிந்துத விப்புறல் என்றொழிவேன்
செஞ்சரி ஆர்தரு கைமயி
லேஉயர் சேவலு ளான்இடம்வாழ்
குஞ்சரி யேகுளிர் கற்பக
நீழல்கொ ளுங்கொடி யன்னவளே. 81

செங்கையில் வேலுடை யான்அரன்
ஆயதி னந்தொறும் நீஅவன்மேற்
கங்கையெ னத்திகழ் வாயென
ஓதுதல் கட்டுரை யன்றுகொலோ
பங்கய னுதிய பற்பலர்
வந்துப ழிச்சிய வேலனிடத்(து)
அங்கனை யேஅலை வாய்நகர்
வாழ்பவர் அன்னையில் முன்னவளே. 82

79 ஒச்சியம் – வெட்கம்

காமர்மி கப்பெறு செந்திலில்
　　மேவிய கந்தன தன்பரெலாம்
நீமகிழ் வுற்றருள் செய்யுமுன்
　　வாழ்வது நிச்சய மாகுமதோ
தாமரை நீர்மலி செந்தில்வ
　　ளம்பதி தன்னில்வ ரும்புலவோர்
நேமம றிந்தருள் வாரண
　　மேகையில் நீலம ணிந்தவளே. 83

அன்னந டைக்குற வள்ளிதன்
　　மெய்யருள் அத்தனை எய்தியும்நின்
தன்னரு ளின்றியென் நெஞ்சம்வ
　　ருந்தல்ச கிக்கும்வ சத்தினதோ
கன்னல்வ ரிச்சிலை யானது
　　தங்கைக ளிற்றலை யாய்அலைவாய்
நன்னகர் வாணனை நாடொறு
　　மேவுந லம்பெறு குஞ்சரியே. 84

செச்சைவ னம்பொரு செந்திலில்
　　வாழ்குரு தேசிக னுக்குளவாம்
இச்சைமு தற்பகர் முப்பொரு
　　ளேடுனை யாதென லாம்நுவலாய்
பச்சைநி றத்துவ லாரிதன்
　　வெள்ளிய பாரம தக்களிரும்
கைச்சயி லங்கொடு வந்துவ
　　ளர்த்தக னங்குழை மெல்லியலே. 85

புன்கிள விப்புன வேடம
　　டந்தைபு கட்டிடும் இச்சையெலாம்
நின்கிரி யைப்பயன் இன்றெனில்
　　என்செயும் நிந்தைமி கத்தருமே

பொன்கிளர் மேனியு டைத்திரு
வேபுய பூதர மீதினிலோர்
இன்கிளி கொண்டு செயந்தியில்
வாழ்வுறும் எந்தையி டத்தினளே. 86

வெண்கழி யென்பணி வார்தரு
செந்தில்வி சாகன்வி லைக்கமையா
ஒண்கன கத்திரு ஆபர
ணங்கொளல் உன்உற வால்அலவோ
விண்களி கூரவி றற்பெறு
தானவர் வேரற வென்றருபூந்
தண்கம லத்திடை வந்தழு
தாய்விதி தன்றுணை யானவளே. 87

எத்தனை மானிட ரோஎனை
நாடொறும் எள்ளவி டுத்தனையே
அத்தனை பேரும்நின் அன்பன்எ
னப்புகழ் ஆண்மைய ளித்தருள்வாய்
மத்தனை யாளவ லான்உறை
செந்தில்வ ளம்பதி யிற்புலவோர்
நத்தனை யேஇமை யார்விழி
மங்கையர் நண்ணிய நாயகியே. 88

வேதமும் ஆகமம் ஆதிய
நூல்களும் வேறுள ஓதையுமாம்
நாதம யப்பொருள் என்னுனை
நம்பிய நான்மெலி யத்தகுமோ
காதள வோடிய கண்ணொடு
விண்ணுறை கன்னியர் பற்பலரும்
பாதமி றைஞ்சிட வந்தலை
வாய்அதி பன்தொட நின்றவளே. 89

வஞ்சர்மொ ழிப்படி சென்றால்
    கிற்கெடும் மானிடர் யாவரும்நின்
செஞ்சர ணத்தடி மைப்படு
    மாறுசெ யும்படி நண்ணிலனே
சஞ்சல மற்றம னத்தினர்
    நாடிய சண்முக வேள்புணரும்
குஞ்சரி யேஅலை வாய்நகர்
    மேவிய கோல்வளை மாதரசே. 90

திக்குள டங்கிய பற்பல
    மன்னர்தி டுக்கிட நின்றொருவன்
குக்குட கேதன மேசெயம்
    என்றுரை கூறவ லான்எவனே
முக்குண முந்தவிர் மோனமு
    டிப்பைமொ ழிந்தரு ளுங்குகனே(டு)
இக்குமி கும்பணை சூழ்தரு
    செந்திலி டங்கொள்இ ளம்பிடியே. 91

என்புரு கும்படி நின்றுது
    தித்தும்இ ரங்குகி லாய்இதனால்
தென்புக லிப்பன வற்குநின்
    மாமிசெ யுந்திறம் உன்னிலையோ
மின்புரை யுங்கதிர் வேல்கொடு
    செந்திலில் மேவிய வீறுடையான்
தன்புய மால்கொடு விண்ணில்வ
    ளர்ந்துத ரைக்கிடை வந்தவளே. 92

பூவல யத்திடை நின்னைவ
    ணங்கிய புண்ணிய மில்லவர்போல்
சர்வவி டுத்துவி டாதரு
    ளாண்மைத னைச்சிறி தின்றருள்வாய்

தேவர்பி ரான்மக ளாய்வள
மிஞ்சிய செந்திலி டத்துறையும்
காவலன் முன்மனை யாய்மிளிர்
கின்றதொர் கற்பக நற்கனியே. 93

பந்தம றுத்தப ரம்பரை
யாளர்ப தத்துக ளைப்புனைசீர்
வந்தபி னும்கொடு மானயவ
லைக்கிடை மாழ்கும்வி தம்பகராய்
அந்தண ரார்வமி கப்பெறு
செந்திலில் ஆறுமு கத்திறைவன்
சந்தத முந்தமு விக்கொளும்
வாழ்வுத னழத்துள குஞ்சரியே. 94

மெய்யடி யார்புடை யூடுபு
குந்தவர் வெஃகிய வாறுமிகச்
செய்யநி னைத்தயர் சிந்தையி
லன்றுதி கழ்ந்தது நீயலையோ
வையமும் வானும்வ ழுத்திய
செந்தில்வ ளம்பதி யிற்குகவேள்
கையணி துன்றிய கொங்கைவ
னப்பொடு கற்புயர் பொற்பிடியே 95

வேலணி நீடிய தோள்கொடு
செந்திலில் மேவிய வேளருமைப்
பாலனெ னப்பல ருஞ்சொலு
மாறுப ரிந்தருள் ஈகுவையோ
மாலவ னுந்திரு வும்புவி
மாதும்வ லாரியு டன்சசியும்
சாலவி ரும்பிய பெண்ணமு
தேமிளிர் தங்கநி றக்கொடியே. 96

எவ்வகை மாதரும் நீயல
திலையெ னத்தெளி யுந்தெளிவார்
கைவயி னின்றவர் ஏவல்பு
ரிந்துக ளிக்குந லந்தருவாய்
பௌவம லம்புறு செந்திலில்
நீடிய பண்ணவ னைப்புணரும்
தெய்வம டப்பிடி யேஅடி
யார்பிழை தீரவி ழிப்பவளே. 97

என்றுகு கப்பெரு மானெனை
யாளென னச்சிறி தெண்ணினனோ
அன்றுனை நானினை யாவிடி
னுஞ்சிசு ஆதிய துண்டலவோ
மன்றுடை யார்புகழ் செந்திலின்
வாழ்வைம னத்தினி டங்கருதிப்
பொன்றுத லில்லவர் ஊரில்வ
ளர்ந்துபு வித்தலை வந்தவளே. 98

உன்னது கொண்கன் அடித்துணை
நம்புமொ ருத்தனெ னப்புவியோர்
சொன்னபு கழ்ச்சிபொ றுத்துமி
வாறுது யர்ப்படல் நீதமதோ
கன்னல்வ ளம்பொலி செந்திலின்
மேயவர் கண்டுக ளிப்புறவாழ்
அன்னந டைத்திரு வேயிமை
யாதவேள் ஆனைத ரும்பிடியே. 99

எட்டுவ கைப்படு சித்தியும்
எய்தியி கத்தினி தாடியபின்
விட்டுணு ஆதிய ருக்கரி
தாமுயர் வீடுமுறப் புரிவாய்

திட்டும வர்க்கும்இ ரங்கிய
சீர்திகழ் செந்தில்வி சாகனிடத்(து)
அட்டுள பாலுறழ் சொற்சொலி
நின்றதெய் வானைய ணங்கரசே. 100

கஞ்சமா மலர்த்தடம் கவின்ற செந்திலில்
குஞ்சரி மாலையுட் கூறும் நூறுபாட்(டு)
எஞ்சலில் மனத்தகத் திருக்கில் எவ்வகைப்
பஞ்சமும் தீர்தரு பரிசு நல்குமே.

வேலுமயிலுந்துணை

———

உ

குருவே துணை

# திருச்செந்தூர்ப் பிரபந்தம் பதினாறுள்

# 12-வது வாளலங்காரம்

# 13-வது வண்ணப்பதிகம்

## முன்னுரை

**செந்திற் குமரன் றிருவார் துணைவனென**
**வந்துற் றருள்வீர வாகுபுகழ் – சந்தப்**
**பதிகமலங் காரமெனப் பாடினான் நெல்லை**
**வதிதண்ட பாணிமுனி வன்.**

1. வாளலங்காரம். திருச்செந்திற்பதியின் கண் கோவில் கொண்டு விளங்கும் முருகப்பெருமான் திருவவதாரத்துடன் தொடர்பு கொண்டவரும், கந்த புராணத்துட் கூறும் நவ வீரர் களில் முதலாவதாக உள்ளவரும் அசுரர்களது போர்க்களத் தில் பானுகோபனை வீழ்த்தியவரும், சூரனிடம் திருச்செந்தி லிருந்து தூது சென்று வீரச் செயல் புரிந்து வந்த வெற்றி யினரும் ஆகிய வீரவாகு தேவரது வாளின் பெருமைகளைக் கூறுவதே வாளலங்காரம் ஆகும்.

கந்தன் புகழைக் கூறிய கந்தரலங்காரம் அருணகிரிநாதர் பாடியது போல இந்நூல் வாளாயுதத்தின் புகழைக் கூறுவதால் வாளலங்காரமெனப் பெயர் பெற்றது. இதன்றி, வேலலங் காரம்–மயிலலங்காரம் ஆறெழுத்தலங்காரம் என்று அதனதன் பண்புக்கிசைய இந்நூலாசிரியரான – வண்ணச்சரபம் தண்ட பாணி சுவாமிகள் பாடியுள்ளனர். அவை முன்பே பதிக்கப் பெற்று வெளி வந்தன, இது இப்போது பதிப்பாகியது.

2. வண்ணப்பதிகம்: பதிகமென்பது பத்துப் பாடலையுடை யது. முருகன் அன்புக்கிசைய, பன்னிரு தோள்கட்கும் உரிய தாகப் பன்னிரண்டு பாடல்களில் முருகன் பதிகங்களை இவர்

பாடியிருக்கின்றார். வீரவாகுதேவரும் முருகன் தொடர்புடைய காரணத்தால் பன்னிரண்டு சந்தப் பாடல்களில் பாடியிருக்கின்றனர். சந்தப் பாடல்களும் பெரிய பாடல்களாகவும், தய்ய-தன்ன-தாந்த-தாத்த-ஆகிய வலிய சந்தப்பாடல்களாகவும் அமைத்திருக்கின்றனர். இவர் இயற்றிய-வண்ண இலக்கணத்துள், சந்தங்களின் பிறப்பு வகைகளை விளக்கிக் கூறியிருப்பதோடு அறுவகையிலக்கண நூலிலும்,''வண்ண இயல்பு என்று ஒரு பகுதி'' யாப்பிலக்கணத்துள் கூறுகின்றனர். அதில்

'' தனவும் தானவும் எளிதினும் எளியன
தத்தவும் தந்தவும் எளியன, தாத்தவும்
தாந்தவும வலியன, தய்யவும் தன்னவும்
வலிதினும் வலியன என்பது வழக்கே ''

என்று கூறுது கொண்டறியலாம். அத்தகைய, வலிதினும் வலிய தான-தன்ன-தய்யச் சந்தமும் பிறவும் கொண்டு அப்பதிகம் உள்ளது. எந்தப் பாவினும் சந்தப்பா முடி போன்ற சிறந்த தகுதியது. நூல் முடிவாகவுள்ள இப்பகுதி தமக்கே இயல்பான சந்தக் கவியிற் பாடியிருப்பது போற்றற்குரியது.

வீரவாகு தேவரிடத்து இந்நூலாசிரியரான திருப்புகழ்ச் சுவாமிகள், முருகதாச சுவாமிகள் என வழங்கும், வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகட்கு மிகப்பற்றுண்டு. இந்நூல்களில் அநுபூதியாக அவர் விளக்கிய செய்தி கூறப்படுகிறது. பாடலின் நடை, சந்தப்பொலிவு-கருத்து நயம்,முருகன் அருட்டிறம் வாளின் வீரச்செயல், தமது அன்பு வழிபாடு-அநுபூதியாதியவற்றை அமைதியுடன் உற்று நோக்க,எளிதிற் புலப்படுவதாகும்.

அலைவாய் உகந்த பெருமான் அருளாணைப்படி, பாடிய பிரபந்தம் பதினாறு என்ற எண்களில்,12-13-வதாக அமைக்கப் பட்டுள்ளது.

வள்ளி நாயகி பிள்ளைத்தமிழ் முன்னமே பதிப்பான படியால் வரிசையின் இடையில் உள்ளதாயினும் அவற்றை

*14 – 15 – 16* ஆக இருக்கும்படி ஒதுக்கி, திருச்செந்தில் தேவத் தானத்து வெளியீடாக வருகின்றவற்றை ஒன்று முதலாக பதின்மூன்று வரை வரிசை எண் அமைய இப்போது பதிப்பாகி யுள்ளது. இந்நூல் ஆசிரிய சுவாமிகளிடம் முருகன், தனக்குப் பன்னிரண்டு, வள்ளி, தெய்வயானைக்கு இரண்டு, வீரவாகு தேவர் இரண்டு ஆக பதினறு நூல் பாடும்படி ஆணையிட் டனர் என முன்பே கூறப்பட்டிருக்கிறது.

வள்ளி தெய்வயானை யென்ற இருவர்க்கும் இரண்டும் வீரவாகுக்கு மட்டும் இரண்டும் பாடச் சொல்லினர். அவ ரிடத்து முருகனுக்கு உள்ள அன்பை விளக்கினர் போலும் என்று கொள்ளலாம். ஏனெனில், அசுரப்போர் முடித்து வீரவாகு தேவர் முருகப் பெருமானை வணங்கி நின்றனர். பெரு மான் மகிழ்ந்து யாது வரம் தேவையென்று வினவினர். கூறு கின்றார். பாடலைக் காண்க.

**சோலம் நீடிய நிதிபதி வாழ்க்கையும் குறியேன்**
**மேலை யிந்திரன் அரசினைக் கனவினும் விரும்பேன்**
**மால யன்பெறு பதத்தையும் பொருளென மதியேன்**
**சால நின்பதத் தன்பையே வேண்டுவன் தமியேன்.**

**கந்தபுராணம் பானுகோபன் வதைப்படலம் 154 கவி.**

என்பது கொண்டு அறியலாம்.

ஆயிரத்தெட்டு அண்டங்களை நூற்றெட்டு யுகம் அரசு புரிந்த சூரனும் தம்பியரும் பிறருர் என்ன ஆயினர். திருமால் சக்கராயுதத்தை யிழந்து வெறுங்கையுடன் அவ்வளவு காலமு மிருந்தனர், பிரமன் நாளும் பஞ்சாங்கம் கூறி வந்தார். இந்திரனே குயிலாக வேற்றுருக் கொண்டு பூவுலகம் வந்து மூங்கிலாய்த் தவமிருந்தான். ஆகவே இத்தகைய எவ்வித வாழ்வும் நிலையற்றன. முருகன் திருவருட் செல்வமே உயர் வுள்ளது. அதைத் தரவல்லது அன்பு என்று தாம் வேண் டினர். ஆயின் அதுவரை யில்லாதிருந்து வேண்டினர் என்ப தல்ல, மேலும் வேண்டுமென்ற அவாவை வெளிப் படுத்திய

முறையில், மாயா வசப்பட்டுழலும் நம் முன்னோர்க்கு அறிவுறுத்தியதாக முறை.

அந்த நல்வரம் முத்தியின் அரியதொன் றுஅதனைச்
சிந்தை செய்திடு தவத்தரும் பெறுகிலர், சிறியேன்
உய்ந்தி டும்படி அருள்செய வேண்டுமென் றுரைப்ப
எந்தை கந்தவேள் உனக்கது புரிந்தனம். என்றார்

கந்த புராணம் பானுகோபன் வதைப்படலம் 55 ம் வி.

மேலும் அன்பை வேண்டும் வரம் முத்தியைவிட மேலானது, அதைப் பெரிய தவத்தரும் பெறுகிலர் என்று சிறப்புக் கூறுகின்றார். முருகப் பெருமான் அருளினார் என்பதறிகிறோம். பின் வந்த பல பெரியாரும் இதைப்பாடியே வேண்டுகின்றனர். அத்தகைய பேரன்பர் விரவாகு தேவர் வேண்டியதை நல்கும் பேரருளாளன் முருகப்பெருமானின் துதிநூல்களாகிய இவை தேவத்தான வெளியீடாகவே வெளி வந்தது மிகமிகச் சிறப்புடையது. இத்தகைய செல்வத்தை வழங்க முன் வந்தவர் இலஞ்சி வள்ளல், சைவத்திருவாளர், ஷை தேவத்தான தர்ம கர்த்தர் I. A. சிதம்பரம் பிள்ளை அவர்கள் ஆவார்கள். அவர்கட்கு இவற்றை அறிமுகம் செய்து வைத்தவர், கோவை கௌமார மடாலயத் தலைவர் இளவரசு வித்வான் சுந்தர சுவாமிகளாவர். இவர் தண்டபாணி சுவாமிகள் மாணவர். ஸ்ரீ இராமானந்த சுவாமிகள் வழிவந்தவர்.

உ

முருகக் கடவுள் துணை

# திருச்செந்திற் பிரபந்தம் பதிறுள்

# 12-வது வீரவாகுமூர்த்தி வாளலங்காரம்

### காப்பு

நாளலங் காரச் சுடர்போலும் தூண்டுவி நாயகன்பொற்
ருளலங் காரந் தனைநாடு வாம்,செந்திற் சண்முகன்மற்
ரேளலங் காரத் துணைவீர வாகுகை தொட்டவெற்றி
வாளலங் காரக் கவிநூறும் நன்றென்ன வாய்ப்பதற்கே.

## நூல்

### கட்டளைக் கலித்துறை

பொன்னம் பொருப்பனும் போற்றிய
செந்திற் புரவலன்றன்
முன்னம் பிறங்கும் முரண்வீர
வாகு முனைக்கதிர்வாள்
இன்னம் பிறவி எனக்கீயு
மாறுளத்(து) எண்ணுவனேல்
அன்னம் பரியெனக் கொண்டான்
தலைகள் அறச்செயுமே. 1

காள்கண்ட மேனித் திருமால்செந்
தாமரைக் கைப்படைகள்
வேள்கண்டு நண்ணும் வியனெழிற்
செந்தில் விசாகனம்பொற்
ருள்கண்ட சிந்தைத் திறல்வீர
வாகு தடங்கரத்து
வாள்கண்டு நாணு வனவோஅன்
ரேசொல்லும் வானவரே. 2

அந்திப் பொழுதை நிகர்மேனி
ஈசன் அணிபிறையோ
கந்திக் களமுடைப் பார்ப்பதி
யாள்நுதற் காமர்கொல்லோ
செந்திற் பதிச்சந்த மால்வரை
யானைத் தினந்தினமும்
வந்திப் பவர்பின் ரொடர்வீர
வாகுகை வாட்படையே. 3

தேசவிர் முத்தும் பவளமும்
கோத்துத் திகழ்ந்தமுந்தித்
தூசணி யும்சசி மங்கல
மின்னும் துலங்குவது
கூசவெஞ் சூர்வென்ற செந்தூர்க்
குகன்திருக் கோயின்மணி
வாசலில் நிற்கும் முதல்வீரன்
வாள்கண்ட வல்லபத்தே. 4

வம்பில் இழுத்து வழக்கிடும்
சத்துரு வாதைமிஞ்சி
வெம்பிய நெஞ்சம் உடையீர்!
ஒருண்மை விளம்புகின்றேன்
தும்பி முகத்தவன் பின்றோன்றிச்
செந்திலிற் றோயொருவன்
தம்பி யருள்முத லாவான்கை
வாட்புகழ் சாற்றுமினே. 5

காளா யுதத்து மறலிக்கும்
நான்முகக் கள்வனுக்கும்
வேளா யுதத்துக்கும் அஞ்சேன்குக்
கூவென மிக்கொலிக்குந்

தாளா யுதக்கொடிச் செந்தூர்க்
குகன்முதற் றம்பிதன்கை
வாளா யுதந்துணை யாமென
நாடொறும் வாழ்த்துவனே. 6

தீரெடுத் தாடும் பிரான்மகன்
சேனைத் தலைவன்கையில்
வாளெடுத் தான்உடன் வானோர்
உவகை மலிவுபெற்றார்.
தோளெடுக் குந்திறற் சூரன்செய்
மாதவத் தோன்றல்பட்டான்.
தேளெடுக் குங்குணந் தீர்க்குஞ்செந்
தூர்பெரும் சீருற்றதே. 7

மாலாயு தம்பொருங் கண்ணுடைக்
காளிதன் வன்கரத்துச்
சூலாயு தத்தைத் தறித்தவில்
வீரன்கைத் துங்கவைவாள்
வேலாயு தம்புனை தோட்செந்தி
லான்கையில் மேவும்வெள்ளைக்
காலாயு தத்தின் நகம்போல்
வளைந்து கவின்றதுவே. 8

சூதப் பருமரஞ் செய்தகல்
லோலந் தொலைவருஞ்சீர்ச்
சீதப் புணரித் திருச்செந்தில்
வேலவன் செங்கமலப்
பாதப் பரிசுணர் வீரன்கை
வாள்ஒளி பட்டவுடன்
பூதப் பிரேதன் பசாசமெல்
லாம்புறம் போய்விடுமே.

செஞ்சாலித் தண்பணைச் செந்தூர்
விசாகன் திருவருளால்
அஞ்சாத மேன்மை பெறும்வீர
வாகு அணிந்தவைவாள்
நஞ்சார் கணைக்கொடுங் கைப்பானு
கோபன் நடுக்களத்தின்
மிஞ்சாது துண்டுதுண் டாய்விழ
வெட்டிய வீறுள்ளதே. 10

கருணைப் பெருங்கடற் செந்தூரன்
அன்பர் கருத்திலெண்ணும்
தருணத்தில் வந்துத வும்தனி
வீரன் தடங்கையின்வாழ்
அருணைப் புலவன் கவிசூடிக்
கொண்ட தயத்தென் வெண்சொற்
பொருணத்து கின்றது கொல்லோவெண்
டாமரைப் பூங்கொடியே. 11

ஒன்பது கோட்கள் எனப்பேர்
பெறினும் ஒருபரிதி
என்பதை மற்றவை ஒக்குங்கொ
லோஅவ்வண் ஈடுபெற்றும்
மன்பதைக் காதர மாஞ்செந்தி
லான்திரு வாயில்வலத்(து)
அன்பர்கள் போற்றநிற் பான்றன்
கைவாள்எமக் காதரமே. 12

ஆராதிப் பாருக் கெளியசெந்
தூரன் அருட்டிறந்தோய்
வீராதி வீரரின் முன்னோன்
கரத்தில் விளங்கியவாள்

சீராரும் சேவற் கொடியே
செயமெனச் செப்புநர்க்கும்
ஓரா றெழுத்தின் பயனோர்ந்
துளார்க்கும் உயிர்த்துணையே. 13

மடலூரும் காமியர் போற்செந்தி
லானருள் வாஞ்சையுற்றுக்
கடல்சூழும் ஞாலமுற் றுஞ்சொல
வாழும் கவிப்புலவர்
உடலாவி மெய்ப்பொருள் என்றுள
மூன்றும்நன் கோர்ந்துரைக்கில்
அடல்வீர வாகுகை வாட்படைக்
கென்றும் அடைக்கலமே. 14

சூரன்ற னூரினிற் றூதெனப்
போய்வருந் துங்கமுறும்
வீரன்கை வாட்படை வெற்பினைப்
பேயினை வெல்லுமெனும்
சீரன் பிலாமையி னலல்ல
வோசெந்திற் சேவகனைக்
கீரன் துதிபுரிந் தான்முத்தி
வாழ்வினைக் கேட்கைவிட்டே. 15

பௌயமொப் பாம்பவம் போக்கச்செந்
தூரிலோர் பன்னிருகைச்
செவ்வனல் வெற்புள தல்லாமற்
செப்புநர் செப்புகின்ற
எவ்வகைச் சத்துரு வுந்தவிர்த்
தானந்தம் ஈவதற்கு
மௌவலந் திண்புயச் சீர்வீர
வாகுகை வாளுளதே. 16

முத்தமிழ்ச் செல்வம் முதிர்செந்தி
லான்றனை முன்னுமுண்மைப்
பத்தர்அ னேகர்என் றாலும்அன்
னோன்திருப் பாதமலர்
வைத்த மனத்து வயவீர
வாகுகை வாட்புகழை
உத்தமத் துத்தம மாம்சிலர்
தாமிங் குணர்பவரே. 17

கோளேது மின்றிய செந்தூரில்
வாழும் குமரன்மலர்த்
தாளே கதியென நம்பவொட்
டாமற் றடுக்குமொன்றோ
தோளேற்ற முற்றுந் தொலைப்பமுன்
வாயிலிற் றேன்றுநன்கை
வாளே துணையென நம்பிய
தென்றன் மனத்தகமே. 18

குன்றங்கள் தோறும் [illegible]டிச்
செந்திலங் கோ[illegible]
மன்றன் கருணை மலிவீர
வாகுகை வாளுறவாற்
கொன்றங்க வாழ்ந்து குணுங்கர்எல்
லோரையும் கொக்கரித்து
வென்றங்கும் இங்குமொன் றாகநிற்
பார்க்கில்லை வேதனையே. 19

அங்கியும் அஞ்சுறத் தாக்கிய
தாருகன் ஆண்மைமுற்றும்
மங்கிடச் சேனையுள் வல்வீர
வாகுசெய் வாட்பெரும்போர்

பொங்கிய செல்வத் திருச்செந்தில்
வேலவன் பொற்புயத்துப்
பைங்கிளிப் பாவலன் செந்தமிழ்ச்
சந்தப் படிப்பொத்ததே. 20

பல்வீரர் மெச்சிய பானுப்
பகைவன்முன் பட்டுவிழக்
கொல்வீர வாகு வலக்கரத்
தேந்திய கொற்றவைவாள்
மல்வீரம் பேசி எதிர்ப்பாரைச்
சீக்கிரம் வாருமெனச்
சொல்வீரம் காண்பவர் காணச்செந்
தூரிற் றுலங்கியதே. 21

சேவலைத் தோகை பயிலை,வை
வேலைச் செழுந்தமிழை
மூவரும் போற்றிய செந்தூரை
நிந்திக்கும் மூடர்தம்புன்
நாவறுக் கச்சலி யாதது
சூரன் நகர்நடுங்க
மாவலி காட்டிய வீரன்கை
தாங்கிய வாளதுவே. 22

மகர மகோததி யூடுறும்
வீரம யேந்திரத்துச்
சிகரிமுன் தூள்படச் சென்றவல்
வீரன் திருக்கையின்வாள்
நிகரில்செந் தூர்த்திருக் கோயிலின்
வாயிலின் நீடுதுதி
பகரவல் லார்தம் மனத்தே
குலாவிய பண்பினதே. 23

சந்தனக் குன்றுடைச் செந்தூர்க்
குமரன் தடம்புயத்திற்
செந்தமிழ்ச் சந்தப் பசுங்கிள்ளை
யானவன் சேருமுன்னம்
கொந்தலர் தோள்முதல் வீரன்கை
வாள்வலி கொண்டலவோ
அந்தகன் தன்னை மதியாது
பேசி அதட்டியதே. 24

நங்குகன் செந்திலிற் சொல்லிய
வாறொரு நாவலன்பெண்
அங்குவப் பெய்துறும் தூதேக
வேறுரு வாகியநாள்
செங்குரு தித்தனி வாளினை
வீர சிகாமணிதான்
எங்குவைத் தேகினன் சொல்லாய்
என்நாவில் இருந்தவளே. 25

வெந்திறற் சூரன் எதிரோர்சிங்
காதன மீதிருந்தோன்
செந்திலிற் சண்முகன் சொல்லால்
மனிதரிற் சிற்றுருக்கொண்(டு)
இந்திரன் வாழ்திசைத் தீவினிற்
போமன் றெழிற்கரத்து
மந்திர வாள்சிறுத் தோருறை
யோடு மடியுற்றதே. 26

எளியவன் என்றுசெந் தூரனைத்
தேர்ந்தவொர் இன்புலவன்
களியடை வானவன் பேர்தோயும்
பாதிக் கவிசொலுமுன்

புளிய மரக்கொம்பு துண்டாக
வெட்டிய பொற்புடைய(து)
அளியமர் தார்ப்புய வீரன்கை
வாளென் றறிந்தனமே. 27

மணிநா அறுத்ததும் வான்றொடும்
தென்னை மரத்தின்நெற்றை
எணியோது முன்னம் புவிமீது
வீழ்த்ததும் ஏத்துமன்பர்
பிணியாவும் தீர்த்தருள் செந்தூரன்
பாதப் பிரசமலர்ப்
பணிவீர வாகுகை வாளென்
றோர்பவர் பண்புநன்றே. 28

செஞ்சரண் போற்றுநர்க் கானந்தம்
ஈந்தருள் செந்திற்பிரான்
அஞ்சல்நல் கப்பெறுஞ் சீர்வீர
வாகுமெய் யன்பர்நெஞ்சம்
சஞ்சலம் எய்தத் தகுமாறு
செய்யும் தவறுடைய
வஞ்சகர் தங்குடர் மாலையெல்
லாம்கொற்ற வாட்கிடுமே. 29

இடர்களைந் தானந்தம் எய்தவும்
கூற்றுவன் ஏவவரும்
படர்அணு காநலத் தாற்கந்த
லோகப் பதிபுகவும்
திடர்பட வாரியைச் செற்றசெந்
தூரன்பிற் சீர்த்துணைவன்
சுடர்வடி வாட்படை ஒன்றுமுன்
னின்று துணைச்செயுமே. 30

ஆரிய ருந்தமிழ் வாணரும்
போற்றும் அணிகொள்செந்திற்
சீரிய வேண்முதற் சேவக
வீரன் திருக்கரத்துக்
கூரிய வாளினை நன்குற்று
நோக்குமுன் கோதுபடாச்
சூரிய னும்பிறை யானுன்கொ
லோஎனத் தோற்றியதே. 31

தெய்வேத் திரனயன் மால்சிவன்
போற்றிய செந்தின்முந்நாற்
கைவேட் கிளையன் அவனுதல்
போலக் ககனத்தில்வாழ்
மைவேலைக் கண்ணியர் வாடாது
சூரனை மாய்த்துவரும்
வைவேற் கடுத்தது வல்வீர
வாகுகை வாட்படையே. 32

கோளைப் பெயர்த்துக் குரங்காடும்
சோலையிற் கொந்துவிரி
பாளைக் கமுகடர் செந்தூர்
புரந்தருள் பன்னிருகை
வேளைப் பணியும் விறல்வீர
வாகுகை வேண்டி,அவன்
வாளைத் துதிப்பவர்க் கெந்நாளும்
இல்லை மனப்பயமே. 33

சந்தத முஞ்சத மாமெனச்
சார்வது சந்தவரை
சிந்தனை யூடு தியானிப்ப
ஆறு திருப்பொறிகள்

செந்தமிழ்ப் பாடல்க ளால்மற
வாது தினந்தினமும்
வந்தனை செய்வது வேல்வேட்
கிளையவன் வாட்படையே. 34

பொன்னுடர்க் கோர்பெருந் தாரக
மாகிப் புவியிடத்துத்
தென்னாட்டில் மன்னிய செந்தூர்
விசாகன் திருச்சமுகம்
முன்னாக நிற்கும் முதலாய
வீரன் முரண்கரத்தில்
ஒன்னார்தம் ஊரினைப் பாழாக்கும்
வாளொன் றொளிர்கின்றதே. 35

தகரக் குழல்வள்ளி பங்காளன்
செந்திற் றலம்புரந்து
நிகரற்ற கீர்த்தி பெறுவீர
வாகுகை நீள்சுடர்வாள்
மகரக் கொடியுடை யான்றன்னை
நீற்றிய வல்லவர்வாழ்
சிகரத் தலையின் பிரபையைப்
போலத் திகழ்கின்றதே. 36

பெண்ணியல் நன்மை பிறங்கெழிற்
குஞ்சரி பேணிநித்தம்
நண்ணிய செந்திற் பெருமான்றன்
மெய்யன்பர் நாடல்முற்றும்
விண்ணினும் மண்ணினும் செய்கின்ற
வீரன்கை வெற்றிவைவாள்
வெண்ணிறம் செந்நிறம் என்றொரு
வாறு விளம்பரிதே. 37

காயக நெஞ்சுடை யார்மரு
வாத கவின்கொள்செந்தில்
நாயகன், தோழனும் தூதனும்
தொண்டனும் நானெனச்சொல்
வாயக வீரன்கை வாளேவன்
சத்துரு வாதைமுற்றும்
போயகம் பூப்பச்செய் தென்றனை
யாண்டருள் புண்ணியமே. 38

ஆட்படு வார்க்கருள் ஆனந்தம்
நல்கும் அயிற்செந்திலான்
தாட்பது மங்கம முந்தலை
வீரன் தடம்புயத்து
வாட்படை யேஉன்னை நான்மற
வேன்மிஞ்சும் வஞ்சநெஞ்சார்
கோட்பகை தீர்த்துக் கவுமாரர்
ஊடெனைக் கூட்டுதியே. 39

அத்தனை ஆண்டசெந் தூரான்
அடிமைஎன் றம்புவியோர்
நித்தமும் சொல்லும் பெரும்பேறு
பெற்று(ம்) நெடிதயர்ந்தேன்
சித்தரும் பேசும் திறல்வீர
வாகு திருக்கரத்தில்
வைத்தவை வாளை மறவாது
போற்று மதியின்றியே. 40

மையணி கண்ணுமை தன்னருள்
கொண்டு வளர்ந்தபின்பு
வையகத் திற்பிறந் தோரிற்
றலைவன்கை வாளை நம்பிச்

செய்ய புகழுடைச் செந்தூர்க்
குமரன் திருவருள்பெற்(று)
உய்யவல் லாருள் ஒருவன் என்று
யானும் ஒளிர்வதென்றே. 41

தேளின் தகவுடை யார்க்கெமன்
போலும் திருச்செந்திலான்
தோளின் புடையக லவென்றி
வேலைத் தொழினும்அவன்
தாளின் பிரியமொன் றேயுள்ள
வீரன் தடம்கரத்து
வாளின் பெருமைஎண் ணுக்கவு
மாரர்தம் மாற்றற்பமே. 42

ஓடும் பொருளும் சமமாகப்
பார்க்கும் உணர்வினரும்
நாடும் பெருமைத் திருச்செந்தில்
வேலனை நம்பியவற்
பாடும் புலவர்சொற் பங்கேற்கும்
வீரன்கை பற்றியவாள்
ஆடும் கலாப மயிற்கழுத்
தேயொத் தவிர்கின்றதே. 43

அல்லும் பகலும்இல் லாஅரு
பூதி யருள்செந்திலான்
சொல்லும்சொற் றன்றெழி லாப்பெறும்
வீரன்கை தொட்டவைவாள்
புல்லுண் பவற்றை இரையா
மெனக்கொள்ளும் பூரியரைக்
கொல்லும் பெருமைத் திருஞான
வேழத்தின் கொம்பொத்ததே. 44

பொன்னேங்க லான்மன நாடக்
கருப்பம் பொருந்துநருள்
மின்னே எனும்இடை மூத்தாள்தன்
சேய்பற்றும் வெற்றிவைவாள்
முன்னேன்கைக் கோடொன் றணிந்தாங்கு
செந்தில் முருகனது
பின்னேனும் கொண்டனன் கொல்லோஎன்
ரேதப் பிறங்கியதே. 45

கேள்வர்தம் சென்னியில் உற்ருளிற்
பார்வைக் கிருபைபெற்ற
காஎவனக் கண்ணியர் பொல்லார்என்
றம்பிகை காணவந்த
தோள்வலிச் செல்வரின் முன்னேன்
வலக்கரந் தொட்டகொற்ற
வாள்வலம் தேக்குசெந் தூர்ப்புகழ்
போன்று வயங்கியதே. 46

தெவ்வடர் வேலுடைச் செந்தூரன்
சொற்படி தேவரெல்லாம்
அவ்வவர் தங்கள் வசமாறத்
தாக்கும் அயம்கொணர்ந்தோன்
மௌவலந் தோட்கிசை வாம்வென்றி
வாளை வழுத்தியபின்
எவ்வகைத் துன்பம்அஞ் சாதெதிர்
தோன்றும் இனிஎனக்கே. 47

ஆளிருக் கின்பொருள் தேரானைக்
குட்டும் அடற்செந்திலான்
தாளிருக் கும்சிந்தை கொண்டவல்
வீரன் தடங்கரத்து

வாளிருக் கின்ற மனத்தாரைக்
கூற்றுவன் வந்தணுகான்
தோளிருக் குங்கறைச் சூல்
மிழக்கும் துண்ணிவின்றியே. 48

கணியுரு வாகிப் புனத்துநின்
றோன்செந்தில் காத்தருளும்
மணிநெடுங் குன்றன்ன வல்வீரன்
செங்கையின் வாளை நம்பிப்
பிணியொருங் கற்றுப் பிறப்பற்றோன்
ஞர்தம் பிணக்கமற்றுப்
பணிலமொப் பாங்களத் தார்மையல்
அற்றவர் பற்பலரே. 49

அருங்காதல் நோய்தவிர்த் தாளும்
குமரன் அவிர்ந்தசெந்தூர்ப்
பெருங்காவல் காக்கும் முதல்வீரன்
கையிற் பிடித்தவைவாள்
கருங்காளி சூலத்து மேலாகு
மென்னக் கருதுங்கொலோ
வருங்காமன் மென்கரும் பாலே
தொடுக்கும் மலர்களையே. 50

போற்றுநர்க் கின்பம் ஒருங்கீந்
தருளும் புகழ்ச்செந்திலான்
சாற்றும்அவ் வண்ணம் செயும்வீர
வாகு தடம்கரத்திற்
தோற்றுமொள் வாளை யறியாய்கொ
லோவெனச் சொல்லிடினும்
கூற்றுவன் அஞ்சுவன் என்றோர்ந்தி
டாதவர் கூர்ப்பிலரே. 51

மஞ்சுண்ட மேனித் திருமால்
அனைய வயவர்மெச்ச
நஞ்சுண்ட வாய்கொண்டு விண்ணோரைக்
காத்(து) அதள் நத்துதலாற்
கொஞ்சுண்ட வாய்க்கிளிச் சீர்ச்செந்தி
லான் தம்பி கொற்றவைவாள்
பிஞ்சுண்ட தண்மதிச் சென்னியன்
போலப் பிறங்கியதே. 52

நல்லார் அனைவரை யுந்துயிற்
காத்து நவைபுரியும்
பொல்லாரைக் காய்தலி னால்ஆழி
அங்கைப் பொருத்தத்தினால்
வல்லாண்மைச் செந்தில் நகர்வீர
வாகுவின் வாட்படைதான்
அல்லாரும் மேனித் திருமால்என்
றேத அவிர்கின்றதே. 53

பொன்போலும் மேனியி னாற்கலை
வாணிசொற் பூண்பதனால்
வன்போங்கு நான்முகத் தாற்செந்தில்
மாநகர் வாழ்குகவேள்
முன்போவற் றுற்றிட லால்வீர
வாகு முனைக்கதிர்வாள்
மன்போ துளானெனச் சொல்வார்கள்
சொல்ல வயங்குற்றதே. 54

52 அதளநத்துதலால் இறைவனுக்குத் தோலாடையும், வாளுக்குத் தோற்பை உறையும்.

54, முன்புலவற்று உற்றிடலால் - எனப்பிரிக்க.

இமையார்க்கொ ராதர மாகலி
ஞற்பல் இகலவுணர்
தமைநாசஞ் செய்தலி ஞலோர்
சிகரியைத் தள்ளுதலால்
உமைஈன்ற சேய்திருச் செந்தூரில்
வீரன் ஒருவன்கைவாள்
அமையார்ந்த தோட்சசி கேள்வன்ஒப்
பாகும்என் பாருமுண்டே. 55

கவிவாணர்க் கோர்தலை யாய்அரு
ஞபுரிக் கண்உதித்தோன்
அவிரோத ஞானச் சுடர்வடி
வாள்என் றறைந்தபடை
செவியா றிரண்டுடைச் செந்தூர்க்
குமரனைச் சேவைசெய்(து)உற்
பவியா வரம்பெறும் ஓர்வீரன்
திண்கரம் பற்றியதே. 56

குல்லையந் தார்புனை செந்தூரன்
சொல்லெனக் கூறியதை
நெல்லையில் வந்தென் னுடனேதும்
வீரன் நெடியகைவாள்
இல்லைஎன் றூர்தொறும் சென்றேற்
றினைக்கும் எனதுமிடித்
தொல்லைமுட் காட்டை யடியோடு
வெட்டித் துணிக்கில்நன் றே. 57

எத்தனை யோதரம் வந்துபல்
வார்த்தை இயம்பிஎன்னைப்
பித்தன்என் றூர்சொலச் செய்தசெந்
தூரன் பிரசமலர்

ஒத்தபொற் ருள்தொழு ஓர்வீரன்
கையில் ஒளிர்கின்றவாள்
இத்தனை நாளும் இரங்கா
திருப்ப(து) இயல்பல்லவே. 58

ஆயிரம் போதுசெந் தூரான்வந்
தென்னுள் ளருணகிரி
நீயின்ன காரணத் தால்உதித்
தாய்என்றும் நெஞ்சமஞ்சி
வேயிணைத் தோளியர் மாலுழந்
தேன்விறல் வீரர்பிரான்
மாயிருஞ் சீர்த்தனி வாள்ஆணை
யிம்மொழி வம்பல்லவே. 59

பன்னுகம் உண்ணும் மயிலூர்செந்
தூரன் பதக்கமலம்
உன்னு மகிழும் ஒருவீரன்
தன்கரத் துற்றவைவாள்
முன்னுகிச் சற்றும்நெஞ் சஞ்சாமல்
யார்பொய் மொழிசிறிது
சொன்னலும் அக்கணத் தன்னேர்புன்
நாவைத் துணித்திடுமே. 60

எப்படிப் பாடல் வருமோஅவ்
வாறிங் கெழுதுமென்னை
இப்படி வாட விடலாகு
மோதுவர் என்றிலங்கும்
மெய்ப்படி வக்குகன் செந்தூரைக்
காக்கின்ற வீரர்பிரான்
அப்படிச் சொற்றில னேஅவன்
வாட்படை யாம்தெய்வமே. 61

மழைக்கா ரிருட்டுவந் துற்ருலும்
கானக மந்தி,கொம்பு
பிழைப்பாகப் பாய்க்குவ துண்டுகொல்
லோமணி பெய்தபைம்பொற்
குழைக்காதொர் ஆறிரண் டுள்ளபி
ரான்செந்திற் கோயின்முற்காப்பு
இழைப்பான்கை வாட்படை யென்ருெரு
பேர்கொள்ளும் எம்முறவே. 62

அன்றேயென் ஆகம் முதலாகும்
மூன்றும் அணிச்செந்திலாற்(கு)
என்றே கொடுத்துவிட் டேன்அல்ல
வோஇன்னம் ஏனிரங்கி
ஒன்றேனும் நல்கில ஞேஅறி
யேன்அவ னூர்புரந்து
நின்றேதந் திரு முதல்வீரன்
வாளென்னும் நீள்படையே. 63

பொய்க்கற் பனைப்பொருள் தேடிப்
புலர்ந்து பொறுக்கிமிக்க்
கைக்கக் கவிபகர் வாரென்ன
நானும் கலங்கல்நன்ருே
மெய்க்கற் பகம்பொரும் செந்தூர்ப்
பிரான்துணை வீரன்கையில்
வைக்கப் பிறங்கிய வாளே!வெங்
காலனை மாய்ப்பதுவே. 64

கானகத் தேனலில் ஓர்குறப்
பேதையைக் கண்டுதொழப்
போனசெந் தூரன் அடியார்
குழாத்துட் புகப்பெற்றிலா

நானவின் றிட்டசொற் சூடாய்கொ
லோஅன்றி நத்துவையோ
வானவர் போற்றும் விறல்வீர
வாகுகை வாட்படையே. 65

காயும் கனியும் நறுந்தேனும்
பாலும் கழிவென்றெண்ணி
நாயும் நரியும் புசிப்பவை
வேண்டும் நரருக்கஞ்சி
மாயும் கொடுமையைத் தீர்ப்பதென்
றேசெந்தில் வாழ்குகன்பாற்
தோயும்மெய்ப் பத்தி பெறும்வீரன்
வாட்படை தொட்டகையே. 66

கஞ்ச மலர்த்தட நீரால்
உயரும் கவின்செந்திலான்
செஞ்சரண் போற்றும் திறல்வீர
வாகு திருக்கரத்தில்
வஞ்சருக் கோரெம ஞமென
வாழ்கின்ற வாளொளிஎன்
நெஞ்சகத் திற்றினம் வந்துவந்
தேகுதல் நிச்சயமே. 67

வளத்துயர் செந்திற் பதியாளும்
சண்முக வள்ளலன்பாங்
குளத்திடை மூள்கிக் களிகூரும்
வீரன்கைக் கொற்றவைவாள்
சளத்திடைப் பட்டுத் தவிக்கின்ற
மூடத் தகையுடையார்
கிளத்துபல் கோடி கொடும்பேய்கள்
நெஞ்சைக் கிழிப்பதுவே. 68

வேயென்ன நூல்சொலும் மென்தோள்
மின்னார்தம் விருப்பமிஞ்சிச்
சீயென்னும் சொற்கிலக் காயலை
யாமல் தினந்தினமும்
சேயென்ன வாழ்திருச் செந்தூரன்
சந்நிதிச் சேவகர்கோன்
தாயென்ன வாள்கொண்டு காத்துநிற்
பான்எந் தமர்களையே. 69

பூவல யஞ்சுற்றும் வாரிதி
யுண்ட பொதியைமுனி
ஏவல்செய் வானெனச் சொல்வீர
வாகு எடுத்தகைவாள்
சேவலங் கேதனச் செந்தூர்ப்
பெருமையைச் செப்புகிலாப்
பாவலர் தந்துயர் தீராது
காண்நன்கு பார்த்துய்மினே. 70

வல்லோ எனுமுலை யார்மயற்
கோட்டி வளர்ந்துசுற்றும்
கல்லோ டுறழும் மனமுடை
யீர்செந்திற் காவலன்முன்
எல்லோரும் கெஞ்சி வழிகேட்க
நிற்பவன் ஏந்துமொரு
வில்லோங்கும் வாளினைப் போற்றுணை
வேறில்லை மேதினிக்கே. 71

பரந்தான்இவ் வாறுருக் கொண்டதென்
றும்பர் பரவநின்று
வரந்தாழ்வில் செந்திற் பதியான்பெம்
மான்மணி வாயில்வலம்

கரந்தாங்கும் வாளொடு வாழ்வீர
வாகு கழல்சுமக்கும்
சிரந்தான் எவர்க்குள தோஎன்று
நெஞ்சகம் தேம்பியதே. 72

விண்கொண்ட தேவர் துயர்தீர்த்
தருளும் வியன்செந்திலான்
தண்கொண்ட தாமரைத் தாள்சிரம்
தாங்கத் தடங்கரத்தில்
வண்கொண்ட வாளொன்று தாங்கிய
வீரன்றன் வான்கருணைக்
கண்கொண்ட பார்வையைக் கண்டேன்என்
நெஞ்சம் களிப்புற்றதே. 73

செங்கம லாதனத் தாளக
லாத்திருச் செந்தில்எந்தை
தங்கணிக் கோயில் முகப்பூடு
வாட்கை தழைக்கநின்றோன்
எங்கணுற் றிங்குவந் தான்கொல்என்
றெண்ணல்மின் எண்ணில்பல
சிங்கமஞ் சப்பொருஞ் சிம்புள்அன்
றீந்தருள் சிற்றையனே. 74

எண்ணங்கள் எத்தனை யோஎண்ணி
எண்ணி இடைதருமிவ்
வண்ணம்செய் தான்திருச் செந்தூரன்
அன்னவன் வாயில்வலம்
கண்ணன் பராவும் கதிர்வாள்கொண்
டுற்றமற் காளையும்நான்
நண்ணன்பு கண்டில னேயெந்த
வாறினி நான்உய்வதே. 75

அவ்வண்ணம் வாழ்வதுய நண்ணிச்செந்
தூரனுக் காட்படும்நான்
இவ்வண்ணம் வாடுதல் கண்டிலை
யோஇன்னம் இப்புவியில்
எவ்வண்ணப் பேறுள தோஅறி
யேன்மணி யிட்டழைத்த
செவ்வண்ணக் கோயிலில்முன்
வாளேந்தி நிற்கின்ற சிற்றப்பனே. 76

வெள்ளிய மால்கரி விண்ணோ
டெடுத்த வியன்திருவும்
வள்ளியுந் தோய்தரு செந்தூரன்
சந்நிதி வாயில்வலத்(து)
உள்ளிய தொண்டர் வினையாவும்
தீர்க்கும் ஒருவயவற்(கு)
ஒள்ளிய வாட்படை வேறுயி
னுந்தன் உறுப்பொத்ததே. 77

கோளிற் சிறந்தது செங்கதிர்
ஆயிரம் கொண்டது பொற்
றுளிற் சிறந்தது செந்தூர்க்
குருபரன் தன்னது, நன்
நாளிற் சிறந்த(து) அருளாண்மைப்
பேற்றினை நல்குவது
வாளிற் சிறந்தது வல்வீர
வாகுகை வாய்ந்ததுவே. 78

ஐயப் படாதவர்க் கெல்லா
நலமும் அளிக்கும்பிரான்
வையப் படாப்புகழ்ச் செந்தூரன்
சந்நிதி மாட்டொருவர்

செய்யப் படாவடி வாளேந்தி
நிற்பதொர் சேவகன்உண்(டு)
உய்யப் படாவினை யோரவன்
ஆண்மை உணர்கிலரே. 79

சூளொன்று நெஞ்சுடைத் தொண்டரை
யாளும் துணைக்கமலத்
தாளொன்று வேற்பெரு மான்திருச்
செந்திலின் சந்நிதியில்
தோளொன்று காவற் றெழில்வீரன்
தன்னொடு தோன்றியகூர்
வாளொன்று றிருக்கவும் தண்டுவில்
லாதியும் வைத்ததென்னே. 80

அங்கார கன்முத லோர்தொழும்
சூரனை அன்றயிலாற்
சங்காரம் செய்தசெந் தூர்ப்பெரு
மான்திருச் சந்நிதியிற்
கொங்காரச் செஞ்சடை கொள்வீர
பத்திரன் கோதைஒஞ்சும்
சிங்கார வாள்கொடு நின்றேன்ஒப்
பின்றிய சேவகனே. 81

முத்திரை யுந்தண்டும் வேலும்கொண்
டன்பர்தம் முற்குருவாய்
எத்திர மும்தரு செந்தூரன்
கோயில் எழில்முகப்பிற்
பத்திரை சூலம் பறிபோக்கத்
தாக்கிய பான்மைதிகழ்
சித்திர வாட்கொடு நின்றவன்
றானும் சிவக்கொழுந்தே 82

அலைப்பே ரிகைமுழங் குஞ்செந்தில்
வேலன் அருமைமுன்பின்
நிலைப்பேர்ச்சி யின்றியொ ரேவண்ண
மாய்என்றும் நிற்பவன்வாள்
கலைப்பேதை கேள்வன் மகன்பேரன்
செஞ்சிலைக் கையை வெட்டி
மலைப்பேதும இன்றிவிண் ணூர்வாழ
வைத்திட்ட வண்மையதே. 83

நாற்றம் பொலியும் நறைக்கடம்
பார்ந்தமுந் நாற்புயத்தின்
மேற்றங்கு பைங்கிளி ஒன்றுடைச்
செந்தில் விகிர்தனையே
போற்றன்பர் ஏவல் புரிவீர
வாகு புனைந்தகைவாள்
ஏற்றமென் றோர்ந்திலர் ஆரோ
அவருற(வு) இன்றெமக்கே. 84

கயிலைப் பரமனைப் போல்நீல
கண்டம் கவினவரும்
மயிலைப் பரியெனக் கொண்டசெந்
தூரன் மலர்ப்பதத்தை
அயிலைப் பரவும் அடல்வீர
வாகு அணைந்தகைவாள்
வெயிலைத் தருங்கதி ரோன்பகை
மாய விலக்கியதே. 85

வண்டவிர் கூந்தல் உமையாள்
பயந்த மதலை,செந்தூர்த்
தொண்டரின் முன்ன வனும்வீர
வாகுகை தொட்டவைவாட்

கண்ட வுடனும்பர் ஆதியர்
நெஞ்சம் களிப்பதுபோற்
குண்டகழ்த் தானவர் உள்ளகத்
தேபறை கொட்டிடுமே. 86

தேனுண்ணும் நீப மலர்ச்சோலை
சூழும் திருச்செந்திலான்
வானுண்ணும் நல்லமு தம்போலும்
செந்தமிழ் வாய்ந்ததிண்டோட்
கோனுண்மை ஞானம் பெறும்வீரன்
வாட்படைக் கொற்றம்சொன்னால்
ஊனுண்ணும் பேய்கட்(கு) உதடோ(டு)
உதடுலர்ந்(து) ஒட்டிடுமே. 87

சீதக் கமலத் தடஞ்சூழ்செந்
தூரன் சிலம்பணிபொற்
பாதப் பெருமைநன் கோர்ந்தவ
னை படைத்தலைவன்
கோதற்ற வாள்புனை திண்டோளை
நாடிக்கை கூப்புமவர்
ஏதக் கடற்சுழி யுள்அமி
ழாருண்மை இம்மொழியே. 88

கொல்லும் கொடுந்தொழிற் செய்யாத
மெய்த்தொண்டர் கூடிமகிழ்ந்(து)
அல்லும் பகலும் தொழுஞ்செந்தி
லாதிபன் ஆரணங்கள்
சொல்லும் புகழ்க்குக வேள்சந்நி
தானத்திற் றுங்கவைவாள்
புல்லும் புயத்தொடு நின்றான்அன்
றோர்சொற் புகன்றதுண்டே. 89

பன்னகக் கோவும் பதுங்கநின்
ருடிய பச்சைமயில்
மன்னவன் செந்திற் றிருக்கோயிற்
சந்நிதி வாயிலிலோர்
மின்னவிர் வாள்கொடு நிற்கின்ற
வீரன் விருப்பமுற்றுச்
சொன்னசொல் மெய்யென்று நம்பாதென்
நெஞ்சம் துயர்பட்டதே. 90

கானாறு சூழ்புனத் தோர்குறப்
பேதையைக் கண்டுமகிழ்
கோனாளும் செந்திற் றிருக்கோயில்
வாயிலிற் கோரமிகும்
ஊனாறும் வாள்எடுத் துற்ற
மகாரதன் ஓர்கனவில்
தானாக வந்தொரு சொற்பகர்ந்
தானிது சத்தியமே. 91

நாரணன் போற்றிய செந்தூர்
குருபர நாதனருள்
பூரண மாகப் பெறும்வீர
வாகு புனைந்தகைவாள்
ஆரணன் பேரர் அடற்றானை
நீத்தம் அழித்(து)அவரைக்
கூரண வும்கதிர் வேற்பசி
தீரக் கொடுத்ததுவே. 92

கொல்லா விரதக் கவுமாரர்
நெஞ்சம் கொதிக்கஇகழ்
பொல்லார் பலர்க்கோர் எமனாகும்
என்னப் பொலிகுவது

செல்லாரும் சோலைத் திருச்செந்தி
லானருட் சீர்குலவும்
வல்லாண்மை வீரன் வலக்கரத்
தேந்திய வாளதுவே. 93

கங்காளந் தோளிடு வார்மைந்தன்
செந்திற் கடவுளருள்
இங்காள வேண்டு மெனுந்துணி
வார்ந்தவர் யாவருக்கும்
செங்காளக் குஞ்சித் தலைப்பூத
சேனைத் திறற்றலைவன்
வெங்காள கூட விடந்தோய்ந்த
வாள்நலம் வேண்டுவதே. 94

மாளுறப் பின்னும் பிறக்க அஞ்
சாதவர் வாஞ்சைகொள்ளாத்
தாளுற வென்றனைக் கன்றே
வலிதினிற் றந்தசெந்தூர்
வேளுற விற்பெரி யோனெனும்
வீரன்கை மேவியகூர்
வாளுற வொன்றிருந் தால்து
போதுமென் மட்டுக்குமே. 95

மேனைமின் னுள்மகள் வேலாகிச்
செந்திலின் மேவுமெழிற்
கோனையுற் றுள்த னற்சத்தி
வேலெனல் கூடுமவன்
தானையின் முன்னவ னும்வீரன்
வாளையும் சத்தியென
வானைமுன் வென்ற கிளிநேர்வல்
லோர்பலர் வாழ்த்தினரே. 96

செங்கம லாதனை வெண்கம
லாதனை தேவர்பிரான்
பங்கம ருஞ்சசி யாதியர்
தம்நுதல் பற்பலவும்
எங்கள்செந் தூர்முரு கோன்திருக்
கோயில்முன் என்றும்நிற்கும்
சிங்கமொப் பான்திண்கை வாட்கண்டு
நாணுறும் செவ்வியவே. 97

போனக மென்னப் புவியேழ்உண்
டோன்,அவன் புத்திரன்,பொன்
வானக ராள்பவன் ஆதியர்
நாணும் வளம்படைத்த
தானவன் முன்புசெந் தூரைவிட்
டேகித் தனித்திருந்தும்
ஈனமொன் றின்றிவந் தோன்சத்தி
வாளுக் கிணையதுவே. 98

கந்தனைச் செந்தில் நகராளும்
கோவைக் கருதிநித்தம்
வந்தனை செய்பவர் ஏவல்செய்
வீரன் வலப்புயமாம்
மந்தரத் திற்பிழை நேர்வெற்றி
வாளின் மறதியற்ற
சிந்தனை யுள்ளவர் தாள்மலர்த்
தூள்கள்என் சென்னியவே. 99

இலக்கமொ டெண்மர்க்கு மூப்பாகிச்
செந்தில் இறைவனருள்
துலக்கமெய் தப்பெறும் வீரன்கை
வாளினிற் றேய்சுடரே!

அலக்கணுற் றேனலைந் தேன்அலுத்
தேன்அறி வாயனைத்தும்
கலக்க முறாதெனை எந்நாளும்
காக்கும் கடனுனக்கே. 100

## நூற்பயன்

வேளலங் காட்டும் மடவார்க்கொல்
கார்செந்தில் வித்தகன்பொற்
றாளலங் கானந்தப் பேறுகொள்
வார்வினைச் சாகரத்தின்
மாளலங் காண்மின்என் பார்முதல்
வீரன் வலக்கரத்து
வாளலங் காரக் கவிநூறுங்
கற்றிட வல்லவரே.

முற்றிற்று

**வேலும் மயிலுந்துணை.**

வேள்அலம் – மன்மதனுலமையும் சஞ்சலம்.
தாள்அலங்கு – திருவடியின் ஞானஒளி,
மாளலம் – மாயமாட்டோம் [சிறப்படைவோம்].

உ

முருகக் கடவுள் துணை

# 13-வது வீரவாகுமூர்த்தி - வண்ணப்பதிகம்

## காப்பு - வெண்பா

**விண்ணைப் புரந்தசெந்தூர் வீரவா குக்கினியே**
**வண்ணப் பதிகம் வகுக்கவே — தண்ணங்**
**கமலமுக வல்லவையாள் காவலனும் கைவேல்**
**விமலனுங்காப் பாவாரமெய் மெய்.**

## நூல்

பதினாறு சீர் வண்ண விருத்தங்கள்

**தனனதன தனனதன தனனதன தனனதன**
**தனனதன தனனதன தனதான தானனு.**

*அருள்பெருகு மனமுடைய பெரியவரை யிகழ்கொடியர்*
*அகிலமகள் அழுதுழல மலியாமல் ஈகைதான்*
*அணுவிலணு வளவும்ஒரு பொழுது(ம்)முயல் வறுகயவர்*
*அளகையதி பனையனைய திருமேவி டாமல்மா.*
*குருவலது பரமும்அயல் உளதெனவு மருள்சிதடர்*
*குறைவில்நிறை வடைபவரில் மிளிராமல் வாள்கொடோர்*
*குருதிமுழு கியசயிலம் வரலெனஎன் வழியினெதிர்*
*குறுகியள வறுமகிழ்வொ டினிதாளும் நாள்எதோ.*
*முருகுவிரி தருதுணரின் அளியினிசை பயில்பொழிலின்*
*முகிலும்மயி லினமுமகிழ் அலைவாயில் வாழும்வேல்*
*முருகசர வணகுமரன் வரைகமழும் இருசரண*
*முதன்மையுறு கதியெனுமெய் அடியார்பின் ஏகுவாய்.*
*தருணமர கதமயிலை யனையஉமை அரவம்உமிழ்*
*தருமணியின் மகளிர்பெற வருவாரின் மேலவா*
*தகுவர்குல அரசரணி திலகமனை யவன்உதவு*
*தனையனுயிர் கவர்புகழ்கொள் விறல்வீர வாகுவே.* 1

தானதன தானதன தானதன தானதன
தானதன தானதன தானான தானான

கோடிமலை தோறும்வெகு வானகவு மாரரொடு
கூடிவிளை யாடிமகிழ் கூர்நாள்வ ராததோ
கோலனைய நீலவிழி மாதர்புடை யூடுவரு
கோலமதன் ஏவுமலர் மால்மாறி டாததோ.
வாடியடி யேனறிவி லாதமுழு மூடர்மனை
வாசல்களில் ஏகுதலை நீதேர்கி லாய்கொலோ
மாசுதவிர் பாணன்மகள் வாழஒரு தூதுசெலும்
வார்கழல்எ னாதுசிர மீதேறொ ணாததோ.
ஆடியக லாபமயில் ஏறும்அலை வாய்முருகன்
ஆறிருபு யாசலம தோடோதும் வீறுளாய்
ஆரணமும் ஆகமும் ஓதும்அநு பூதியுண
ராதவர்கள் நாடரிய சீர்மேவு மேனியாய்.
ஈடில்பெரி யோர்பலர்ப ராவுகுறு மாமுனியும்
ஈரமொடு நாடுமியல்(பு) ஓவாத சேவகா
ஏனையிடை ஆதவன்அ, நாள்கதறு மாறுசெயும்
ஈனனுடல் ஈரும்வடி வாள்வீர வாகுவே 2

தத்ததன தத்ததன தத்ததன தத்ததன
தந்ததன தத்ததன தானான தானான

அத்தினமென் நிட்டையினில் அப்படிவ ரத்தகும்உன்
அற்புதம்நி னைத்துமிவண் ஆய்வாக லாகுமோ
அக்கமொடு மிக்கதவ ளப்பொடிகொள் உத்தமரை
அத்தியொடி றைச்சிநுகர் வார்ஏசல் நீதமோ.
பத்தியைமு ழுப்பிழையெ னப்பகர்தி ருட்டறிஞர்
பக்குவமு திர்ச்சியினர் போல்வாழ்கை ஞாயமோ
பச்சைமயி லிற்கதிர யிற்படைகொ டுற்றகுரு
பட்சமொடு ரைத்தமொழி வீணாகு மோசொலாய்.
தித்திமியெ னச்சபையி னிற்சிவைமுன் நட்டமிடு
சித்தருவ கைக்கருணை யால்ஆன பாலகா

தெற்கில்எம னுக்கும்வசம் அற்றிடவு றுக்(கு)அவுணர்
திக்கெனவெ ருக்கொளஅ நாள்போன சேவகா
துத்தியர விற்றுயிலும் அச்சுதன்வி ருப்பமொடு
துத்தியம்உ ரைக்கவல பேராண்மை யாளனே
சுட்டுதலொ ழித்தபர தத்துவவி ளக்கமுணர்
சுத்தரும தித்தபுகழ் தோய்வீர வாகுவே. 3

தந்ததன தந்ததன தந்ததன தந்ததன
தந்ததன தந்ததன தனதான தானறு

வஞ்சமன மங்கையர்த ருஞ்சுகம்வி ரும்பியுனை
வந்தனைசெ யும்பெருமை குறைவாகி வாடினேன்
வண்சுவைபொ லிந்ததமி ழின்பம்அறி யுந்தகையில்
வண்டர்கள்இ ருந்தமனை களிலேகி மாழ்கினேன்
மஞ்சவிர்பெ ரும்பொழில்வ ளைந்திலகு செந்தில்நகர்
வந்தகும ரன்றன்அடி யவரோடு கூடிலேன்
மங்கையமர் பங்கனெடு கும்பன்உண ரும்பொருவில்
மந்திரமு ணர்ந்துகதி பெறுமாற வாவினேன்
எஞ்சலறு செங்கதிம லிந்ததப னன்கொல்இவன்
என்றஇயல் புந்தகையும் இசைவான சீலனே
இந்திரனு டன்பகரும் அண்டர்பல ரும்பழுதில்
இன்பமயி லும்படிசெய் சமர்தோயும் வாள்உளாய்
கஞ்சனல ரும்படிமு னிந்தகைத ரும்பகழி
கண்டுவகை யங்கடலின் அமிழ்வான மேலவா
கங்கணமெ னும்படிபு யங்கமணி யும்பரமர்
கண்குளிர வந்துகுல வியவீர வாகுவே. 4

தாத்ததன தாத்ததன தாத்ததன தாத்ததன
தாத்ததன தாத்ததன தனதான தானறு

ஆக்கமறு சேட்டைமுத லாப்பகர்பல் பேய்க்கடிமை
யாய்த்திரியு மூர்க்கர்களும் இகழ்திமை மேவினேன்
ஆற்றல்மிகு பாக்கள்கொடு போற்றுவகை மேற்கொள்வினை

யாட்டெனுமெய் வாழ்க்கையினும் அதியாசை ஆகினேன்
ஏக்கமிகை யாற்கயவர் பாற்றருளும் வார்த்தைசொலி
ஏற்றுமருள் கேட்டினையும் நலமாக நாடினேன்
ஏட்டிலெழு தாக்கிளவி யாற்பகரொ ணும்பொருள்சொல்
ஈட்டின்அலை வாய்க்குமரன் இருதாள்கள் சேர்வதென்று
பாக்களவு காட்டுமுலை யார்க்குருகி டாப்புனிதர்
பாற்றினம்நி லாய்ப்பிறையென் விதிர்வாள்கொ
டேகுவாய்
பார்ப்பதிமி ணுட்கும்அறு கார்த்திகைமி ஞர்க்கு(ம்)மிகு
பாத்தியம தாப்புனலில் வருசேய்ச காயனே
நீக்கமறு பேய்த்திரள்கள் ஏத்தவல்இ ராக்கதர்கள்
நீத்தமற மாய்த்தபுகழ் செறிவாகை சூடிணுய்
நீற்றைமதி யாப்புலவர் பாழ்த்தநெறி மேற்கறுவும்
நேர்த்தியுடை யார்க்குதவி செயும்வீர வாகுவே. 5

தாந்ததன தாந்ததன தாந்ததன தாந்ததன
தாந்ததன தாந்தனன தானன தானன

காந்தள்மலர் போன்றகர மான்கள்மய லாம்பொயிடை
காய்ந்தகதிர் நேர்ந்தபுழு வாய்வாட லாகுமோ
காம்புவனம் ஆண்டபெரு மான்புணரும் மாண்புதிகழ்
காந்திமதி யீந்தவரம் வீணாயு மாயுமோ
நீந்தரிய தாந்துயரில் ஆய்ந்தடிமை வேண்டுமனம்
நேர்ந்துகுகன் ஆண்டுகொளல் நீகாணு ருதநோ
நீண்டவனில், ஈண்டும்விடம் ஆர்ந்தவனில் ஆண்டும்இருள்
நீங்கியுறை பாங்கடைவ தாஓதி லாய்கொலோ
சாந்தமிகை தோய்ந்தகுண மாந்தர்பலர் ஏங்கஎதிர்
தாங்கரிய தாஞ்சினமொ(டு) ஓராடு நேரும்நாள்
சாந்துயரில் ஆழ்ந்திடுமுன் ஆன்றஅயி லோன்கடிது
தாண்டியிவர் வான்கொணரும் மாமீளி யானவா
பாந்தள்நிகர் தீங்கர்பலர் வாழ்ந்துளம யேந்திரமல்
பாய்ந்திடலின் மாய்ந்திடமு ஞள்ஏகு ஆண்மையாய்
பாண்டியெனும் ஈர்ம்புவியல் ஆண்டலைகு லாங்கொடிகொள்
பாங்கருடன் ஓங்கும்அலை வாய்வீர வாகுவே 6

தன்னதன தன்னதன தன்னதன தன்னதன
தன்னதன தன்னதன தனதான தானு

அன்னமிவர் பொன்மைவிதி மைம்முகிலே அன்னஅரி
ஐம்முகவன் என்னுமிவர் தொழில்மேவி டாமல்வாள்
அண்ணும்நுதல் கொண்மகளிர் தம்மிடையில் மன்மதனென்
அன்மகிபன் வெம்மலர்கள் பொழியாமல், ஈகையோர்
சின்னஅணு என்னவுமில் புன்மையர்சொல் வன்மைபெறு
தென்னனது கைம்மருவு படைநாடி டாமல்,ஓர்
செம்மைதிகழ் மஞ்ஞைமுது கின்மிசைநின் அண்ணன்,எபர்
செம்மல்,இரு கண்ணினெதிர் வருமாறு கூறுவாய்
பொன்னகரி விண்ணவர்கள் இன்னலறும் நன்மைதரு
புண்ணியமென் வண்மைகமழ் புதுவாகை யாளனே
புல்நுகரும் மென்மரைகள் தம்மைவதை பண்ணிஇழி
புண்ணைஉயர் அன்னமுடன் அயில்வார் தொழாதவா
கன்னல்கழை செந்நெல்மலர் புன்னைநிரை தென்னைபனை
கன்னிகமு(கு) உன்னுமெழில் அலைவாய்வி சாகனுர்
கண்ணனைய யின்னவ,ஓர் எண்மர்தொழு முன்னவ,பல்
கன்முனிவர் பன்னுகவி புனைவீர வாகுவே 7

தய்யதன தய்யதன தய்யதன தய்யதன
தய்யதன தய்யதன தய்யான தானு

அல்விரவு சைவலம் தொவ்வுகுழல் மெல்லியர்கள்
ஐயமறு பொய்யைநிதம் மெய்யாக நாடுவேன்
அள்ளியிடும் வெள்ளைநிற மல்குபொடி நல்லபொருள்
அல்லவென வைடவர்கள் சொல்லோத நாணிலேன்
வல்வினையை எள்ளலறு செல்வமென வௌவுமவர்
வைகுமிடம் உள்ளிமனம் வெள்காமல் ஏகுவேன்
வல்லைநிகர் செவ்விமுலை வள்ளியிடம் ஐயர்தரும்
வல்லிவலம் எஃகமணி செவ்வேள்முன் ஆவனே
செல்விபுணர் மையனைய சையல்அரி ஒல்கஅடர்
தெவ்வர்உடல் கொய்யும்ஒரு வைவாள்கொள் சேவகா
தில்லையிலொர் தையலெதிர் கள்ளமற வல்லதுதி

செய்யுமவர் செய்பவுரி கொள்வார்கு மாரனே
கல்வியுணர் பல்புலவர் துய்யகுண மெய்யறிஞர்
கவ்வைமொழி வெய்தமுயல் உல்லாச வாலிபா
கல்லுகடல் ஒல்லும்அலை தள்ளும்வளை வெள்ளமிவர்
கைதைமலி தொல்லைநகர் வில்வீர வாகுவே 8

தனதான தானதன தனதான தானதன
தனதான தானதன தனதான தானனு

புலையேவி டாதுபுரி கொலையாளர் தீயில்விழு
புழுவாக வாடவிடும் வலிவேணும் வாளிலாய்
புயலோவு ருமலைகள் தொறும்நாளும் ஆடல்வகை
புரிசீர்கு லாவுபத(ம்) மறவாமை வேணும், ஓர்
தலையோட தால்உணவு கொளும்ஈச னர்மதலை
தருபால னேயிவனென் இசைவேணும் நான்இதே
தியாகும் வாஎன்உரை பகர்தோறும் நீயுவகை
தழைசீல மோடெதிரில் வரவேணும் ஈகுவாய்.
கலைமாது கேள்வனது தலைமீது மோதியருள்
கரவேள்தன் வாயில்தொறும் அகலாது மேவுவாய்
கவியால்மு னுள்பரவும் ஒருபாண னர்தமகள்
களிகூர வாரியிடை உருமாறி எகினுய்
அலைவாயின் வாழ்முனி வரர்ஏவும் வேலைமுழு(து)
அயராம லேபுரியும் விளையாட லாளனே
அருளாண்மை மீறிமகிழ் நவவீர ருடுயரும்
அதிகார னேயிணையில் அடல்வீர வாகுவே. 9

தத்தான தத்ததன தத்தான தத்ததன
தத்தான தத்தன தனதான தானனு

பொய்ப்பாச முற்றியவ லப்பாடு பட்டுலவு
புட்போல்ம ருட்சிகொடு மருளாமல் வானுளார்
பொற்பாவை யைத்தினைவ னத்தாளை நத்துமுயர்
பொற்பாள னைக்கருதல் பிழையாமல் ஆழிசூழ்
இப்பாரி னிற்புறநெ றிக்காரர் வெட்கமுற

எய்க்காது சித்திபல செயுமாறு நாடினேன்
எக்காலம் அப்படிமு டித்திடில் முத்திபெறல்
இப்போது தொட்டுமுய லுறுமாறு பார்ஐயா!
தப்பாமல் எட்டுவரை யைத்தூள்ப டுத்தியதொர்
சப்பாணி கொட்டியகை புனைவேல்வி சாகவேள்
சத்தாதி முப்பொருள்எ னத்தேறும் உத்தமர்கள்
தத்தேதும் உற்றுமெலி வடையாது சூழுவாய்
துப்பாணி முத்துவளை பொற்காசு பத்தர்சிலர்
சொற்பாடல் விட்டெறியும் அலைவாய்ம காரதா
சொற்காதி பற்குதவும் விற்கார ருட்பெருமை
துற்றுய்க ணத்தொகுதி தொடர்வீர வாகுவே 10

தந்தான தந்ததன தந்தான தந்ததன
தந்தான தந்ததன தனதான தானனு

பைங்கார்எ னுங்குழல்கொள் வங்கார மங்கையர்கள்
பண்பேறி னைந்துருகும் மயல்தீர வாகைசால்
பஞ்சாயு தன்பொருவ இங்கேம கிழ்ந்துசிவை
பங்காள ரென்றுவிணில் அமர்வாழ்வு சேரநீள்
கொங்கார்க டம்புகுர வம்கூத ளம்புனலி
கொண்டேர்இ லங்கும்அயி லதுபூசை நாளுமே
குன்றாது வந்துசெய என்றேஎவி ரும்புமெமர்
கொன்றாண்உ னுங்கொடியர் எதிர்நாண லாகுமோ
அங்கார கன்றகர்வெ ருண்டோட உம்பர்தொழ
ஐம்பூத முங்குலைய முனிவோரை மோதுமா(று)
அங்கேவ ருந்தகரை வென்றீடில் எந்தையெதிர்
அங்கேவி டும்பெருமை யிதுமேவு தீரனே
சிங்கார மிஞ்சிவரு தண்சோலை சங்கம்எறி
சிந்தோதை சிங்கம்நிகர் கவிவாணர் பாடுசீர்
செங்கேழ்இ லங்கவளர் சந்தாச லங்குலவு
செந்தூர்வி ளங்கவரு திறல்வீர வாகுவே 11

தய்யான தன்னதன தய்யான தன்னதன
தய்யான தன்னதன தனதான தானன

பொய்வீடு தன்னையுயர் மெய்வீட தென்னவுணர்
பொல்லாரும் என்னையிகழ் வதுதீரும் தாளஎதோ
புள்வேடர் கன்னிகையும் வெள்ளானை தன்னருமை
புல்வாளும் என்னன்மக வெனவாழ்வ தார்கொலோ
கைவினை கொண்முனிமுன் எய்யாமல் அன்னதுசொல்
கைநீயும் என்னறிவும் அறியாத ஞாயமோ
கல்லார்த முன்னணுகி நில்லாத வண்மைதரல்
கல்லாளு(ம்) மன்அலகொல்? இவைநாலும் ஓதுவாய்
மைவிரை தன்னிலமர் செய்சூரை வென்முனைகொள்
வல்வேலை நண்ணுமவர் மிசைநீடும் ஆவலாய்
மைவாரும் இன்னலறும் நல்வாழ்வு துன்னஅருள்
மல்லார்சொல் மன்னுதமிழ் அணிவாள்கொள் சேவகா
தெய்வீக வுண்மையுணர் பல்லோர்கள் சொன்னபடி
செய்வாய்விண் மன்னர்புகழ் அலைவாயின் மேவுவாய்
செல்வீடு பன்னுகையில் வெல்சேவல் அண்ணவளர்
செவ்வேள்தன் முன்னிலகும் செயவீர வாகுவே, 12

முற்றியது

சீரமருஞ் செந்தூர்த் திருக்கோயிற் சந்நிதியின்
வீரவா குத்தலைவன் மீதுரைத்த—சாரமலி
வண்ணப் பதிகம் வழுத்துவார் எல்லோர்க்கும்
எண்ணப் படிகிடைக்கு மே

வேலுமயிலுந்துணை

---



திருச்செந்தூர் சண்முகர்